**மர்மத் தொடர்**

# அறுபது கிலோ மர்மம்

## சுப்ரஜா

### அத்தியாயம் ஒன்று

கைப்பேசி ஒலித்துக் கொண்டே இருந்தது.

புரண்டு புரண்டு படுத்தேன்.

தூக்கம் வரவில்லை.

கைப்பேசி ஒலிப்பது நின்றது.

மெல்ல எழுந்தேன்.

நான் லதா.

தங்கமீன் தனியார் தொலைக்காட்சியில் தயாரிப்பாளர் இயக்குனர்.

விடியற் காலை வரை படபிடிப்பு இருந்தது.

வந்து படுக்கவே எட்டு மணி ஆகி விட்டது.

இரண்டு மணி நேரம் தூங்கலாம் என்றால் விடமாட்டார்கள் போலிருக்கிறதே என்று எண்ணியபடியே கைப்பேசியை எடுத்துப் பார்த்தேன்.

அலுவலகத்தில் இருந்து தான் வந்திருக்கிறது.

வைத்து விட்டு எழுந்து சமையலறைக்குள் நுழைந்தேன்.

காபி மேக்கரில் பொடியை போட்டு ஸ்விட்சைப் போட்டேன்.

ஃப்ரிட்ஜில் இருந்து பாலை எடுத்து பாத்திரத்தில் ஊற்றிக் காய வைத்தப் போது அந்த ப்ரத்யேக காலர் ட்யூன் அடித்தது.

எம்.டி.

ஓடிப் போய் எடுத்தேன்.

"லதா சார்"

"மார்னிங் லதா,இப்பத்தான் சொன்னாங்க,காலையில தான் ஷூட் முடிஞ்சுதுன்னு,தொந்தரவுக்கு மன்னிக்க"

"அட என்ன சார் நீங்க தேவையில்லாம போன் பண்ண மாட்டீங்க"

"எடிட் போயிட்டு இருக்குப் பார்த்தேன்,சூப்பர்,இந்த எபிசோட்டுக்கு டி.ஆர்.பி எகிறும்,மூணு மணிக்கு ஒரு மீட்டிங் இருக்கு,புது ப்ரொக்ராம் பத்தி,எல்லா இயக்குனர்களும் புது யோசனைகளோட வரணும்,அப்ப பார்க்கலாம்"

"ஷூர் சார்"

லைனை கத்தரித்து விட்டார்.

இப்படித்தான் ஆரம்பிக்கும் மாதாந்திர எம்.டி.மீட்.

சூடு பறக்கும்.

தாறுமாறான விவாதங்கள்.

புதியதாக என்னதான் செய்வது.

ரெண்டு 'டாக் ஷோ' ஓடுது.

என்னதான் புதுசா பண்றது.

சினிமாவை அடிப்படையாக வைத்து மூணு தொடர் போகுது.

ஒரு பட்டி மன்றம் போகுது.

மண்டைக்குள் ஓணான் புகுந்தது.

மெல்ல வைத்திருந்த 'சிம்'பால் பொங்கி விட்டது.

அடுப்பை அணைத்து காபி மேக்கரில் இருந்து டிகாஷனை எடுத்து பாலில் ஊற்றி சக்கரையை டப்பாவை எடுத்து இரண்டு ஸ்பூன் போட்டு,தம்பளரில் ஊற்றி ஆற்றினேன்.

அதை எடுத்துக் கொண்டு முன் அறைக்கு வந்தேன்.

சோபாவில் உட்கார்ந்து யோசித்துக் கொண்டே காபியை குடிக்க ஆரம்பித்தேன்.

இந்த தொலைக் காட்சியில் சேர்ந்து இரண்டு வருடம் மின்னல் போல் ஓடி விட்டது.

என்னுடைய தொடர்கள் எப்பொழுதுமே தனி கவன ஈர்ப்பை பெற்றுதான் வருகிறது.

என்ன புதியதாய் யோசித்து யோசித்து மாற்றிக் கொண்டே இருக்க வேண்டும்.

ஒரு வாரமாகவே இந்த மாத மீட்டிங் பற்றி ஒரு பக்கம் யோசனை ஓடிக் கொண்டிருந்தது.

எம்.டி.சிங்கப்பூர் சென்று இருந்தார்.

வந்தவுடன் டி.ஆர்.பி கவலைப் பற்றிக் கொண்டது போல இருக்கிறது.

மதியம் சாப்பிட்டு விட்டு காரை ஸ்டார்ட் செய்து கிளம்பினேன்.

அலுவுலகம் போய் சேர்ந்த போது மணி இரண்டு.

கேபினுக்குப் போனேன்.

கணிப்பொறிக்கு உயிர் கொடுத்து மின் அஞ்சல்களைப் பார்த்தேன்.

பின் பென்சில் எடுத்து நோட் பேடில் மனதில் இருந்த ஐடியாக்களை எழுதிக் கொண்டேன்.

சென்னையின் பிரதான இடத்தில் பல அடுக்கு மாடிகளை கொண்டது எங்கள் தொலைக்காட்சி அலுவுலகம்.

கட்டை விரல் ரேகை பதித்தால் தான் உள்ளேயே வர முடியும்.

உள்ளே எல்லாம் லேட்டஸ்ட் டெக்னாலஜி.

அனைத்து அலுவலகமும் காமிராக்களால் கண்காணிக்கப் படுகிறது.

மாஸ்டர் கம்பூயூட்டர் அறையில் எல்லாம் பதிவாகிறது.

வெட்டிப் பேச்சுக்கு இடம் இல்லை.

லொள்ளு ஜொள்ளு எல்லாம் தாண்டி உடம்பின் நாடி நரம்புகளில் ஓடும் வார்த்தை டி.ஆர்.பி.

டி.ஆர்.பியை ( டெலிவிஷன் ரேட்டிங் பாயிண்ட் ) தக்க வைத்துக் கொள்ள எல்லா சேனல்களும் மண்டையை பிய்த்துக் கொள்ளும்.

மக்களுக்கு பிடித்ததை கொடுப்பது ஒரு வழி.இல்லை நாம் கொடுப்பதை மக்கள் அதிகம் விரும்புகிறார் போல் செய்வது இன்னொரு வழி.

எங்கள் பாலிசி இரண்டாவது தான்.

நாங்கள் தயாரிக்கும் தொடர்கள் எதுவாக இருந்தாலும் பார்க்க வைத்து விடுவோம்.

ஒரு முறை எங்கள் சேனலைப் பார்ப்பவர்கள் வெளியேற மாட்டார்கள்.

.'பொசுக் பொசுக்' என்று மாற்றுபவர்கள் கூட தொண்ணுறு செகண்ட் எங்கள் சேனலைப் பார்த்தால் ரிமொட்டை தூக்கி ஓரமாய் கடாசி விட்டு செட்டில் ஆகி விடுவார்கள்.

கான்பரன்ஸ் ரூம் நிறைந்து இருந்தது.

எம்.டி எங்களுக்கு முன்னாலேயே வந்து உட்கார்ந்து இருந்தார்.

மடிக்கணியில் குடைந்து கொண்டிருந்தவர் மெல்ல நிமிர்ந்தார்.

"எல்லாரும் வந்தாச்சா?"

"வந்தாச்சு"என்றான் பரத்.

அவன் தான் எம்.டி.யுடன் படித்தவன்.

சீனியர் ப்ரொடியூசர்.

மெல்ல தொண்டையை செருமிக் கொண்டு "போன வாரத்தை விட இந்த வாரம் .007 டி.ஆர்.பி இறங்கிடுச்சு,செய்திக்கு பின்னால வர தொடர் ரொம்ப வீக்,ஸ்பான்சர் பண்றவங்களுக்கு இன்ஃபார்ம் பண்ணிடேன்,ரெண்டு வார்த்துல வைண்ட் அப் பண்ண சொல்லி,அதை ரியாலிட்டு ஷோ அல்லது வேற மாதிரி ஸ்வாரஸ்யமான தொடர் மூலம் நிறப்பணும்,இன்னக்கு நம்ப மாலைக்குள்ளே முடிவுப் பண்ணி நைட் ப்ரோமோ ஏத்தனும்,என்ன பண்ணலாம் சொல்லுங்க"என்றார்.

வாசுகி ஆரம்பித்தாள்.

"அந்த தொடர் ரொம்ப ரப்பரா இருக்குன்னு போன மீட்டிங்கலேயே சொன்னேன்"என்றாள்.

இடைமறித்த எம்.டி."அது தான் முடிஞ்சு போன கதையாச்சே,இப்ப அந்த நேரம் உங்க எல்லார் கையிலயும் இருக்கு,என்ன பண்ணலாம்ன்னு சொல்லுங்க,இன் அவுஸ் ப்ரொடக்ஷன் தான்,பட்ஜெட் பற்றி யாரும் கவலைப் பட வேண்டாம்,ஜஸ்ட் திங் அண்ட டெல் மீ"என்று மடிக்கணியையே பார்க்க ஆரம்பித்தார்.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு யோசனை சொன்னார்கள்.

'அடுத்து அடுத்து'என்று சொல்லிக் கொண்டேயிருந்தார் எம்.டி.

எதிலும் திருப்தியில்லை.

மெல்ல என்னைப் பார்த்தார்.

"என்ன லதா ரொம்ப சைலண்டா இருக்கீங்க,எதாவது இருக்கா?"

நான் ஆரம்பித்தேன்.

"சார்,போன மாசமே அந்த விஷயத்தைப் பத்தி யோசிக்க ஆரம்பிச்சேன்,நிறைய தகவல்களும் சேகரிச்சு வச்சிருக்கேன்"

எல்லோரும் ஆர்வம் ஆவதும் அவர்கள் என்னைப் பார்ப்பதும் தெரிந்தது.

"விஞ்ஞானத்தை தாண்டி பல விஷயங்கள் இருக்கு,அது கடவுள் நம்பிக்கை உள்ளவங்களுக்கும்,இல்லாதவங்களுக்கும் பிடிக்கும்,ரெண்டாவது நீங்க சொல்ற நேரம் குடும்பம் முழுக்க தொலைக்காட்சி முன்னாலே உட்கார்ந்து இருக்கற நேரம்,அப்பா அம்மா பசங்க எல்லோரும் விழுந்தடிச்சுட்டு பார்க்கறா மாதிரி ஒரு சீரியல் கொடுக்கலாம்,அப்படி ஒரு விஷயம் தான் நான் யோசிச்சு வச்சுருக்கறது"

"விஞ்ஞானம்ன்னு சொல்லிட்டு நாம யார் காதுலயும் பூ சுத்தறா மாதிரி ப்ரொக்ராம் பண்ணிடவும் கூடாது"என்றார் பரத்.

"இல்லே இது பூ சுத்தற ப்ரொக்ராம் இல்லே"

"சொல்லுங்க,வாட்ஸ் இன் யுவர் மைண்ட்"என்றார் எம்.டி.

"யாராவது அஞ்சு தலை நாகம் பாத்திருக்கீங்களா?'

பரத் சிரித்தான்.

"என்ன லதா ஸ்கூல் புள்ளை மாதிரி"

எம்.டி.குறுக்கிட்டார்.

"லெட் ஹெர் ஃபினிஷ்"

நான் ஆரம்பித்தேன்.

"ஒன்றரை லட்சம் பெறுமானம் உள்ள வைரக் கல் ஒண்ணு இருக்கு,உலகம் முழுக்க உள்ள பெரும் பணக்காரர்கள் அதை தேடிட்டு இருக்காங்க,அது எங்க இருக்குன்னு அவங்க யாருக்கும் தெரியாது.பட் எனக்குத் தெரியும்,எங்க இருக்குன்னு"

"வாட்"எம்.டி.நிமிர்ந்து உட்கார்ந்தார்.

கான்ஃபரன்ஸ் ஹாலில் இருந்த அத்தனை பேரின் முகத்திலும் ஆயிரம் வாட்ஸ் பல்ப் பூத்தது.

குண்டூசியை தவற விட்டாலும் கார்பெட் ப்ளோரில் சப்தம் கேட்கும் அமைதி.

"அதைப் பத்தி யார் சிந்திச்சாலும்,முயற்சிப் பண்ணாலும் அங்கே இருள் சூழ ஆரம்பிச்சுடுது"

"அந்த வைரக் கல்லை ஒரு அஞ்சு தலை நாகம் காப்பாத்திட்டு வருது அஞ்சு தலைமுறையா?"

"என்னது அஞ்சு தலைமுறைன்னா,நூற்று அறுபது வருஷம் அந்தப் பாம்பு உயிரோட இருக்கா?"

"ஆமாம்"என்றேன்.

## அத்தியாயம் இரண்டு

'ஆமாம்'என்ற என்னை உற்றுப் பார்த்தார்.

"அம்புலிமாமா கதை மாதிரி இருக்கு"என்றார் இன்னொரு தயாரிப்பாளர் சிவஞானம்.

"லெட் ஹெர் ஃபினிஷ்"

"எங்கிட்ட ஒரு பழைய புத்தகம் இருக்கு,தைமஸ் மெக்காலேன்னு ஒரு ஆங்கில ஆராய்ச்சி எழுத்தாளர்,சீக்ரெட் டெம்பிள்ஸ் இன் இந்தியான்னு ஒரு புத்தகம் எழுதியிருக்காரு,அதுல இந்த அஞ்சுதலை நாகம் உயிரோட இருக்கற விவரத்தைப் பத்தி குறிப்பிட்டு இருக்காரு,இந்தப் புத்தகம் வெளி வந்த உடனே இந்தப் புத்தகத்தை இந்தியாவில தடை பண்ணிட்டாங்க,பல கோயில்கள்ல நிலவறையில் இருக்கற சில விவரங்களை குறிப்பிட்டு இருக்காரு,அதை குறி வச்சு கொள்ளையர்கள் இறங்கி கோயிலுக்கு பங்கம் விளைவிச்சுடக் கூடாதுன்னு தடை பண்ணிட்டாங்க,எங்கிட்ட இந்தப் புத்தகம் அஞ்சு வருஷம் முன்னாடி வந்து சேர்ந்தது,இதுல ஒரு எச்சரிக்கை செய்தி இருக்கு"

அவள் சொல்லி விட்டு கொஞ்சம் நிறுத்தியதும் எல்லோரும் முகத்தினை படு சீரியசாக வைத்துக் கொண்டு அவளையே பார்க்க ஆரம்பித்தார்கள்

"இந்த புத்தகம் எழுதின ஆசிரியர் இரண்டு வருஷம் முன்னாடி மலேசியாவில செராவக் வனப் பகுதியில் ஆராய்ச்சிக்கு போயிட்டு இருந்தப்ப பாம்பு கடிச்சு செத்துப் போனாரு"என்று சொல்லி நிறுத்தினாள்.

"அதிர்ச்சியா இருக்கே,அந்த அஞ்சுத் தலை நாகம் இருக்கறது எங்க?"

"மூனாருக்கு மேல கேரள வனப் பகுதியில இருக்கு,யாரையும் அங்கப் போக விடறதில்லை,அரசு அனுமதி கிடையாது,அம்மாவாசை நேரத்துல அங்கே நடமாட்டம் இருக்கறதா சொல்றாங்க,ஒரு வருஷம் முன்னாடி ஒரு ரஷ்ய கும்பல் உள்ளே ஊடுறவ முயற்சிப் பண்ணி பாம்பு கடிச்சு செத்துப் போயிட்டாங்க"

"அந்தக் நாகம் எங்க இருக்கு?"

"நான் சொன்ன இடத்திலேயே ஒரு கோவில் இருக்கு,அதுக்குப் பேரே சர்ப்பக் காவு,சிலர் அதை நாகக் காவுன்னு சொல்லுவாங்க,அந்த கோவில் எல்லைக்குள்ளே போனாலே எங்கப் பார்த்தாலும் பாம்புகள் தான் ஓடிட்டு இருக்கும்,பறக்கும் பாம்பு கூட அங்கே இருக்கறதா பேச்சு இருக்கு"

நான் சொல்லி நிறுத்தியதும் ஹாலில் 'சலசல' பேச்சு ஆரம்பித்தது.

சுரேஷ்,"செம காமெடியாய் இருக்கு நீங்க சொல்றது"என்றான்.

"நாம இதுல எங்க இருக்கோம்?"என்றார் எம்.டி.

"அதை கவர் பண்ணப் போறோம்,நம்ம தொடரோட ஆரம்பம் இந்த டிஸ்கஷன்ல்ல இருந்தே ஆரம்பிக்குது?"

எம்.டி.கொஞ்ச நேரம் மௌனமாய் இருந்தார்.

"ஐடியா நல்லாத் தான் இருக்கு,பட் ரிஸ்க் நிறைய இருக்கும் போல தெரியுதே"

"ரிஸ்க் இல்லாம இல்லே,அதே நேரம் ஸ்டெப் பை ஸ்டெப் இந்த சீரியல் வர வர டி.ஆர்.பி நிச்சயம் எகிறும்"

எம்.டி.மற்றவகளைப் பார்த்தார்.

"என்ன சொல்றீங்க இந்த சீரியல் பற்றி?"

"எந்த அளவுக்கு இதை நம்பறதுன்னு தெரியலை,காதுல பூ சுத்தறா மாதிரி இருக்கு"என்றான் தேவன்.

அவனும் எங்கள் தொலைக்காட்சியில் ஒரு இயக்குனன் தான்.

எம்.டி,"லதா நாம இந்த தொடரைப் பண்றோம்"என்றார்.

"அப்ப ஒண்ணு செய்யலாம்,இந்த டிஸ்கஷனை அப்படியே ஷூட் பண்ணுவோம்,இதையும் முதல்ல எபிசோட்ல்ல எடிட் பண்ணி போடுவோம்,கேமிரா வந்தா அதை ப்ரமோஷனுக்கு யூஸ் பண்ணலாம்"

"எல்லாத்தையும் ரிகார்ட் பண்ணிடலாம்ன்னு சொல்றீங்களா?"

"ஆமாம்"

"உங்க கேமிராமேன் யாரு?"

"கண்ணன்"

"எனக்கு காமிராவும் கையாளத் தெரிஞ்ச தேவன் வந்த நல்லா இருக்கும்"

எம்.டி.தேவனை பார்த்தார்.

"பாஸ் எனக்கு இன்னும் கல்யாணம் ஆகலை"சிரித்தான்.

"என்ன பயம் உங்களுக்கு?"

"அந்த அஞ்சுத் தலை நாகம் பத்தி ரிவீல் பண்ண எழுத்தாளர் மலேசியாவில போயிட்டார்,அப்புறம் அந்த ரஷ்ய காரன்,அதை யார் ஆராய்ச்சின்னு தொட்டாலும் செத்துடறாங்க"

"நானே தைரியமா போறேன்"

"தேவன் யூ வார் கோயிங் வித் ஹர்,முதல்ல கேமிராவை இங்கே கொண்டு வர சொல்வோம்,லெட் அஸ் பிகின் ஃப்ரம் ஹியர்,ஓ.கே.தானே லதா"என்று என் பக்கம் திரும்பிக் கேட்டார்.

"ஓ.கே சார்"

தேவன் எழுந்து இண்டர்காமில் கேமிராவுக்கு சொன்னான்.

"யெஸ் இங்க கான்ஃப்ரன்ஸ் ரூமுக்கு கொண்டு வாங்க"

அது வரை பேசாமல் இருந்த தயாரிப்பாளர் சுரேஷ்,"அபத்தமா இருக்கு சார்,அப்படி ஒரு நாகம் இருக்கறாத இது வரை எந்தப் பத்திரிக்கையிலும் செய்தி வந்தது இல்லே,நாம் இட்டுக் கட்டின ஃப்ரொக்ராம் மாதிரி இருக்கும்,சிரிச்சுடுவாங்க"

"கொஞ்சம் இருங்க சுரேஷ்,காமிரா வந்துடட்டும்"என்ற எம்.டி என் பக்கம் திரும்பினார்.

"காமிரா வந்ததும் நாம ஆரம்பிச்ச இடத்துல இருந்து தொடங்குவோம்,தேவன் இன்னொரு காமிரா கொண்டு வரச் சொல்லுங்க,ரெண்டு வச்சு ஷூட் பண்ணலாம் இங்கே"என்றார்.

தேவன் இன்னொரு காமிராவுக்கும் சொல்லி விட்டான்.

காமிரா வந்தது.

இரண்டு இடத்தில் வைத்தார்கள்.

கான்ஃபரன்ஸ் ஹாலில் இருந்த எல்.யீடி.வெளிச்சத்துலயே ஷூட் செய்ய தயார் ஆனோம்.

"காமிராவை ரன் பண்ணிட்டு வந்து உட்காருங்க தேவன்"என்றேன்.

தேவனும் காமிரா இரண்டையும் ரன்னிங்கில் வைத்து விட்டு வந்து உட்கார்ந்தான்.

எம்.டி.முதலில் இருந்து ஆரம்பித்தார்.

வாசுகி நடுவில் புகுந்தாள்.

முதலில் இந்த தொடர் பற்றி கருத்து தெரிவிக்காதவள் இப்பொழுது சொன்னாள்.

"எனக்கு இதுல கொஞ்சமும் நம்பிக்கை இல்லை,இது மாதிரி ஒரு கற்பனையான செய்தியை வச்சுக்கிட்டு நம்பளை நாம ஏமாத்திகறதும் இல்லாம மக்களையும் ஏமாத்துற மாதிரி இருக்கு"

எம்.டி."லதா கிட்ட நிறைய ஆதாரங்கள் இருக்கே?"என்றார்.

"நோ சார்,நீங்க எல்லாம் பேசிட்டு இருக்கும் போதே என்னோட லேப் டாப்ல்ல சேர்ச் பண்ணிப் பார்த்தேன்,அப்படி ஒரு எழுத்தாளர் இல்லேவே இல்லை"

"என்ன ஸ்பெல்லிங் போட்டீங்க வாசுகி"என்று கேட்டேன்.

"டி.எ.எம்.எ.எஸ்.எம்.ஈ.சி.சி.எ.எல்.எ.யே"

"டி.ஹெட்ச் அப்புறம் மீதி ஸ்பெல்லிங் போட்டு ட்ரை பண்ணுங்க"

"ஒன் செகண்ட்"என்ற வாசுகி தனது மடிக் கணினியை எடுத்து கான்ஃபரன்ஸ் டேபிளில் வைத்து கீ போர்டில் விரல்களை மேய விட்டாள்.

"இருக்கு"

"அவரோட பேர்ல்லயே சைட் இருக்கு,படமும் போட்டு இருக்கு"என்றாள்.

நான் புன்னகையுடன் எம்.டி.யைப் பார்த்தேன்.

எம்.டி.சொன்னார்.

"உங்களுக்கு இப்ப திருப்திதானே வாசுகி"

"திருப்தியில்லேன்னு சொல்ல முடியாது,பட் எனக்கு இது பொய்யான விஷயமா இருக்கும்ன்னு தோணுது"

"நீங்க ஏன் அப்படி சொல்றீங்க,நீங்க விரும்பினா நீங்களும் லதாவோட சேர்ந்து இந்த நிகழ்ச்சியை பண்ணலாமே"

"நோ ஐ வில் கம் வித் சம் அதர் ஐடியா?"

கான்ஃபரன்ஸ் ஹாலின் விளக்குகள் அனைந்து அனைந்து எரிந்தன.

முழுவதும் மின்சாரம் நின்று விட்டது.

எம்.டி."இண்டர்காமும் வேலை செய்யலை,வாட் ஹாப்பண்ட் டு த ஜெனரேட்டர்,ஆட்டோ ஆன் தானே?"என்றவர் தொடர்ந்து"யாராவது என்னாச்சுன்னு பாருங்க"என்றார்.

யார் எழுந்தார்கள் என்று தெரியவில்லை.

'தொபீர்'என்று யாரோ கீழே விழும் சப்தம்.

"யார் விழுந்தது பாருங்க"

நான் கைப்பேசியில் இருந்த டார்ச்சை ஆன் செய்து கான்ஃபரன்ஸ் ஹாலில் ஒளியைப் பாய்ச்சினேன்.

கதவருகில் விழுந்து கிடந்தான் அவன்.

பதறிக் கொண்டு எல்லோரும் எழுந்தோம்.

விழுந்தது யார்?

நான் முன்னால் சென்றேன்.

எம்.டி.என் பின்னாலே வந்தார்.

பளீரென்று அறையில் விளக்கு வெளிச்சம் திரும்பியது.

அங்கே விழுந்து கிடந்தது?

## அத்தியாயம் நாலு

பரத் ஆரம்பித்தான்.

"போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் வந்துருச்சு,உங்களுக்கெல்லாம் ரொம்ப அதிர்ச்சியா இருக்கும்,கடுமையான விஷம் உள்ள பாம்பு ஒண்ணு சுரேஷ் கழுத்துல கொத்தியிருக்கு,கொத்தின அடுத்த வினாடி விஷம் ரத்தத்துல கலந்துடுச்சு,மூணாவது வினாடியில் மரணம்"

"என்ன சொல்றீங்க,இந்த கான்ப்ரன்ஸ் அறையில எங்கிருந்து பாம்பு வந்தது?"என்று அவனையும் எங்களையும் மாறி மாறி பார்த்துக் கொண்டு கேட்டாள்.

"வாசுகி எனக்கும் அந்த சந்தேகம்,பரிசோதனை பண்ண டாக்டர் மிரண்டு போயிட்டார்,பாம்பு கொத்தும் போதே எதிர்பாராத விதமா இதயமும் ஓட்டத்தை நிறுத்தியிருக்கு,டாக்டர் சொன்னது இன்னொன்னு உங்களுக்கு அதிர்ச்சியைத் தரும்,இந்த வகைப் பாம்புகள் அடர்த்தியான காடுகள்ல தான் இருக்குமாம்,அமேசான்,சரவாக்"

"என்ன வெளி நாடுகளா சொல்றீங்க,அங்கிருந்து பறந்து வந்து இங்கே கான்ப்ரன்ஸ் ரூம்ல்ல புகுந்து கொத்திட்டு மாயமா மறந்து போயிடுச்சா?"

"நான் இன்னும் முடிக்கவேயில்லேயே,கொஞ்சம் பொறுங்க,மேலே நான் பேசி முடிக்கறேன்"என்ற பரத் தொடர்ந்தான்.

"நம்ம இந்தியாவிலே மூனாருக்கு மேலே இருக்கற நாகக் காவுல அந்த வகை பாம்பு இருக்குன்னு சொன்னாரு,அவரும் கேரளாதான்"

வாசுகி எம்.டி.பக்கம் திரும்பினாள்.

"சார் எனக்கு செண்டிமெண்டல் எல்லாம் கிடையாது,ஆனாலும் இந்த ப்ரொக்ராம் நாம பண்ணலாம்ன்னு நீங்க ஒப்புதல் தந்ததுமே இது மாதிரி விபரீதங்கள் நடக்க ஆரம்பிச்சுடுச்சு,இன்னும் எத்தனை பேரோட உயிர் போகப் போவுதோ"

எனக்கு வாசுகி மீது கோபம் வரவில்லை.தொழில் முறை போட்டி மனோபாவத்தில் தான் அவள் பேசுகிறாள்.அவள் தொகுத்து வழங்கும் வி.வி.ஐ.பி கிச்சன் கடந்த இரண்டு வருடமாக டி.ஆர்.பியில் இரண்டாவது இடத்தில் நிரந்தரமாக இருக்கிறது.என்னுடைய புதிய நிகழ்ச்சி பரவலான பேரை எடுத்து விடும் என்று அவள் நம்புகிறாள்.அதனாலேயே ஆரம்பிக்க விடாமல் தடுக்கிறாள் என்று மட்டுமே புரிந்தது.

எம்.டி.தொடர்ந்தார்.

"இன்னொரு விஷயம்"

எல்லோருடைய கவனமும் அவர் பக்கம் சென்றது அவர்களின் முக பாவத்தில் தெரிந்தது.ஒரு கணம் அத்தனை பேரையும் பார்த்து விட்டு நானும் எம்.டி.யை பர்க்க ஆரம்பித்தேன்.

"இன்னைக்கு மதியம் சுரேஷ் உடல் அவங்க வீட்டுக்கும் கொண்டு போறோம்,அவங்க அப்பா அம்மா கிளம்பி வந்துட்டு இருக்காங்க,நாம எல்லோரும் போறோம்"என்றவர் தேவனை பார்த்து,"தேவன் வீ ஆர் கோயிங் டூ ஷூட் தெட் ஆல்சோ,அப்புறம் இந்த ப்ரொக்ராம் நாம தொடர்ந்து பண்ணப் போறோம்"என்றார்.

அனைவரும் அவரையே பார்த்து கொண்டிருந்தார்கள்.

"அண்ட் வாசுகி"என்றார்.

"யெஸ் சார்"என்றாள்.

"நீங்களும் லதா கூட இந்த போறீங்க?"

"நோ சான்ஸ்"

"என்ன ப்ரச்னை உங்களுக்கு நாலு வாரத்துக்கு நீங்க காப்ஸ்யூல் ரெடியா வச்சிருக்கீங்க,நீங்க தான் இப்படி நடக்கவே வாய்ப்பு இல்லேன்னு சொல்றீங்க,இருக்கு இல்லே,நீங்க விவாதம் பண்ணிட்டே போனா எவ்வளவு நல்லா இருக்கும்"

"ஆமாம் வாசுகி சார் சொல்றதும் சூப்பர் ஐடியா,பார்க்கற பார்வையாளர்களுக்கு நம்ம ரெண்டு பேர்க்குள்ளே இருக்கற விவாதம் பேச்சு கூட சுவாரஸ்யமாய் இருக்கும்"

"அப்படி இப்படின்னு இதை நம்பாத வாசுகியே உள்ளே இழுத்து விட்டீங்க?"என்றார் சீனியர்.

எல்லோரும் சிரித்தார்கள்.

எம்.டி."ஒ.கே லெட் அஸ் கோ அகெட்,சரியா நாலு மணிக்கு நாம எல்லோரும் சுரேஷ் வீட்டுக்கும் கிளம்பறோம்,லதா நீங்க உங்க குழுவோட நாளைக்கு கிளம்பறீங்க,அந்த ஒன்றரை லட்சம் கோடி பெறுமானம் உள்ள ஐந்து தலை பாம்பை கேமிராவில ஷூட் பண்ணிட்டு வர்றீங்க,ஸ்டெப் பை ஸ்டெப் எடுத்த வரைக்கும் ஸ்பாட்ல எடிட் பண்ணி அனுப்பிட்டே இருக்கீங்க,முதல் எபிசோட்ல்ல இருந்து லவ் டெலிகாஸ்ட்"என்றார்.

சிவஞானம் வாயைத் திறந்தார்.

"எல்லாம் சரிதான்,இதோட நம்பகத் தன்மை எவ்வளவு"

"நாளைக்கு அவங்க கிளம்பற வரைக்கும் எல்லோருக்கும் டைம் இருக்கு,இந்த ப்ரொக்ராம் வேண்டாம்ன்னு சொல்றவங்க யாரா இருந்தாலும் தத்துவ ரீதியா இதுக்கெல்லாம் பதில் சொல்லிட்டு தடுங்க,எஸ் ஐ நீட் லாஜிக்கல் ரீசன்ஸ் டூ ஸ்டாப் திஸ்"

எம்.டி.எழுந்தார்.

வாசுகி,"நான் போய் தான் ஆகணுமா"என்றாள்.

"ஆமாம்,சுவாரஸ்யம் வேணும் இல்லே"

எல்லோரும் கேபினுக்குத் திரும்பினோம்.

நான் உட்கார்ந்து கணிப்பொறியை திறந்ததுமே வந்து பக்கத்தில் உட்கார்ந்தாள் வாசுகி.

"என்னப்பா என்னை இழுத்து விட்டே?"

நான் சிரித்தேன்.

"நான் எங்கப்பா இழுத்து விட்டேன்,நீ இதெல்லாம் நம்பற ஆள் இல்லே,அதனாலேயே உன்னையும் இதுல சேர்த்துட்டாரு,இருக்கு இல்லே கான்செப்ட் தான் இது,போற வழியிலே நாம பண்ற தர்க்கமே சுவாரஸ்யமாய் இருக்கும்,இல்லேன்னு சொல்ற நீயே இதை கடைசியிலே நம்பறா மாதிரி ஆயிடும்,நீயே உன் கண்ணாலே எல்லாத்தையும் பார்க்கத் தான் போறே?"

"ஒண்ணும் புரியலை,எம்.டி.என் மேலே என்ன காண்டுல இருக்காருன்னு தெரியலை"என்ற வாசுகி,"ஆனா எனக்கும் இது சவாலாத்தான் இருக்கும் போல"என்றாள் தொடர்ந்து.

சுரேஷின் வீட்டுக்கு நாங்கள் செல்லும் எங்கள் போட்டித் தொலைக்காட்சிகள் வந்திருந்தன.

எம்.டி. என் அருகில் வந்தார்.

"இவங்களே நமக்கு பப்ளிசிட்டி தர்றாங்க"என்றார்.

மறு நாள் அத்தைனை மீடியாவிலும் சுரேஷ் மர்ம மரணம் என்று செய்தி வந்தது.

தொடர்ந்து எனக்கு தொல்லைப் பேசிகள்.

'என்னாச்சு?'

'எப்படி?'

'என்ன மர்மம்?'

யாருக்கும் எந்த பதிலும் சொல்லவில்லை.

சொல்லவும் முடியவில்லை.

பரத் தான் இண்டர் காமில் வந்தான்.

"என்ன பரத்,சில வேலைகள்,மாலையில போகறதுக்கு முன்னாடி இருக்கறது"

"இருக்கட்டும்,துனை கமிஷனர் வந்திருக்காரு,எம்.டி.உடனே உங்களை அவரோட அறைக்கு வர சொல்றாரு"

பிரச்சனை ஆரம்பித்து விட்டதா என்று யோசித்தவாறே எம்.டி.யின் அறைக்கு விரைந்தேன்.

துணை கமிஷனர் பக்கத்தில் சிவஞானமும் உட்கார்ந்திருந்தார்.

அவர்தான் எங்களுக்கு எல்லாம் சீனியர்.

பல தொலைக் காட்சிகளில் நியூஸ் சீப் ஆக இருந்தவர் இப்பொழுது இங்கே.

அவரை கேட்காமல் எம்.டி.எதுவும் செய்ய மாட்டார்.

நான் நுழைந்ததும் பார்த்து விட்ட அவர்,"உட்காருங்க"என்றார்.
நான் பக்கவாட்டு சோபாவில் உட்கார்ந்தேன்.
துனை கமிஷனர் என்னைப் பார்த்தார்.
"ஓ,இவங்க தான் அந்த ப்ரொக்ராம் பண்ணப் போறவங்களா?"
"ஆமாம்"
துனை கமிஷனர் முகத்தினைப் பார்த்ததும் எனக்கு புரிந்து விட்டது.
எம்.டி.யின் நண்பரும் கூட.
முக்கிய விஷயங்களில் எங்களுக்கு ஸ்கூப் நியூஸ் தருபவர்.
"எனக்கு இது ரொம்ப சர்ப்ரைசிங்கா இருக்கு,நீங்க இந்த விஷயத்தை பண்ணப் போறீங்கன்னா,நிச்சயம் அந்த ஒன்றரை லட்சம் கோடி மதிப்புள்ள வைரத்தை நிறைய பேர் அடைய முயற்சி செஞ்சுட்டு இருப்பாங்க,உங்களுக்கு பாதுகாப்பு தேவைன்னு சொன்னாரு,உங்க க்ரூவில இரண்டு ப்ரைவேட் செக்யூரிட்டிங்க ரெண்டு பேரு வருவாங்க,என்னோட பர்சனல் ட்ரெய்னிங்ல்ல வந்தவங்க,ஒருத்தர் ராம்சந்தர்,ரெண்டாவது றம்யான்னு ஒரு பெண்,அவங்களுக்கு உலக காடுகள் அனைத்தும் தெரியும்,காட்டுலேயே பல வருடங்கள் இருந்தவங்க,ஷீ பார்ன் இன் சராவக்,அவங்களும் உங்க கூட வருவாங்க"
"ஓ க்ரேட் சார்"என்ற நான் எம்.டி.யைப் பார்த்தேன்.
என் பார்வையிலேயே புரிந்து கொண்டார் போல,"இப்ப இங்க வந்தாங்கன்னா நல்லா இருக்கும்,ஒரு சின்ன அறிமுகம்"என்றார்.
"ஓய் நாட்,பார்க்கிங்ல்ல தான் கார்ல்ல வெயிட் பண்றாங்க,வர சொல்றேன்"
துணை கமிஷனர் தன் கைப்பேசியை எடுத்து இயக்க ஆரம்பித்தார்.
அறைக்குள் பச்சைப் பயறு வாசனை வீச ஆரம்பித்தது.
"வாட்ஸ் தெட் ஸ்மெல்?"என்றார் எம்.டி.
"பாம்பு நடமாட்டம் இருந்தா இந்த வாசனை வரும் சார்"என்றேன் சற்றே திகிலுடன்.

## அத்தியாயம் ஐந்து

.எம்.டி.சிரித்தார்.
"என்ன லதா,என்னோட அறையில பாம்பு இருக்குன்னு சொல்றீங்களா?"

"சார் இந்த தொடருக்காக நான் அது சம்பந்தமா செய்திகள் சேகரிக்க ஆரம்பிக்க தொடங்கிய உடனேயே அந்த வாசனை தெரிய ஆரம்பிச்சுடுச்சு"என்றேன்.

எம்.டி.பதில் சொல்லவில்லை சிரித்தார்.

"எனக்கு கூட இந்த பயத்தம் பருப்பு வாசனை மாதிரி ஏதோ அடிக்குது"என்றார் துணை கமிஷனர்.

எம்.டி.யின் இண்டர்காம் ஒலித்தது.

"எஸ்.உள்ளே அனுப்புங்க"என்றார்.

அந்த பெண்ணும் அவரும் உள்ளே நுழைந்தார்கள்.

துணை கமிஷனர் லதாவிற்கு இருவரையும் அறிமுகப் படுத்தினார்.

"மேடம் இது ராமச்சந்தர்,இது ரம்யா"என்று இருவரையும் அறிமுகப் படுத்தினார்.

"வணக்கம்"என்ற லதா,"ரம்யா பற்றி உங்களுக்கு அதிகம் சொல்லிட்டேன்,அவங்களுக்கு இந்த காடுகளல்ல அதிகம் அனுபவம் உண்டு,உங்களோட இந்த முயற்ச்சிக்கு ரொம்ப ஒத்துழைப்பா இருப்பாங்க,ராமச்சந்தர் வன விலங்குகள் மொழி அறிந்தவர்,ஒரு மைல் தூரத்துல ஒரு விலங்கு வந்தாலும் கண்டு பிடிச்சு அதோட எடையை கூட சொல்லிடுவாரு"என்றார்.

"ரொம்ப சந்தோஷம்,எனக்கு தேவையான விஷயங்களை இவங்க ரெண்டு பேருமே பூர்த்தி செஞ்சுடுவாங்கன்னு நினைக்கிறேன்"என்றேன்.

சொல்லிக் கொண்டே ரம்யாவை பார்த்தேன்.

ஜீன்ஸ் ஷர்ட் டாப்ஸ் அணிந்திருந்தாள்.

அவள் உடை கொஞ்சம் செக்சியாகத்தான் இருந்தது.

இருவரின் தொலைப்பேசி எண்களையும் வாங்கி கொண்டேன்.

"ஒரு லெமன் டீ சாப்பிடுவோம்'என்றார் எம்.டி.

அவர் இண்டர்காமில் சொன்னதும் கொஞ்ச நேரத்தில் லெமன் டீ வந்தது.

டீயைக் குடித்துக் கொண்டே எம்.டி."ப்ரமோ இன்னைக்கு கட் பண்ணிட்டா நல்லா இருக்கும்"என்றார்.

"எல்லாம் தயாராய் இருக்கு சார்,எடிட் பண்ண வேண்டியது தான் பாக்கி"என்றேன்.

"முதலில் சுரேஷ் வீட்டுக்கு போயிட்டு வந்துடுவோம்"என்றார்.

ரம்யாவும் ராமச்சந்தரும் எங்களுடன் கிளம்பினார்கள்.

துணை கமிஷனர் விடைப் பெற்றுக் கொண்டு போய் விட்டார்.

சுரேஷ் வீடு-

எங்களையும் மீறி ஒன்றிரண்டு பிற சேனல் காரர்கள் வந்திருந்தார்கள்.யாரையும் தடுக்க வேண்டாம் என்று சொல்லி விட்டார் எம்.டி.சுரேஷின் குடும்பத்தாருக்கு பத்து லட்ச ரூபாய் கொடுத்தார்.அதை விடீயோ எடுக்க வேண்டாம் என்று முதலிலேயே சொல்லி விட்டார்.

எங்களது ஊழியர்கள் மற்றும் டெக்னிகல் ஆசாமிகள் அனைவரும் இருந்தோம்.

எல்லாம் முடிந்து அலுவுலகம் திரும்பிய போது மணி ஏழாகி விட்டது.

நான் எம்.டி.மற்றும் தயாரிப்பாளர்கள்,ராமசந்தர்,ரம்யா அனைவரும் கான்ஃபரன்ஸ் ரூமில் இருந்தோம்.

ராமச்சந்தரையும்,ரம்யாவையும் அனைவருக்கும் அறிமுகப் படுத்தி வைத்தார்.

எம்.டி.ஆரம்பித்தார்.

"ரம்யா அண்ட் ராமசந்தர் நாளைக்கு நம்ம யூனிட் கிளம்புது,என்ன என்ன உங்களுக்கு தேவைன்னு சொல்லிட்டீங்கன்னா அதையும் பரத் ஏற்பாடு பண்ணிடுவாரு"

ராமசந்தர்,"எங்களோட பொருட்கள் எல்லாம் தயாராய் இருக்கு,நீங்க சொல்ற நேரத்துக்கு இங்கே வந்துடுவோம்"என்றார்.

எம்.டி.உற்சாகமாய் பேசினாலும் உள்ளே ஒரு வித நிசப்தம் நிலவியது.

மறு நாள் காலையில் சரியாய் பத்து மணிக்கு அலுவுலகத்தில் இருந்து புறப்பட முடிவு.

நான் இரவு எட்டு மணிக்கு வீடு திரும்பிய போது தான் அம்மாவிடம் புதிய நிகழ்ச்சிப் பற்றிய விவரம் சொல்ல பயந்தே விட்டாள்.

"என்னடி இது,நீ பரபரப்பா நாலு நாளா இண்டர்னெட்டை நோண்டிட்டு இருக்கும் போது ஏதோ தோணுச்சு,சந்தேகப் பட்டேன்,இவ்வளவு பெரிய ரிஸ்க் தேவையா?"

நான் அம்மாவை ஆழமாகப் பார்த்தேன்.

"அம்மா நான் யார்ங்கறது உனக்கே நல்லா தெரியும்,அப்பா என்னை எப்படி எல்லாம் வளர்க்கணும்ன்னு ஆசைப் பட்டார் அதுவும் தெரியும்,இப்பத்தான் எனக்கு பெரிய சாதனை பண்ண வாய்ப்பு கிடைச்சிருக்கு,இதை என்னால நிச்சயம் விட முடியாது?'

"நீ யாரு,உன் தைரியம் என்னன்னு எனக்கு தெரியும்,ஆனாலும் ஒரு தாய்க்கு உண்டான பயம் எனக்கும் பெண்ணைப் பத்தி இருக்கத்தான செய்யும்."

"அம்மா நான் தனியா போகலை,என் கூட எங்களோட தொலைக்காட்சியில இருந்து ஒரு க்ரூப்பே வருது,நீங்க

பயப்பட வேண்டிய அவசியம் இல்லே"
அம்மா என்னவோ முணுமுணுத்தாள்.
"என்னம்மா,எதுவா இருந்தாலும் வெளிப்படையா பேசு,முணுமுணுக்காதே"
"எனக்கு உன்னைப் பத்தி பயம் இல்லே"சொல்லி நிறுத்தியவள் என்னை ஒருமுறை பயத்துடன் பார்த்தாள்.
எனக்கு உடலை என்னவோ செய்தது.
உடனே என் அறைக்குள் சென்று கதவினை மூடிக் கொண்டேன்.
காலையில் எழுந்து என்னுடைய ஜீன்ஸ் நாலு,நாலு ஷர்ட்ஸ் டீ ஷர்ட்ஸ்,டாப்ஸ் மற்றும் உள்ளாடைகளை ஷோல்டர் பேக்கில் திணித்துக் கொண்டேன்.
என்னுடைய கேமிராவையும் எடுத்துக் கொண்டேன்.
நான் தொலைக்காட்சி அலுவுலகம் சென்று சேர்ந்து என்னுடைய இருக்கைக்கு போன அடுத்த வினாடியே எம்.டி.யிடம் இருந்து போன்.
'லதா உடனே எடிட்டிங் ரூமுக்கு வாங்க'
போனேன்.
எனக்கு முன்னால் சீனியர் ப்ரொடீயூசர் மற்றும் குழுவினர் அனைவரும் இருந்தனர்.
எடிட்டர் அதுவரை நாங்கள் எடுத்ததை எடிட் செய்து 20 செகண்டிற்கு ப்ரமோ தயார் செய்திருந்தார்.
'எப்படி இருக்கு?'எல்லோரையும் பொதுவாக கேட்டார்.
அனைவரும் ஒரே சுருதியில் 'சூப்பர்'என்றார்கள்.
நான் ஒன்றும் சொல்லாமல் இருந்தேன்.
எம்.டி.என்னையே பார்த்து கொண்டிருப்பதை உணர்ந்தேன்.
"என்ன லதா ஒரு கருத்தும் இல்லையா?"
"இருக்கு சார்,இதுல வர பி.ஜி.எம்.பத்தலை,ஏதோ ஒரு மர்மத் தொடருக்கான பி.ஜி.எம்.மாதிரி இருக்கு,ரெண்டாவது பி.ஜி.எம்.கேட்கும் போதே குடலை குழப்பணும்,பெரும்பாலான வீடுகள்ல தொலைக்காட்சி வரவேற்பறையில தான் இருக்கும்,இந்த பி.ஜி.எம்.வேறு எந்த அறையில் இருந்தாலும் அவங்களை பிடிச்சு முன் அறைக்கு கொண்டு வரணும்"என்ற நான் எங்களது ஆஸ்தான இசையமைப்பாளர் முரளியைப் பார்த்தேன்.
அவர் தலையாட்டினார்.
"எஸ் லதா நீங்க சொல்றது ரொம்ப சரி,நான் மாலைக்குள்ளே உங்களுக்கு நீங்க எதிர்பார்க்கிற பி.ஜி.எம்.ஐ போட்டு காட்டறேன்"
எம்.டி.யின் முகத்தில் மெல்லிய சந்தோசம் எட்டிப் பார்த்தது.

"வீ ஆர் கோயிங் பேக் டு கான்ஃபரன்ஸ் ஹால்"என்றார்.

எல்லோரும் அறையில் இருக்க வாசுகி வாயைத் திறந்தாள்.

"சார் எனக்கு சுரேஷோட மரணம் இன்னமும் பயத்தை உண்டு பண்ணிடுச்சு,இந்த நிகழ்ச்சியே ரொம்ப ரிஸ்கான ப்ரொக்ராமா இருக்கும் போல இருக்கு"என்றாள்.

'ஒரு நிமிஷம்'என்ற எம்.டி.பரத் பக்கம் திரும்பினார்.

"நான் சொன்னது எல்லாம் ரெடியா?"

"ம்,டாகுமெண்ட்சோட ரிசப்ஷன்ல்ல வெயிட் பண்ணிட்டிருக்காங்க"என்றார்.

"போய் கூட்டிட்டு வாங்க,இங்கேயே எல்லார் கிட்டயும் கையெழுத்து வாங்கிடுவோம்"என்றார்.

பரத் 'எஸ்.'சார் என்றார்.

பரத் சென்றதும் எல்லோரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தனர்.

எம்.டி.சீனியர் ப்ரொடீயூசரைப் பார்த்தார்.

அவர்,"இந்த சீரியல்ல பங்கு பெறப் போற எல்லார் மேலேயும் ஒரு கோடி ரூபாய்க்கு பாலிசி எடுக்க ஏற்பாடு பண்ணியிருக்கு,யாருக்கும் ஒண்ணும் ஆகக் கூடாதுன்னு வேண்டிக்குவோம்,இருந்தாலும் இது ரொம்ப அவசியமானது என்று நானும் எம்.டி.யும் சேர்ந்து முடிவு பண்ணோம்"என்றார்.

அனைவர் கண்களும் கொஞ்சம் பயம் கலந்த ஆச்சர்யத்துடன் விரிந்தன.

குழுவில் ஒன்பது பேர்.

பரத் அந்த இன்சூரன்ஸ் ஏஜெண்டை அழைத்து வர-

எல்லோருக்கும் ஒரு விண்ணப்ப படிவம் தரப் பட்டது.

எங்கெங்கே கையொப்பம் இட வேண்டும் என்பதை பென்சிலால் குறித்திருந்தார்கள்.

எல்லோரும் அமைதியாய் கையொப்பம் இட்டார்கள்.

"நடக்கப் போகும் விபரீதங்கள் என்னவாக இருந்தாலும் நாம் அனைவருமே பொறுப்பு"என்ற எம்.டி.மூணாவது நாள் நானும் வந்து சேர்ந்துப்பேன்"என்றார்.

வாசுகி திகிலுடனே என்னைப் பார்த்தாள்.

'நல்ல ஐடியா சொன்னப்பா'என்பது போல் இருந்தது அவள் பார்வை.

அப்பொழுது-

## அத்தியாயம் ஆறு

சீனியர் ப்ரொடியூசர் "இன்னொரு முக்கியமான விஷயம்,இந்த பாலிசி தாரர் எதிர்பாராம இறந்தா அவங்களோட பாலிசி தொகை யாருக்கும் போகணும்ங்கறதை இப்பவே எழுதி

கொடுத்திடுங்க,அப்பா அம்மா அல்லது குடும்ப நபர்,எனி ப்ளட் ரிலேஷன்,இது ரொம்ப முக்கியம்,வீட்டுல கன்சல்ட் பண்ணா பயப்படுவாங்க,ஆனா நீங்க இன்னைக்கே முடிவு பண்ணி எழுதி கொடுத்தறது நல்லது"என்றார்.

அது வரை சும்மா இருந்த எம்.டி."இன்னொரு முக்கியமான விஷயம் என்னோட பேர்ல்ல முப்பது கோடி ரூபாய் இன்சுரன்ஸ் தனியா எடுத்திருக்கேன்,அதுல வாரிசுதாரரா இந்த படபிடிப்பு குழுவில இருக்கற எல்லோர் பேரையும் சட்டப் படி இணைச்சிருக்கேன்"என்றார்.

உண்மையிலேயே எல்லோரும் ஒரு நிமிடம் அதிர்ந்து நின்றார்கள்.

நானும் தான்.

"ஏன் சார் அந்த அளவுக்கு சிந்திக்கறீங்க?"

"எனக்கு தோணுச்சு லதா,நீங்க அத்தனை பேருமே சம்பளம் வாங்கற ஸ்டாஃப் தான்,உங்களுக்கு சம்பளம் தவிர நான் ஒண்ணுமே தரது இல்லே,இந்த ஒரு விஷயமாவது இருக்கட்டுமேன்னு தீர்மானம் பண்ணி நேத்து ராத்திரி என்னோட மனைவி கிட்ட சொன்னேன்,அவ சரின்னு சொன்னா,அதனால தான் இந்த முடிவுக்கு வந்தேன்"என்றார்.

"நாம இன்னைக்கு இரவு எட்டு மணிக்கு இங்கே நைட் டின்னர் முடிச்சுட்டு கிளம்பறோம்"என்றார் பரத்.

"டெக்னிகல் சமாச்சாரங்கள் எல்லாம் ரெடி பண்ணிட்டீங்களா?"

"எல்லாம் ரெடி சார்"என்றார் பரத்.

"மதியம் இன்னொரு ப்ரோமோ ரெடி பண்றோம்,எல்லா அவங்க அவங்க கேபின் போங்க,சரியா லஞ்ச் டைம் முடிஞ்சதும் கான்ஃபரன்ஸ் ஹால்ல மீட் பண்ணுவோம்"என்றார் எம்.டி.

நான் என் இருக்கையில் போய் உட்கார்ந்த கையோடு வந்து என் எதிரில் உட்கார்ந்தாள் வாசுகி.

அவள் முகத்தில் ஒரு சின்ன சந்தோசம் கூட இல்லை.

'என்ன வாசுகி உன்னோட முகத்துல ஒரு சுரத்தே இல்லே?"

"நீ எந்த நேரத்துல இந்த புது ஐடியாவை கொண்டு வந்தியோ எம்.டி.என்னையும் இதுல கோத்து விட்டாரு,டெய்சி என்னோட ப்ரொக்ராம் பண்றா,அவளுக்கு மாத்தி விட்டாரு,உன்னோட ப்ரொக்ராம் எத்தனை எபிசோட் போகும்?"

"தெரியலை வாசுகி,எனக்கென்னமோ அம்பது எபிசோட் தாண்டும்ன்னு தோணுது"

"ஐயோ அது வரைக்கும் காட்டுக்குள்ளேயே உழல போறோமா?"

"உம்,பட் எம்.டி.அங்கிருந்தே நம்ம குடும்பங்களோட வாரத்துக்கு ஒரு முறை பேச ஏற்பாடு பண்ணியிருக்காரு,வீடியோ கால்"

என் டேபிள் மீது இருந்த இண்டர்காம் ஒலித்தது.

எடுத்தேன்.

ரிசப்ஷனிஸ்ட் மாலா.

"என்ன மாலா?"

"உன்னை சந்திக்க ஒரு முதியவர் வந்திருக்கார்,உன்னையும் எம்.டி.யையும்,உங்க காமிரா மேன் எல்லோரையும் உடனே பார்க்கணும்ன்னு சொல்றாரு,எம்.டி.கிட்ட சொல்லிட்டேன்,அவரோட கண்ணை நேரிடையா பேச முடியலை,அவ்வளவு பவர்ஃபுல்லா இருக்கு,எம்.டி உடனே உன்னை கான்ஃபரன்ஸ் அறைக்கு வரச் சொன்னாரு,நம்மளோட மத்த தயாரிப்பாளர்கள் அங்கே அல்ரெடி போயிட்டாங்க,வாசுகி உன் கூட இருந்தா அவளுக்கு செய்தி சொல்லிடு,எல்லோரும் அசம்பிள் ஆகணும்ன்னு எம்.டி.சொல்லிட்டாரு"

"உடனே கிளம்பறேன்"என்று சொல்லி விட்டு எழுந்தேன்.

வாசுகியும் எழுந்தாள்.

"என்னாச்சு லதா?"

"யாரோ ஒரு முதியவர் வந்திருக்காராம்,நம்ம எல்லோரையும் எம்.டி.உடனே கான்ஃபரன்ஸ் அறைக்கு வரச் சொல்றார்"

வாசுகியும் நானும் கான்ஃபரன்ஸ் அறைக்குள் நுழைந்த போது எல்லாரும் எங்களுக்காக காத்திருந்தார்கள்.

வி.வி.ஐ.பி.களுக்காக அறைக்குள் இருந்த வெள்ளை நிற சோபாவில் அந்த முதியவர் உட்கார்ந்து இருந்தார்.

நீண்ட வெள்ளைத் தாடி.

முதிர்ந்த முகம்.

முகத்தில் வயதின் காரணத்தால் அங்கங்கே ரேகைகள் மாதிரி அழுத்தமான கோடுகள்.

வயது நிச்சயம் ஏழுபதுக்கு மேல் இருக்கும் போல் இருந்தது.

எம்.டி.காமிரா மேனைப் பார்க்க -

அவன் காமிராவை ஆன் செய்தான்.

முதியவரைப் பார்த்தால் மிகவும் கம்பீரமாக தெரிந்தது.

அவர் அனைவரையும் ஒரு பார்வை பார்த்தார்.

ஒரு கம்பீரப் பார்வை.

கண்களில் ஒரு அதீத தீட்சண்யம்.

நான் அவரையே பார்த்து கொண்டிருந்தேன்.

அவர் 'சட்'டென்று என்னைத் திரும்பிப் பார்த்தார்.

வைத்த கண் வாங்காமல் அடித்துப் பார்த்தார்.
என்னால் நேரிடையாக அவர் கண்களை பார்க்க முடியவில்லை.
மெல்ல சிரித்த படியே,"நீ தான் லதாவா?"என்றார் 'பொட்'டென்று.
எனக்கு ஒன்றும் புரியவில்லை.
எப்படி என் பெயரை சரியாய் சொல்கிறார்.
அவரை எப்படி அழைப்பது?
நான் யோசித்து முடித்த மறு மின்னல் நொடியில்,"குழந்தாய் என்னை நீ அப்பனே என்று கூட அழைக்கலாம்"என்றார்.
அவர் பேசுவது நாங்கள் பேசுவது எல்லாம் கேமிராவில் படமாகி கொண்டிருந்தது.
எனக்கு வார்த்தைகள் வெளி வரவில்லை.
அவர் ஒவ்வொருவராய் பார்த்து அவரவர் பெயரை வேகமாக சொன்னார்.
பின் எம்.டி.யை பார்த்தார்.
"நிதி தாசன்,இது தானே உன்னுடைய உண்மையான பெயர்"என்றார் சிரித்துக் கொண்டே.
எம்.டி.அசந்து போனதை அவர் முக மாற்றமே சொன்னது.
"ஆமாம்,என்னுடைய பெயர் அதுதான்,ஆனால் கந்தராஜ் என்றால் தான் எல்லோருக்கும் தெரியும்"
"விபரீதமான முயற்சியில் இருக்கிறீர்கள்,நான் சொன்னாலும் கேட்க மாட்டீர்கள்"என்றார்.
அனைவரின் கண்களிலும் பீதியைப் பார்த்தேன்.
இருந்தாலும் கொஞ்சம் தைரியத்தினை மனதில் வரவழைத்துக் கொண்டு மெல்லிய குரலில் கேட்டேன்.
"ஸ்வாமின்னே உங்களை கூப்பிடறேன்,அங்கே அந்த நாகக் காவுல ஒன்றரை லட்சம் கோடி பெறுமானம் உள்ள வைரக் கல் இருக்கறது உண்மைதானே,உங்களுக்கு எங்கள் திட்டங்கள் எப்படித் தெரியும்"என்று கேட்டேன்.
அவர் சிரித்தார்.
'நாகராஜா'என்று முணுமுணுத்தார்.
அறையில் முழுக்க பயறு வாசனை உச்சமாக வீச ஆரம்பித்தது.
என்னுடைய உடல் மெல்ல பீதியில் ஆடியது போல் இருந்தது.
"குழந்தாய் என்னுடைய வயது என்னவாக இருக்கும் என்று நினைக்கிறாய்?"என்று வாசுகியைப் பார்த்து கேட்டார்.
ஏற்கனவே பயத்தில் உறைந்து போனது போல் அமர்ந்திருந்த அவள்,"என்பத்தைந்து?"என்றாள்.
அவர் சிரித்துக் கொண்டே,"நூற்று என்பது"என்றார்.

தலைமை தயாரிப்பாளர் சிரித்தார்.

அவரை சட்டென்று திரும்பிப் பார்த்த பெரியவர் "தீன தயாளன் உன்னுடைய மூன்றாவது வயதில் உன்னை கரும்பு கொல்லையில் கரு நாகம் கடித்ததை மறந்து விட்டாயா? பதினெட்டு மணி நேரம் போராடி ஊர் மருத்துவச்சி உன்னை மீட்டெடுத்தாளே,இன்னமும் அவள் படத்தினை உன் வீட்டின் பூஜை அறையில் வைத்துள்ளார்களே,நீ ஒரே பிள்ளை மறந்து விட்டாயா?"என்றதும் அனைவருமே அதிர்ந்து போனோம்.

இது வரை அவர் யாரிடமும் சொல்லாத செய்தி.

எம்.டி.கொஞ்சம் தோரணையுடன் கேட்டார்.

"உங்களுக்கு என்னத்தான் வேண்டும்"

"நீங்கள் இந்த நாகத்தினை தேடி செல்லும் விஷயத்தினை இந்த நேரத்தில் மறக்க வேண்டும்"என்றார்.

எம்.டி.கொஞ்சம் கோபமான தோரணையில்,"எங்களை கட்டுப் படுத்த நீங்கள் யார்?"என்றார்.

பெரியவர் சிரித்தார்.

திரும்பி என்னைப்பார்த்தார்.

"குழந்தாய் லதா நீ யார் என்பது எனக்கு தெரியும்,உனக்கும் தெரியும்"என்றார் பெரியதாய் சிரித்துக் கொண்டே.

நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

உள்ளே கான்ஃபரன்ஸ் அறையில் இருந்தவர் பார்வை ஒட்டு மொத்தமாய் என் பக்கம் திரும்பியது.

எனக்கு ஏனோ உதறல் எடுத்தது.

என்ன நடக்கிறது.

நான் யார் என்பது இவருக்கு எப்படி தெரியும்?

கொஞ்சம் பயம் கலந்த பார்வையில் அவறைப் பார்த்தேன்.

அறையில் 'படீ'ரென்று விளக்குகள் வெடித்தன.

இருட்டி சூழ்ந்தது.

சூறாவளிக் காற்று போல வீசியது.

காலி நாற்காலிகள் பறந்து சுவரில் மோதி கீழே விழுந்த சத்தம் துல்லியமாய் கேட்டது.

**அத்தியாயம் ஏழு**

அறைக்குள் ஏதேதோ வாசனைகள்,நாற்றங்கள் தொடர்ந்தன.

எம்.டி."செக் த ஜென்ரேட்டர் பரத்"என்று கத்தினார்.

படீரென்று அறைக்குள் மீண்டும் சத்தம்.

கண்ணாடித் துகள்கள் மேலே விழுந்தன.

கதவு திறக்கப் படும் சப்தம்.

பத்து செக்யூரிட்டிகள் பெரிய டார்ச் லைட்டுகளுடன் உள்ளே நுழைந்தனர்.

"என்னன்னு தெரியலை சார் ஆபிஸ் முழுக்க ஷார்ட் சர்க்யூட் ஆகியிருக்கு,ரெண்டு மூணு ஃப்ளோர்ல்ல சுவத்துல ஷாக் அடிக்குது,யாரும் அசையாதீங்க"என்ற படியே டேபிள் மீது மூன்று நாலு பெரிய டார்ச் லைட்டுகளை நிறுத்தினர்.

அந்த வெளிச்சத்தில் அப்பொழுதுதான் கவனித்தேன்.

ரூபில் இருந்த பால்ஸ் சீலிங்கில் பொருத்தப் பட்டிருந்த ட்யூப் லைட்டுகள் தெறித்திருந்தன.

அனைவரின் பார்வையும் அந்த முதியவர் உட்கார்ந்திருந்த நாற்காலியைப் பார்த்ததை கவனித்தேன்.

அங்கே-

அந்த நாற்காலி-

காலியாய் இருந்தது.

எம்.டி.மௌனமாய் உட்கார்ந்திருந்தார்.

'என்னதான் சார் நடக்குது?'என்றாள் வாசுகி.

கையை உயர்த்தி காட்டினார் எம்.டி.

அவர் மிகுந்த கோபத்தில் இருந்தார் என்பதை உணர முடிந்தது.

"யாரும் எழுந்திருக்க வேண்டாம்"என்றார் தலைமை தயாரிப்பாளர்.

எல்லோர் முகத்திலுமே திகில் பரவியிருந்தது.

இயற்கைக்கு எதிரான விஷயங்கள் நடக்கும் போது திகில் கவ்வத்தானே செய்யும்.

இருபது நிமிடத்திற்க்கும் மேல் அங்கேயே அமர்ந்திருந்தோம்.

பரத் வெளியில் சென்று வந்தான்.

"சார் சரி பண்ணியாச்சு பெரிய அளவில ஃபர்ஸ்ட் ஜெனரேட்டர் கொளாப்ஸ் ஆகியிருக்கு,இரண்டாவதை ஆன் பண்ணியிருக்கோம்,மெயின் லைனைப் பார்த்துட்டு இருக்காங்க"

எம்.டி.இங்கே இந்த அறையில நாலு பேபி லைட் கொண்டு வந்து பிக்ஸ் பண்ணுங்க"என்றார்.

கொஞ்ச நேரத்தில் அறையில் ஒளி வெள்ளம் பெருகியது.

எம்.டி."ஐ யம் சாரி கைஸ் ஏ.சி இல்லாம புழுக்கமா தான் இருக்கும்,கொஞ்சம் ஒத்துழைங்க,இப்போ என்ன பண்ணப் போறோம்"

வாசுகி நடுங்கிய குரலில்,"சார் எனக்கென்னமோ இந்த ப்ரொக்ராமை அப்படியே விட்டுடுலாம்ன்னு தோணுது"என்றாள்.

"ஸ்டாப் இட்"என்றார் எம்.டி.

இவ்வளவு கோபமாக அவர் பேசி இது வரை யாரும் பார்த்ததில்லை.

"உங்களுக்கு பிடிக்கலைன்னா நீங்க வேலையை விட்டு இப்ப கூட போகலாம்"என்றார்.

அவர் அப்படி சொன்னது எனக்கே வருத்தமாய் தான் இருந்தது.

வாசுகியின் முகம் மிகவும் வாடிப் போனது.

மௌனமானாள்.

தலைமை ப்ரொடியூசர் எம்.டி.யைப் பார்த்தார்.

"சொல்லுங்க"

"நம்ம ரிசப்ஷன் கேமிரா,பெரியவர் வந்த வழி கேமிரா,இங்க நாம ஷூட் பண்ணது எல்லாத்தையும் இப்ப பார்த்துட்டா நல்லது"என்றார்.

"யூ வார் ரைட்"என்றவர் பரத்தைப் பார்த்தார்.

"இதோ உடனே ஏற்பாடு பண்றேன்"என்று அவர் எழுந்து வேகமாய் வெளியேப் போனார்.

அவர் போனதும் எம்.டி."எனக்கு ஒரு விஷயம் புரியலை,அவர் வந்தது நிஜம்,பேசினது நிஜம்,இங்கே நடந்த நிகழ்வுகள் நிஜம்,எல்லாத்தையும் மீறி லதாவைப் பார்த்து நீ யாருன்னு உனக்கே தெரியும்ன்னு சொன்னாரே அதுக்கு என்ன அர்த்தமாய் இருக்கும்"என்றதும் எல்லோரும் என்னையே பார்த்தார்கள்.

"நான் லதாவை மட்டும் கேட்கலை நம்ம எல்லார்கிட்டயுமே இந்த கேள்வியை கேட்டுக்கறேன்"

"சார் அவர் என்ன சொன்ன வந்தார்ன்னு எனக்கு புரியலை,ஆனா ஒண்ணு இந்த ப்ரொக்ராம் பத்துன சிந்தனை எனக்கு பல வருடங்களாவே இருக்கு"

சிவஞானம்,"சார் எனக்கு தோன்றது ஒண்ணுதான்,நிச்சயம் இந்த ப்ரொக்ராம் டாப்ல்ல போகும்,ஆனா எத்தனை பேரை காவு வாங்கப் போவுதுன்னு தெரியலை,லதாவைப் பார்த்து அவர் சொன்னதும் நான் ஒண்ணு தீர்மானிச்சுட்டேன்,நானும் எல்லார் கூடயும் போக தீர்மானம் பண்ணிட்டேன்"என்றார்.

"குட்"என்றார் எம்.டி.

பரத் வந்தார்.

அவர் கையில் ஹார்ட் டிஸ்க் எல்லாம் இருந்தது.

"எல்லா கேமிராவில் இருந்தும் ஹார்ட் டிஸ்க் எடுத்துட்டு வந்துட்டேன்"என்றார்.

அவர் பின்னாடியே எடிட்டர் சிறிய மானிட்டரை எடுத்து வந்தார் கேபிள்களுடன்.

எல்லோரும் பார்க்கும் படி கான்ஃபரன்ஸ் மேஜையில் மானிட்டரை வைத்து ஒவ்வொரு டிஸ்காக இணைத்து ஓட

விட்டார்.
ரிசப்ஷன் அறையில் அந்த பெரியவருக்கு முன்னால் வந்தவர்கள் பதிவு ஆகியிருந்தார்கள்.
பெரியவர் வந்தது எதுவும் பதிவாகவில்லை.
ஆனால் ரிசப்ஷன் மாலா யாருடனோ பேசுவது தெரிந்தது.
அவர் பேசும் போது அவர் முன்னால் யாரும் இல்லை.
யாரும் இல்லாத போது எப்படி யாரைப் பார்த்து பேசுகிறாள்.
அடுத்து அவர் கான்ஃபரன்ஸ் அறைக்கு வரும் வழியில் பதிவாகவில்லை.
அவர் உள்ளே நுழைந்ததும் பதிவாகவில்லை.
அறைக்குள் எடுத்த விஷுவல்களில் அவர் இல்லை.
எல்லோரும் அதிர்ந்து போனோம்.
ஆனால் அவரின் குரல் மட்டும் பதிவாகியிருந்தது.
சிறிது நேரம் மௌனம் நிலவியது.
"நம்ம திட்டப் படி சரியாய் நாளை காலை ஏழு மணிக்கு கிளம்பறோம்"என்றவர் எடிட்டர் பக்கம் திரும்பினார்.
அந்த பெரியவர் வந்த நேரத்திலிருந்து கேமிரா விஷுவல்ஸ் அவர் குரல்,இப்ப வரை எல்லாத்தையும் சேர்த்து ப்ரொமோ ரெடி பண்ணுங்க,நைட் எத்தனை மணியானாலும் ஒவ்வோரு ப்ரொக்ராம் நடுவிலும் ஒளிபரப்பு பண்ணுங்க.ம்யூசிக் அமானுஷ்யமாய் இருக்கட்டும்"என்றார்.
"எல்லோரும் கிளம்பலாம்,இங்கேயே தங்க நினைக்கறவங்க நம்ம மேல் ஃப்ளோர்ல்ல இருக்கற ஏழு கெஸ்ட் அவுஸ்ல்லயும் தங்கிக்கலாம்"என்றார்.
தலைமை தயாரிப்பாளர்,"எல்லாருமே இன்னைக்கே கிளம்பற மாதிரி தான் வந்தோம்,நைட் இங்கேயே தங்கிடறோம்"என்றார்.
எம்.டி.பரத் பக்கம் திரும்பி,"எல்லோருக்கும் டின்னர் ஏற்பாடு பண்ணிடுங்க,நான் காலையில சரியா ஆறு மணிக்கு வந்துடறேன்,குட் நைட் டூ ஆல்"என்றபடியே எழுந்தார்.
அவர் போனதும் கொஞ்ச நேரம் அறையிலேயே உட்கார்ந்திருந்தோம்.
பெரியவரைப் பற்றியே பேச்சு எழுந்தது.
பின் மேலே கெஸ்ட் அவுசுக்கு போனோம்.
அங்கும் நடு ஹாலில் டின்னர் வரும் வரை காத்திருந்தோம்.
ஹாலில் இருந்த பெரிய மானிட்டரில் எந்த ப்ரொக்ராமும் பார்க்கும் எண்ணம் வரவில்லை.
வாசுகி ஏனோ பேய் அறைந்தது போல் இருந்தாள்.
நான் அவள் பக்கத்தில் போய் உட்கார்ந்தேன்.

"என்னாச்சு வாசுகி,சகஜமா இரு,நாம எல்லாம் ஒண்ணாதான இருக்கப் போறோம்,பயம் எதுக்கு?"

"லதா அந்த பெரியவர் ஏன் அப்படி சொன்னாரு?"

"என்ன"

"உன்னை யார்ன்னு தெரியும்ன்னு சொன்னாரே?"

"அதுதான் எனக்கும் குழப்பமா இருக்கு,எதுக்கு வந்தாரு,என்ன சொல்ல வந்தாரு.ஏதுவுமே புரியலை,ஆனாலும் நாம் ரொம்ப ரிஸ்கான ப்ரொக்ராம் பண்ணப் போறோம்ன்னு மட்டும் புரியுது,நம்பளை பொருத்த வரைக்கும் இது நம்பர் ஒன் ப்ரொக்ராம் ஆகப் போகுதுன்னு மட்டும் நல்லாத் தெரியுது"என்றேன்.

இரவு டின்னருக்கு எல்லா விதமான வெரைட்டியும் வந்தது.

சாப்பிட்டு முடித்தோம்.

நானும் வாசுகியும் பிருந்தாவும் ஒரு அறையை எடுத்துக் கொண்டோம்.

மூவரும் நைட்டிக்கு மாறி பெரிய படுக்கையில் படுத்துக் கொண்டோம்.

பிருந்தா வாக்மேனில் பாட்டு கேட்க ஆரம்பித்தாள் கண்ணை மூடிக்கொண்டு.

'லைட்டை அணைச்சிடுப்பா'என்றாள்.

வாசுகி அவசரம் அவசரமாய்,"ஐயோ லைட் எரியட்டும்"என்றாள்.

"என்னப்பா குழந்தை மாதிரி,ரெண்டு பேர் கூட இருக்கோம்"என்றபடியே கட்டிலுக்கு பக்கவாட்டில் இருந்த விளக்கு ஸ்விட்சை அழுத்தினேன்.

அறையில் விளக்கு அணைந்தது.

ஏ.சி.ஜில்லிப்பை ஏற்படுத்திக் கொண்டிருந்தது

எனக்கு உறக்கம் வரவில்லை.

ஆனாலும் கண்களை மெல்ல மூடிக் கொண்டு நூறிலிருந்து கீழ் முகமாக எண்ண ஆரம்பித்தேன்.

ஒன்று வருவதற்குள் தூங்கி விடுவது என் வழக்கம்.

## அத்தியாயம் எட்டு

நான் ஒன்று வரை எண்ணி முடித்திருந்தேன்.

தூக்கம் சுத்தமாய் வரவில்லை.

இதுவரை அப்படி நிகழ்ந்தது இல்லை.

வழக்கமாய் ஐம்பது தாண்டி எண்ணிக் கொண்டிருக்கும் போதே நான் உறக்கத்திற்குள் போய் விடுவேன்.

ஆனால் இன்று-

அடுத்து ஆயிரத்தில் இருந்து ஒவ்வொரு எண்ணையும் தலைகீழாய் சொல்ல ஆரம்பித்தேன்.

அது போய் கொண்டேயிருந்தது.

இடையில் என்னையும் அறியாமல் கண்களைத் திறந்து விட்டேன்.

அனிச்சையாக பக்கத்தில் திரும்பிப் பார்த்தேன்.

வாசுகி நிம்மதியாய் தூங்கி கொண்டிருந்தாள்.

துளி சலனமும் இல்லாமல் அவள் தூங்கிக் கொண்டிருப்பது எனக்கு ஆச்சர்யத்தினை அளித்தது.

அவ்வளவு பயந்தவள் அவள் தான்.

நான் மீண்டும் கண்களை மூடிக் கொண்டேன்.

உறக்கம் வரவேயில்லை.

தண்ணீர் தாகம் அதீதமாய் எடுத்தது.

எழுந்து அறையைத் திறந்து கொண்டு வெளியில் வந்தேன்.

அங்கே இருந்த காமன் டைனிங் ரூமில் மூத்த தயாரிப்பாளர் ஸ்ரீனிவாசன் உட்கார்ந்திருந்தார்.

அவர் கைப்பேசியில் யாருடனோ மெல்லியக் குரலில் பேசிக் கொண்டிருந்தார்.

என்னைப் பார்த்ததும் கைப்பேசியை அடைத்து விட்டார்.

கையில் சிகரெட் வேறு.

நான் ஃப்ரிட்ஜில் இருந்து அரை சில்லிப்புடன் இருந்த வாட்டர் பாட்டிலை எடுத்து மூடியைத் திறந்து தண்ணீரை குடித்த படியே அவர் எதிரில் உட்கார்ந்தேன்.

இந்த தனியார் தொலைக்காட்சி ஆரம்பித்த நாளில் இருந்தே அவர் இங்கே இருக்கிறார்.

அவரும் இன்னொரு சீனிய ப்ரொடீயூசரான சிவஞானமும் இவரும் தான் ஆரம்பத் தினத்தில் இருந்து உள்ளார்கள்.

அதிகம் பேச மாட்டார்.

சிகரெட் ஒன்றை ஊதிக் கொண்டிருந்தார்.

என்னைப் பார்த்ததும் சிகரெட்டினை ஆஷ்ட்ரேவினுள் திணித்து நசுக்கினார்.

"என்ன லதா தூக்கம் வரலையா?"

"வரலை சார்?"

"பயமா இருக்கா?"

"இல்லே சார்,ஆனால் மனம் ஒரு நிலையில் இல்லை,சுரேஷோட மர்ம மரணம் என்னமோ மனசுல ஓடிட்டே இருக்கு?"

"நீ நம்பறயோ இல்லையோ நானும் அதைதான் நினைச்சுட்டு இருந்தேன்,நாம இருந்தது க்ளோஸ்ட் ஏ.சி.ரூம்ல்ல இருந்தோம்,அந்த இடத்திலே எப்படி பாம்பு வந்து கொத்திட்டு போயிருக்கும்,சம்திங் ஃபிஷ்ஷி"

"என்ன சார் அப்படி சொல்றீங்க,ப்ரேதப் பரிசோதனையிலேயே அந்த பாம்பு கடிச்ச தடம் பதிஞ்சிருக்கறதை உறுதிப் படுத்தினாங்களே"

"அதுதான் என்னோட கேள்வியே,கொஞ்சம் மைண்ட்ல்ல ரிவைண்ட் பண்ணிப் பாருங்க,எப்படி அது நிகழ்ந்திருக்கும்"

"சார் நாம் இருந்த அறைக்குள்ள பாம்பு வந்து போனதையே இவ்வளவு யோசிக்கிறோம்,அந்தப் பெரியவர் வந்துப் போனதை நினைச்சு பாருங்க,எவ்வளவு பெரிய விஷயம்,குரல் மட்டும் பதிவாகியிருக்கு,நத்திங் மேஜிக்கில் அவர் நம்ம எல்லார் கிட்டயும் பேசினது எல்லாம் நிஜம்,நாம அவர் கிட்ட உரையாடினது நிஜம்,அப்புறம் எப்படி மாயமா அறையை சுழட்டிப் போட்டா மாதிரி நாற்காலிகள் பறந்தது,அதெல்லாம் நிஜமாவே நடந்ததே,அதை எப்படி நாம மறுக்க முடியும்,அதுக்கும் மேலே எல்லாமே பதிவாகியிருக்கு,ஒரு விஷயம் எனக்குப் புரியுது,அந்த பெரியவர் நம்பளை எச்சரிக்கத்தான் வந்தார்ன்னு தோணுது"

"அதனால நம்ப ஃப்ரொக்ராமை கேன்சல் பண்ணிடலாம்ன்னு தோணுதா?"

அவர் கேட்க-

"இல்லே சார்,இது மாதிரி நடக்க நடக்க எப்படியும் இதை செஞ்சே ஆகணும்ன்னு தோணுது"

"நல்லது இந்த தைரியம் நல்லதுதான்,நாம் நெகட்டிவ்வா நடக்கற விஷயங்களை யோசிப்போம்,ஆனா அதை நினைச்சுட்டு நிறுத்த வேண்டாம்ன்னுதான் என்னோட தீர்மானம்"

"உங்களோட மன உறுதியும் துணையும் இருந்தா நான் ஜெயிப்பேன் சார்"என்றேன்.

அப்பொழுதுதான் அந்த அலறல் என்னுடைய அறையில் இருந்து வந்தது.

'பட் பட்'டென்று எல்லோருடைய அறைக் கதவுகளும் திறந்தன.

நாங்கள் இருவரும் எழுந்தோம்.

எல்லோரும் எங்களைப் பார்த்தார்கள்.

'அது வாசுகியின் குரல்'என்றேன்.

என் அறையை நோக்கி அனைவரும் ஓடினோம்.

கதவினை வேகமாய் திறந்தார் சிவஞானம்.

உள்ளே கட்டில் மேலே நின்று கொண்டிருந்தாள் வாசுகி.

அறையில் இருந்த இரண்டாவது ட்யூப் லைட்டையும் எரிய விட்டேன்.

'பாம்பு பாம்பு'என்று அலறினாள்.

உள்ளே ஏ.சி.யின் சில்லிப்பு வேறு.

"எங்கே?"

"கட்டிலுக்கு அடியில்"என்றாள்.

ஸ்ரீனிவாசன்,"நாங்க பார்க்கறோம்,முதல்ல நீ கீழே இறங்கு"என்றார்.

கட்டில் முனைக்கு வந்தவள் குதித்து எங்களின் பக்கத்தில் வந்து ஒட்டிக் கொண்டு நின்றாள்.

சிவஞானம் கைப்பேசியில் அதிக வீரியம் உள்ள டார்ச் அப்ளிகேஷன் வைத்திருப்பார்.

அவர் முன்னே சென்று கட்டிலுக்கு அடியில் குனிந்து தன் கைப்பேசியில் இருந்த டார்ச் லைட்டை ஆன் செய்து கட்டிலுக்கு அடியில் அடித்துப் பார்த்தார்.

ரெண்டு மூன்று நிமிடம் பார்த்தவர்,"ஒண்ணுமில்லை,நீ கனவுல பயந்திருப்பே வாசுகி"என்றார்.

அவளோ,"இல்லே சார்,என்னுடைய பக்கத்தில் இருந்தது,நான் பயந்து எழுந்ததும் அப்படியே கட்டிலுக்கு அடியில போச்சு"என்றாள்.

"இங்கே வா,நான் இருக்கேன்,நீயே பாரு"என்றார்.

அவளும் பயத்துடன் அவர் அருகில் சென்றாள்.

குனிந்து அவர் கைப்பேசி டார்ச்சில் ஒளி வெள்ளத்தினை உள்ளே பாய்ச்ச குனிந்துப் பார்த்தாள்.

'காணுமே சார்'என்றாள்.

சிவஞானம் எழுந்தார்.

"கனவிலே பயந்து எழுந்திருந்து இருப்பே"என்றார் ஸ்ரீனிவாசனும்.

"சரி நேரம் ஆகுது எல்லாம் படுப்போம்,இப்படியே இருந்தா கொஞ்ச நேரம் கூட நல்ல தூக்கம் கிடைக்காது"என்றார்கள் எல்லோரும் ஒரே குரலில்.

அவர்களை அனுப்பி விட்டு நானும் வாசுகியும் கதவை மூடி விட்டு படுத்துக் கொண்டோம்.

நான் சொன்னேன்.

"வாசுகி கொஞ்ச நேரம் முன்னாடி நான் வெளியில் போனப்ப நீ நல்லா தூங்கிட்டு தான் இருந்தே,நான் நல்லாப் பார்த்தேன்,அதனால இது கனவு தான் நிம்மதியா தூங்கு"என்றேன்.

படுத்தவள் கம்பளியை முழுக்க இழுத்து மூடிக் கொண்டு தூங்க ஆரம்பித்தாள்.

எனக்கும் சொல்லி வைத்தாற் போல் தூக்கம் வர ஆரம்பித்தது.

உறங்கியும் போனேன்.

ஏதோ ஒரு உணர்வு என்னை மெல்ல உசுப்பி எழுப்பியது போல் இருந்தது.

நானும் கம்பளியை மூடிக் கொண்டு தான் உறங்கியிருந்தேன்.

முழிப்பு வந்ததும் எழுந்தேன்.

அறையில் ஜில்லிப்பு கூடியிருந்தது போல் ஒரு உணர்வு.

மெல்ல எழுந்து பக்கவாட்டு பலகையில் இருந்த ரிமோட்டை எடுத்து ஏசியை குறைத்தேன்.

அந்த வெளிச்சத்தில் ஏ.சி.மேல் இருந்து 'பொத்'தென்று அது விழுந்தது.

நான் கொஞ்சம் அரண்டு பார்க்க வேகமாய் விரைந்த அது என் கண் முன்னாலேயே கதவினை துளைத்துக் கொண்டு செல்வது போல் வெளியேறியது.

நீண்ட பாம்பு.

நான் பதைபதைப்புடன் எழுந்து அந்த கதவை நோக்கி விரைந்தேன்.

அது நுழைந்த இடத்தில் ஒரு துளி ஓட்டை கூட இல்லை.

எனக்கு லேசாய் அந்த ஏ.சியிலும் வியர்க்க ஆரம்பித்தது.

கதவினை மெல்ல திறந்து பார்த்தேன்.

எதுவும் கண்ணில் படவில்லை.

மீண்டும் கதவினை மூடிக் கொண்டு உள்ளே வந்து படுத்தேன்.

பல வித சிந்தனைகள்.

ஒரு பயக்கம் பயம்,ஒரு பக்கம் இந்த ஃப்ரொக்ராமை விடக் கூடாது என்கிற வெறி இரண்டும் எழுந்தது.

மீண்டும் படுக்கையில் படுத்தேன்.

எப்படி சாத்தியம்?

அப்படியானால் வாசுகி பாம்பைப் பார்த்தது உண்மைதான்.

ஏன் அது அவளை ஒன்றும் செய்யாமல் போனது.

எப்படி அவ்வளவு சீக்கிரம் ஏ.சியில் போய் உட்கார்ந்து கொண்டது.

மின்னல் வேகத்தில் பறந்தால் மட்டுமே அது சாத்தியம்.

ஏதேதோ சிந்தனைகள்.

அப்படியே உறங்கிப் போனேன்.

எவ்வளவு நேரம் தூங்கியிருப்பேன் என்று தெரியாது.

யாரோ என்னை உலுக்கி எழுப்பினார்கள்.

கம்பளியை விலக்கி பார்க்க டூத் ஃப்ரஷ்ஷினால் பற்களை துலக்கிக் கொண்டிருந்த வாசுகி சைகையில் நேரம் ஆச்சு என்று காட்டினாள்.

- தொடரும்

## அத்தியாயம் ஒன்பது

நானும் அவசரம் அவசரமாய் எழுந்து பல் துலக்க ஆரம்பித்தேன்.

நாங்கள் இருவரும் அறையை விட்டு வெளியில் வர எங்களுக்கு முன்னால் எல்லோரும் டைனிங் ஹாலில் காத்திருந்தார்கள்.

ஸ்ரீனிவாசன்,"வாங்க முதல்ல காபியை குடிங்க,மணி ஏழு முப்பது,நம்ப ஷெட்டியூல் படி நாம் இவ்வளவு நேரம் கிளம்பியிருக்கணும்,ஆனா எம்.டி பரத்துக்கு போன் பண்ணி குடும்ப ஜோதிடர் ஒன்பது மணிக்கு மேலே ஒன்பது மணி பதினஞ்சு நிமிஷத்துக்குள்ளே கிளம்பணும்ன்னு சொல்லிட்டாரு,அதனால தான் உங்களை நானா எழுப்பலை"என்றார்.

வாசுகியை பார்த்தவர்,"என்னம்மா பாம்பு ராணி நைட் அந்த அமர்க்களம் பண்ணிட்டே,நாங்க எல்லாம் பயந்தே போயிட்டோம்,நம்ம சிவஞானம் சார்தான் இந்த தொப்பையை வச்சுக்கிட்டு கட்டிலுக்கு அடியில குனிஞ்சு நீ சொன்ன பாம்பா இருக்கான்னு பார்த்தாரு"என்றார் சிரித்துக் கொண்டே.

"என்னது பாம்பா,நான் பார்த்தேனா,செம தூக்கம் எனக்கு நேத்து"என்றாள்.

அனைவரும் அவளை ஆச்சர்யத்துடன் பார்த்தனர்.

"என்ன சொல்றே,அப்ப இராத்திரி நடந்தது எதுவும் உனக்கு நினைவில் இல்லையா?"என்று கேட்டார்.

"ராத்திரியா என்ன நடந்தது?"என்று குழந்தை போல் கேட்டாள் வாசுகி.

பரத் ஒன்று விடாமல் சொன்னாள்.

"நோ சான்ஸ் எல்லோரும் சேர்ந்து என்னை கலாய்க்கிறீங்களா,எனக்கு அப்படி நடந்ததா

நினைவிலேயே இல்லையே"என்றாள்.

எல்லாருமே அதிர்ந்து போய் அவளைப் பார்த்தோம்.

அவள் 'வாட்'என்றாள்.

"நான் ஏன் பொய் சொல்லனும்,அதுல அர்த்தமே இல்லையே"

நான் தொண்டையை செருமிக் கொண்டு பாம்பு ஒன்று ஏ.சி.மேல் இருந்து பறந்து கதவின் வழியே வெளியே சென்றதை நிறுத்தி நிதானமாய் சொன்னேன்.

"ஓவ்"என்றார் ஸ்ரீனிவாசன்.

எல்லோருமே என்னை வினோதமாய் பார்த்தார்கள்.

"போறப் போக்கைப் பார்த்தா எனக்கே பயமாத்தான் இருக்கு"என்றார் பரத்.

கொஞ்ச நேரத்தில் டிபன் வந்து விட்டது.

எம்.டி.யும் வந்து விட்டார்.

எல்லோரும் சாப்பிடும் போது "எல்லாம் தயார் தானே?"என்று கேட்டார் எம்.டி.

"ம்,பட் நேத்து ராத்திரியும் இரண்டு வினோத சம்பவங்கள்"என்றார் சிவஞானம்.

"என்னாச்சு?"பொங்கலை ஸ்பூனால் எடுத்து நளினமாய் சாப்பிட்டவாறே கேட்டார்.

சிவஞானம் விவரமாய் சொல்ல எம்.டி.,"இந்த ஹால்ல தான் கேமிரா இருக்கே,அதைப் போட்டு பார்த்தா பாம்பு கதவை ஒட்டைப் போட்டு வெளியில் வந்தது தெரியாதா?"என்றார்.

பரத் "எனக்கு அந்த யோசனை வரவேயில்லையே"என்ற பரத் இண்டர்காமில் டைனிங் ஹாலின் டிஸ்கையும் டிஸ்ப்ளேவிற்கு சின்ன மானிட்டரையும் எடுத்து வர சொன்னான்.

"சாப்பிட்டு முடிச்ச உடனே கிளம்பிட வேண்டியது தான்,துணை கமிஷனர்,ரம்யா,ராம்சந்தர் மூவரும் வந்துடுவாங்க,இங்கிருந்தே கிளம்பறாங்க,துணை கமிஷனர் ஐ.ஜி.கிட்ட ஸ்பெஷல் பர்மிஷன் வாங்கியிருக்கார் நம்ம கூட வர்றதுக்கு"என்றார்.

சாப்பிட்டு முடிக்கும் வேளையில் அவர்கள் கீழே வந்திருப்பது ரிசப்ஷன் மூலம் தெரிய வர மேலே அவர்களை அனுப்பச் சொன்னார் எம்.டி.

அவர்கள் வந்ததும் கைக் குலுக்கியவர்,"இன்னும் கொஞ்ச நேரத்துல சரியா ஒன்பது மணிக்கு அப்புறம் கிளம்பறோம்"என்றவர் இரவில் நடந்த விஷயங்களை சொன்னார்.

டிஸ்க் வந்தது.

நான் தயாரிப்பாளருடன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தது,அப்பொழுது கேட்ட அலறல் சப்தம் எல்லாம் தெளிவாய் கேட்டது.

கடைசியில் நானும் வாசுகியும் தங்கியிருந்த அறையின் கதவில் இருந்து 'விருட்'டென்று வெளியேறியது அந்தப் பாம்பு.

பின் 'சட்'டென்று மறைந்தது.

நான் ஆடிப் போனேன்.

வாசுகி எல்லோரும் அறைக்குள் நுழைவதைப் பார்த்து மிரண்டு போனாள்.

"அப்படின்னா நான் உண்மையிலேயே கத்தினேனா?"என்று கேட்டாள்.

"சந்தேகமேயில்லாமல்"என்றேன்.

காமிராவில் எம்.டி.டிஸ்க்கை எடுத்து வரச் சொல்வது வரை பதிவாகியிருந்தது.

சிறிது நேரம் அறையில் மௌனம் நிலவியது.

தன் கைக்கடிகாரத்தினைப் பார்த்த எம்.டி.,"ஓ.கே லெட் அஸ் ஸ்டார்ட்"என்றாள்.

எல்லோரும் கிளம்பி கீழே வந்தோம்.

எங்களது பிற ஊழியர்கள் 'ஆல் த பெஸ்ட்'சொல்லியனுப்பியது.

வண்டியில் எல்லோரும் ஏறினோம்.

நான் மூனாவது டெம்போ ட்ராவலரில் ஏறிய போது என்னையும் அறியாமல் எங்கள் தொலைக்காட்சி கட்டடத்தின் மேலே பார்த்தேன்.

அங்கே சுவரில் நின்று கொண்டிருந்தார் அந்தப் பெரியவர்.

எங்கள் அலுவுலகத்திற்குள் புயல் போல் நுழைந்து எங்களை எச்சரித்து மின்னலாய் மறைந்தவர்.

நான் சின்ன 'திடுக்'கிடலுடன் எனது கைப்பேசி காமிராவினை மேல் நோக்கி திருப்ப மின்னலாய் மறைந்தார்.

எல்லோரும் ஏறியது மூன்று வண்டிகளும் கிளம்பின.

எனக்கு பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள் ரம்யா.

கொஞ்சம் செக்சியாகவே உடை அணிந்திருந்தாள்.

அது எந்த வித உறுத்தலையும் ஏற்படுத்தவில்லை.

அவளின் உடல் வாகிற்கு மிகவும் பொருத்தமானதாக இருந்தது.

'லெக் இன்சில்' அவள் கால்கள் மிக அழகாய் இருந்தன.

"சொல்லுங்க லதா,எப்படி உங்களுக்கு இந்த டாபிக்ல்ல இண்டரெஸ்ட் வந்திச்சு?"என்று கேட்டாள்.

நான் புத்தகத்தில் ஆரம்பித்து விவரமாய் சொன்னேன்.

அவள் தன் அனுபவங்களை சொல்ல ஆரம்பித்தாள்.

அவள் பேசும் போது அதீத ஆர்வத்துடன் பேசுவது எனக்குப் புரிந்தது.

நான் அவள் அழகிய கண்களையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

மெல்லிய வான் நீலத்தில் இருந்தது அவள் கண்கள்.

"என்ன அப்படிப் பார்க்கறீங்க?"

"இல்லே உன்னோட கண்கள் ரொம்ப அழகா இருக்கு,ஒரு பெண்ணான எனக்கே அது ஒரு 'கிக்'கை தருது"என்றேன்.

"சர்தான் எங்கம்மா சொல்ற மாதிரியே சொல்றே,அவங்க இப்படித்தான் சொல்வாங்க,சின்ன வயசுல என்னைப் பார்த்த நர்ஸ் இந்தப் பொண்ணு பாம்புக் கண்ணோட பொறந்திருக்கு"என்று சொன்னாளாம்.எங்கம்மா அடிக்கடி சொல்வாங்க,அந்த நர்ஸ் சொன்னது சரிதான் உன்னோட கண்ணு பாம்பு கண்ணு மாதிரி கவர்ச்சியா இருக்குன்னு,அதெல்லாம் விட ஒரு தமாஷான விஷயம்,நான் காலேஜ் படிக்கும் போது ஒரு லெக்சரர் என்னை ரொம்ப ரசிக்க ஆரம்பிச்சுட்டாரு,கடைசி செமஸ்டர்ல்ல என்னை காபி ஷாப்புக்கு அழைச்சுட்டுப் போய் ப்ரொபசல் பண்ண ஆரம்பிச்சுட்டார்,நான் ஒரே ஒரு விஷயம் தான் சொன்னேன்,என்னோட கண்ணை

விடாம பத்து நிமிஷம் நீங்கப் பார்த்தா நான் இப்பவே எங்கம்மாகிட்ட உங்களை அழைச்சிட்டுப் போய் அறிமுகப் படுத்தி வச்சு,கல்யாணம் பத்தி பேச வைக்கறேன்னு"

அவரும்'ஓ.கே'ன்னு முயற்சிப் பண்ணாரு,ஒரு நிமிடம் கூட பார்க்க முடியலை,கையை குலுக்கிட்டு லெட் அஸ் பீ ஃப்ரண்ட்ஸ்சுன்னு சொல்லிட்டுப் போயிட்டாரு"என்றாள்.

"நான் முயற்சிப் பண்ணவா?"

"அட அதுக்காக நான் உன்னை லவ் பண்ண முடியாது"என்று வாய் விட்டு சிரித்தாள்.

"எங்களுக்கு முன்னால் உட்கார்ந்திருந்த பரத்,"ரொம்ப தீவிரமா போகுதே உங்க டிஸ்கஷன் நான் வேணும்ன்னா பார்க்கட்டுமா ரம்யா?"

"உங்களுக்கு அந்த சான்ஸ் தர்றேன் காட்டுக்குப் போனதும் வச்சுக்கலாம்,அப்படியே உங்க ஒய்ஃப் கிட்டயும் பர்மிஷன் வாங்கிடுங்க"என்றாள்.

"அட அவருக்கு கல்யாணம் ஆயிடுச்சுன்னு உனக்கு எப்படித் தெரியும்"

"அவரைப் பத்தி மட்டுமல்ல இங்க என் கூட பயணிக்கிற எல்லார் பற்றியும் செக்யூரிட்டி ரீசனுக்காக எல்லா விவரங்களையும் சேகரிச்சு நக நுனியில வச்சிருக்கோம்"என்றாள்.

"எந்த ரூட்ல போறாம்?"பரத்திடம் கேட்டாள்.

கோயமுத்தூர்,பாலக்காடு ரூட்ன்னு எம்.டி.முடிவு பண்ணியிருக்கார்,வழியிலே டீ ஃப்ரேக்,கோயமுத்தூர்ல்ல லஞ்ச் ஏற்பாடு பண்ணியிருக்கு"என்றான்.

நான் ரம்யாவின் கைகளைப் பார்த்தேன்.

'வழ வழ' வென்று இருந்தது.

என் பார்வையைப் புரிந்து கொண்டவளாய் அவள்,"நல்ல வேளை நீ ஆம்பளையா பொறக்கலை"என்றாள்.

நான் சிரித்தேன்.

என் சிரிப்பின் அர்த்தம் அவளுக்குப் புரியாது.

அத்தியாயம் பத்து

திடீரென்று பரத் ஆரம்பித்தான்.

"நாம ஏன் கோயமுத்தூர் போகணும் திண்டுக்கல்,போடி வழியா மூனாரு ஏறிடலாமே"
நானும் 'சரி'என்றேன்.

சொன்னதோடு இல்லாமல் முன்னால் சென்று கொண்டிருந்த டெம்போ ட்ராவலரில் இருந்த எம்.டி.யிடம் பேசினான்.

"ஓ.கே.நான் கோயமுத்தூர் பண்ணி சொல்லிடறேன்,மதிய லஞ்சுக்கு வரலைன்னு,அப்படியே உங்க ஓட்டுனருக்கு சொல்லிடுங்க,கிண்டி பாலம் ஏறிடலாம்"என்றான்.
அவனே முதலில் போய் கொண்டிருந்த காமிரா வேனிற்கும் தகவல் சொல்லி விட்டான்.
எதிர் பாராமல் மாறிய ப்ரொக்ராம்.

நான் ரம்யாவின் முகத்தினைப் பார்த்தேன்.
அவள்,"சிரித்துக் கொண்டே பரத் சொன்னதை உங்க எம்.டி.கேட்பாரு போலிருக்கு,எங்களை எம்.டி.சஜஸ்ட் பண்ணப்ப ஓ.கே பண்ணது இவர்தானாம்"
பரத் சிரித்துக் கொண்டே,"அட என்ன ஏங்க ஓட்டறீங்க?"
அவள் சிரித்தாள்.

'ஜில்'லுன்னு ஏதாவது குடிக்கணும்ன்னு போல் இருக்கு"
"பீர் நாட் அலவுட் இன் திஸ்"
"கூல்னா நான் பீர்ன்னு நீங்களே கற்பனை பண்ணிட்டீங்களா?"என்று என்னைப் பார்த்து சிரித்த படியே தமிழகத்துக்கு பெருமை சேர்க்கும் அந்த குளிர்பானப் பாட்டிலை எடுத்தான்.
எல்லோருக்கும் நீண்ட பேப்பர் கப்பில் ஊற்றிக் கொடுத்தான்.
"இந்த டெம்போ ட்ராவலர்ல்ல மட்டும் தான் இருக்கா?"
"எல்லாதுலயும் வாங்கி ரொப்பியிருக்கு,அவங்க அவங்க தேவைப் படும் போது குடிப்பாங்க,இப்ப நாம குடிப்போம்"என்றார் பரத்.
எல்லோரும் கையில் வாங்கி குடித்தோம்.
என்ன ருசி.
இதை விட்டு பன்னாட்டு பாணங்களை தேடி ஓடுபவர்களை நினைத்தாள் அவளுக்கு கோபம் தான் வந்தது.
நான் குடித்த படியே இருந்த போது ரம்யா தன் கையில் இருந்த பேப்பர் கப்பை ஒரே சிப்பில் குடித்தாள்.
பின் தனது லேப் டாப்பை எடுத்து பக்க வாட்டில் டாங்களர் சொருகி இண்டர்னெட் கனெக்ஷன் கொடுத்தாள்.
அவள் நான் விவாதத்தின் போது விவாதித்த ஆதாரப் புத்தகத்தின் பெயரைக் கேட்டாள்.
சொன்னேன்.
அவள் நெட்டில் நோண்ட ஆரம்பித்து விட்டாள்.
எனக்கு அடுத்து என்ன நடக்கப்போகிறது என்று மனதில் ஒரு திகில்.
சொல்லி வைத்தாற் போல் டெம்போ ட்ராவலர் திடீர் என்று சடன் ஃப்ரேக் போட்டு நின்றது.
பரத் அவசரம் அவசரமாய் கீழே இறங்கினான்.
ரம்யா நான் தயாரிப்பாளர்கள் என் உள்ளே இருந்த அனைவரும் இறங்கினோம்.
எங்களது மூன்று வண்டிகளும் வரிசையாய ஓரம் கட்டி நிற்க வைக்கப் பட்டிருந்தது.

முன்னாலும் வரிசையாய் வாகனங்களை நிறுத்தி வைத்திருந்தார்கள்.

ஓரமாய் நின்று இருந்த ஊர் பெரியவர் சொன்னார்.

"நாகராஜன் ரோடை க்ராஸ் பண்றான்,இங்க இருக்கிற பல கிராமங்களுக்கு குல தெய்வம்"என்றார் சாதரணமாக.

வண்டி காட்டாங்களத்தூரை தாண்டியிருப்பதை உறுதி செய்தார் பரத்.

எதிர் திசையிலும் வாகனங்கள் நிறுத்தி வைக்கப் பட்டிருந்தன.

எங்களது கேமிரா மேன் முன்னால் கேமிராவோடு இறங்கியிருந்தார்.

முன்னால் சென்று பார்த்தோம்.

அந்த நீண்ட பாம்பு மெல்ல ஊர்ந்து ரோடின் குறுக்கே கடந்து கொண்டிருந்தது.

பெரியவர் தொடர்ந்தார்.

"முதல்ல ரெட்டையாய் தான் இருந்தது,ராத்திரியிலே கடக்கும் போது ஒண்ணு லாரி ஏறி செத்துப் போச்சு,அதுக்கப்புறம் இதே இடத்துல தொடர்ந்து விபத்துகள்.அப்புறம் கிராம வாசிகள் தொடர்ந்து இங்கே ரெண்டு பக்கமும் வேகத் தடைப் போட்டோம்,மாறி மாறி காவல் இருப்போம்,இப்ப எல்லாம் காலை நேரத்துல தான் கடக்குது,உள்ளே எங்கயோ போய் மறைஞ்சுடுது,ஊர் காரங்க யாரும் அதை தேடிப் போறது இல்லே,அதுவும் யாரையும் தொந்தரவு செய்யறது இல்லே"

எம்.டி.கேமிரா மேனைப் பார்த்து,"எல்லாத்தையும் ஷூட் பண்ணீங்களா?"என்று.

"பண்ணிட்டேன் சார்."

அது கடந்ததும் கிராமத்து ஆசாமி ஒருவன் வண்டிகளை கடக்க அனுமதித்தான்.

எம்.டி.எங்களுடைய வண்டியில் ஏறிக் கொண்டார்.

வண்டி கிளம்ப-

"ஸ்டேரேஞ்"என்றார்.

"இந்த ஏரியா பேர் எல்லாம் நோட் பண்ணிட்டீங்களா?"

"ரம்யா நான் நெட்ல்ல நேவிகேஷன்ல தான் இருந்தேன்,நாகராஜபுரம்ன்னு தான் இந்த ஊர் பேரே காட்டுது"

அந்த நேரத்தில் பரத்தின் கைப்பேசி ஒலித்தது.

எடுத்தான்.

'ஓ அப்படியா,ம் ஓ.கே.சொல்லிடறேன்"என்றான்.

போனை அடைத்தவன் எங்கள் பக்கம் திரும்பினான்.

"நம்ம லைவ் வேன் ட்ரைவர் கை காட்டிட்டு இருந்த கிராமத்து பையனை முதல்ல கவனிக்கலையாம்,சரியான நேரத்துல நிறுத்தலைன்னா வண்டி அது மேல ஏறி இருக்குமாம்"என்றார்.

நான் ஏதேச்சையாக கண்ணாடி வழியே வெளியில் பார்த்தேன்.

ரோடின் ஒரு புறம் அலுவுலகத்திற்கு வந்து புயலாய் மறைந்த பெரியவர் நின்றிருந்தார்.

நான் விக்கித்துப் போக ஷணப் பொழுதில் மறைந்து விட்டார்.

எனக்கு ஒன்று புரிந்தது.

அவர் தொடர்ந்து ஏதோ எச்சரிக்கை தந்து கொண்டேயிருக்கிறார்.

எல்லாவற்றுக்கும் மேல் இப்பொழுது கொஞ்ச நேரம் முன்னால் ஹைவேஸ் ரோடில் அணைத்து பேருந்துகளும் நிற்க கடந்த பாம்பும் அவர்தானோ இருந்து.

எனது மனதில் தோன்றியதை சொல்ல வண்டியில் இருந்த அனைவரும் அதிர்ந்து போய் என்னைப் பார்த்தார்கள்.

எம்.டி.ஏதோ ஆழ்ந்த யோசனையில் இருந்தார்.

அவரது சேட்லைட் போன் அடித்தது.

மத்திய அரசின் அனுமதி பெற்று அவர் அதை வாங்கி வைத்திருக்கிறார்.

அதை திறந்த அவர் எங்களை ஒரு முறை பார்த்தார்.

'ஐ வில் யூ கால் யூ பேக்'என்று அடைத்து விட்டார்.

கிளம்பும் போது தொலைக்காட்சி பில்டிங் மீது அவரைப்பார்த்ததை சொன்னேன்.

ரம்யா,"என்னை தப்பா நினைச்சுக்காதே,யூ வார் சோ மச் அப்சஸ்ட் வித் யுவர் நியூ வெஞ்சர்,அதனால் உனக்கு பார்க்கறது எல்லாமே பாம்பாவே தெரியுது,உன் கூட இப்ப பயணிக்கிற நாங்க எல்லாமே மனுஷங்கதான்"என்றாள் சிரித்துக் கொண்டே.

நான் கொஞ்ச நேரம் மௌனமாய் இருந்தேன்.

பரத்திற்கு கைப்பேசியில் அழைப்பு வந்தது.

"ஓ அப்படியா ரொம்ப சந்தோஷம்,மற்ற தொலைக்காட்சிக்காரங்களுக்கு இவ்வளவு நேரம் அல்லு கலண்டிருக்கும்"என்றபடியே கைப்பேசியை அடைத்தார்.

பின் எங்கள் பக்கம் திரும்பினார்.

"நம்ம ப்ரமோ ஓட ஆரம்பிச்சுடுச்சு,பயங்கர ரெஸ்பான்ஸ்,எங்கெங்கே இருந்தோ போன் வருதாம்,நான் ஸ்டாப்பா தொடர்ந்து போன் வந்துட்டே இருக்குன்னு சொல்றாங்க"என்றார்.

எம்.டி.எந்த சலனமும் இல்லாமல் உட்கார்ந்திருந்தார்.

எனக்கு அது என்னமோ போல் இருந்தது.

நான்.."சார் சார்"என்றேன்.

'சட்'டென்று நிமிர்ந்து பார்த்தவர்"சொல்லு லதா"என்றார்.

நான் பரத்தைப் பார்த்தான்.

அவரும் புரிந்து கொண்டவர் போல் எங்களிடம் சொன்ன விஷயத்தை முழுவதும் மீண்டும் சொன்னார்.

எம்.டி.க்கு முகம் மாறியது.

மெல்லியப் புன்னகை அவர் முகத்தில் இருந்து எட்டிப் பார்த்தது.

"லதா,நான் முழுமையா நம்பறேன்,இந்த ப்ரொக்ராம் நம்மளோட தொலைக்காட்சி நான் ஃபிக்ஷன் தொடர்ல்ல நம்பர் ஒன் ஆகப் போவுது,எனது கணிப்பு சரியா இருந்ததுன்னா,கதைத் தொடர்களை கூட இது பீட் பண்ணிடும்"என்றார்.

"எல்லாம் உங்க,நம்ம அத்தனை பேரோட சப்போர்ட்ல்ல தான் சார் இந்த தொடர் நிக்கும்"என்றேன்.

வண்டி வேகமாய் போய் கொண்டேயிருந்தது.

ரம்யா,"நான் ஒரு வெப் சைட்டுல படிச்சேன்,நீங்க சொல்ற கோவிலே ஒரு கற்பனை கோவில்ன்னு போட்டு இருக்காங்க"

எனக்கு 'சுர்'ரென்று கோபம் ஏறியது.

"அதுக்கா இவ்வளவு பாடுபட்டு டிஸ்கஸ் பண்ணி உங்களையெல்லாம் செக்யூரிட்டிக்கு அழைச்சுகிட்டு போறோம்"என்றேன்.

என் குரலில் தொணித்த கோபத்தில் எம்.டி.கொஞ்சம் கலவரம் ஆனார்.

"நான் கொடுத்த அந்த ஆங்கில எழுத்தாளர் வெப் சைட்டுல பார்த்தீங்களா,ரொம்ப விவரமா எழுதியிருப்பாரு"

"அதெல்லாம் பார்த்தேன்,அப்படியே தேடும் போது இதுவும் கண்ணுல பட்டது,உங்களை டிஸ்கரேஜ் பண்ணவோ,கிண்டல் பண்ணவோ இதை நான் சொல்லலை"என்றாள்.

## அத்தியாயம் பதினொன்று

வண்டியின் ஓட்டுனர் வண்டியின் வேகத்தை குறைத்து வண்டியை மெல்ல ஓரம் கட்டினார்.

எங்களின் வண்டி நிற்பதைப் பார்த்து முன்னால் சென்று கொண்டிருந்த எங்களது கேமிரா வேனும் மற்றும் இன்னொரு டெம்போ ட்ராவலரும் ஓரம் கட்டின.

எனக்கு பதைப்பதைப்பாக இருந்தது.

இன்னும் எத்தனை தடவை எதாவது தடை வந்து கொண்டே இருக்கப் போகிறதோ?

ஒட்டிக் கொண்டிருந்த ஓட்டுனர் இறங்கி ஓடினார்.

பரத் தொடர்ந்து எம்.டி.கீழே இறங்க நாங்களும் இறங்கினோம்.

பின்னால் இருந்து மேலே ஏறிய ஓட்டுனர் பதைப்பதைப்புடன் கீழே விழாத குறையாக குதித்தான்.

"என்ன?"என்றேன்.

பெரிய பாம்பு ஒண்ணு கிடக்குது,சுருண்டு.

உசிர் இருக்கறா மாதிரி தான் இருக்கு.

'ஷிட்'என்றார் எம்.டி.

மற்ற வண்டிகளின் ஓட்டுனர்கள் வண்டியில் இருந்த மற்றவர்கள் எல்லாம் இறங்கி ஓடி வந்தார்கள்.

கேமிராமேனை அழைத்து வண்டி மேல் இருந்த பாம்பை படம் எடுக்க சொன்னார் எம்.டி.

கேமிரான மேலே ஏறி படம் எடுத்த போது தான் அது நடந்தது.

பக்கத்தில் இருந்த மரத்தின் தொங்கிய கிளைக்கு தாவியது அந்த பாம்பு 'சடா'ரென்று.

எல்லோரும் அதன் தாவலைப்பார்த்து பிரமித்து நின்றோம்.

எனக்கு கொஞ்சம் உதறல் இருக்கத்தான் செய்தது.

இந்த முறை எல்லோருக்கும் ஏதோ பயம் எழுந்திருந்தது.

எல்லோரும் வண்டிக்குள் ஏறி வண்டி கிளம்பிய பின்பும் மௌனமாய் வந்தனர் எல்லோரும்.

ரொம்ப நேரம் மௌனமாய் வந்த எம்.டி.திடீர் என்று என்னைப் பார்த்து,"லதா இந்த தொடர் எண்ணம் எத்தனை நாளா உங்க மனசுல இருந்தது?"என்றார்.

நான் சொன்னேன்.

"கிட்டத்தட்ட ஒரு வருஷமா சார்,அதற்கான தகவல்களை நான் திரட்ட ஆரம்பிச்சேன்,முதன் முதல்ல அதைப் பத்தி சொன்னது எங்கப்பாதான்,அவர் சின்ன வயசுல நடந்த விஷயத்தை எல்லாம் சொல்வாரு,என்னோட ஃபாதர் ரெண்டு மூணு வேலையில இருந்தார்,அப்போ நாங்க கொஞ்ச நாள் கேரளாவில இருந்தோம்,அவருக்கு நல்லா மலையாளம் பேச வரும்,அவரோட வேலை செஞ்ச ஒருத்தர்தான் இந்த விஷயத்தை அவர் கிட்ட சொல்லியிருக்காரு,எனக்கு அது மனசுக்குள்ளேயே

இருந்தது போல,அப்புறம் ஒரு வருஷம் முன்னாடி நானும் அம்மாவும் கோத்தகிரியில ஒரு கல்யாணத்துக்கு போயிருந்தோம்,அங்க ஒரு இடத்துல பெரிய நாகப்பாம்பு ஒண்ணைப் பார்த்தோம்,எனக்கு அப்பா சொன்னது எல்லாம் ஞாபகம் வந்துடுச்சு,அப்பொழுதிலிருந்தே அந்த பழைய அப்பா சொன்ன விஷயங்கள் மறுபடியும் என்னோட அடி மனசுல இருந்து மேலே வந்தது,இதை எப்படியும் ஷூட் பண்ணனும்,சக்ஸஸ் ஃபுல் தொடரா வரும்ங்கிற எண்ணம் வலுப் பெற ஆரம்பிச்சுடுச்சு,எனக்கு எப்பவுமே அம்மன் கோவிலுக்கு போற பழக்கம் நாங்க மயிலாப்பூர்ல்ல இருக்கும் போது ஏற்பட்டது,நான் வாரா வாரம் போவேன் அங்க இருக்கற முண்டைக் கன்னி அம்மன் கோவிலுக்கு போவேன்,அங்கே இருக்கற பாம்பு புத்துக்கு பால் ஊத்தற பெண்கள் பக்தியோடயும் ஒரு வித பயத்தோடயும் ஊத்துவாங்க,எனக்கு தெரியும் அது உள்ள வயசான பாம்பு இருக்குன்னு"

எம்.டி.மட்டுமல்ல பரத் மற்றவர்கள் எல்லோரும் என்னையே 'ஆ'வென்று பார்த்துக் கொண்டிருந்தது எனக்குப் புரிந்தது.

பரத்,"பாம்பு மேல உங்களுக்கு இத்தனை இஷ்டமா?"என்றான் படு சீரியசாக முகத்தினை வைத்துக் கொண்டு.

நானும் சிரித்துக் கொண்டே"ஆமாம் சார்,இன்னொரு விஷயம் தெரியுமா,எங்கம்மா ஒரு தடவை சொன்னாங்க,சமீபத்துல நான் நாலாவது படிக்கும் போது அம்மாகூட உட்கார்ந்து தொலைக் காட்சி பார்த்துட்டு இருந்தேனாம்,அப்ப அதுல சைனால பாம்பை சாப்பிடறாய் காண்பிச்சிருக்காங்க,அமைதியா இருந்த நான் கோபத்துல கையில் இருந்த டீ கப்பால தொலைக் காட்சி மானிட்டரை ஓங்கி அடிச்சுட்டேனாம்"என்றேன்.

'அட'என்ற எம்.டி."நல்லவேளை நீங்க சொன்னதும் இதை ஓ.கே.பண்ணிட்டேன்,இல்லேன்னா என் மேல என்னத்தை வீசியிருப்பீங்களோ"என்று சீரியசாய் போய் கொண்டிருந்த விஷயத்தை கொஞ்சம் சகஜமாக்கினார்.

"நான் கூட தாய்லாந்துல பாம்பை ஃப்ரை பண்ணி சாப்பிடறதை நேரே பார்த்திருக்கேன்,அப்படியே குமட்டிக்கிட்டு வந்துடுச்சு"என்றான் பரத்.

ரம்யா ஏதோ யோசனையில் இருந்தாள்.

அவள் தனது மடிக்கணினியை விடாமல் நோண்டிக் கொண்டிருந்தாள்.

அவள் நாங்கள் எல்லாம் பதைபதைத்து இறங்கிப் பார்க்கப் போன போது கூட அவள் அமைதியாய் தான் உட்கார்ந்திருந்தாள்.

ராம் சந்தர் எங்களுடன் இறங்கி வந்தார்.

நான் அவர் பக்கம் திரும்பினேன்.

அவர் அமைதியாய் உட்கார்ந்திருந்தார்.

நான் பார்ப்பதை உணர்ந்தவராய் என் பக்கம் திரும்பினார்.

"மேடம்,உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா,டி.ஐ.ஜி.சொன்ன உடனேயே இந்த ப்ரொஜக்ட்ல்ல செக்யூரிட்டியா வர ஒத்துக்கிட்டேன்,ஏன் தெரியுமா?எனக்கு இது மாதிரி மிஸ்டிக் அதாவது மர்மமான விஷயங்கள்ல்ல எல்லாம் பயங்கர ஆர்வம் உண்டு,எனக்கே சில விஷயங்கள் நினைவில் வருது,ஒரு தடவை நானும் ஒரு வாழும் பாம்பை எங்க ஊர்ல்ல பார்த்திருக்கேன்,உங்களுக்கு கேட்டா சிரிப்பா கூட வரலாம்,ஆன நடந்த விஷயத்தை என்னால எத்தனை வருஷம் ஆனாலும் மறக்க முடியாது"என்றார்.

எம்.டி.,"லதா இப்ப அவர் சொல்றதை கேட்டுக்கங்க,காட்டுக்குள்ள நாம போக ஆரம்பிச்சதும்,இப்ப அவர் சொல்ற விஷயத்தை அப்படியே ரிக்கார்ட் பண்ணிக்கலாம்"என்றார்.

"எஸ் சார்"என்ற நான் ராம்சந்தர் பக்கம் திரும்பி,"நீங்க சொல்லுங்க"என்றேன்.

"எங்க வீடு கும்பகோணம் பக்கத்துல ஒரு கிராமம்,திருவிடைமருதூர்ன்னு,எங்க வீடு நீண்ட வீடு,வாசல்லேந்து பார்த்தா பின்னாடி கிணறு தெரியும்,வெளியில தான் தனியா பாத்ரூம்,பூசணி,புடலை,கத்தரிக்காய் எல்லாம் போட்டு

இருந்தோம்,ஒரு நாள் இராத்திரி நான் பின்னாடி போயிட்டு வரும் போது'உஸ் உஸ்'னு சப்தம்,நான் பயந்து போய் வேகமா வந்தேன்,என் பின்னாடியே அது வந்தது,நடு ஹாலுக்கு வந்துடுச்சு,எங்கப்பா அம்மா எல்லாம் கையெடுத்து கும்பிடறாங்க,எங்க தோட்டத்துல வாழும் பாம்பு இருக்குன்னு கேள்விப் பட்டிருக்கோம்,அது வரைக்கும் நாங்க யாரும் பார்த்தது இல்லே,தாத்தா கூட சாகறதுக்கு முன்னாடி சொன்னாரு,வீட்டுல பின்னாடி வாழும் பாம்பு இருக்குடா,அதை ஒண்ணும் பண்ணிடாதீங்க,அதுவும் நம்பளை ஒண்ணும் பண்ணாதுன்னு,வீட்டுக்குள்ள வந்த பாம்பை பார்த்ததும் எல்லாம் அப்படியே நிக்கறோம்,அதோட வாய் பகுதியில் இருந்து ரத்தம் மாதிரி கொட்டுது,எங்கப்பா அது கிட்ட தைரியமா போய் பார்த்தாரு,அதோட நாக்குல தோட்டத்துல இருந்த ஏதோ பெரிய முள்,எத்தனை நேரம் ஆச்சுன்னு தெரியலை,அதைப் பிடுங்கி விட்டாரு,கொஞ்ச நேரம் சும்மா இருந்த பாம்பு எங்க எல்லாரையும் சுத்தி வந்து முன்னாடி நின்னு படம் எடுத்து தலையை ஓங்கி ஓங்கி தரையில அடிச்சு செத்துப் போச்சு,அப்ப உயிரோட இருந்த பாட்டி சொன்னாங்க,இனிமே நம்ம குடும்பத்துல எந்த வம்சத்துலயும் பாம்பு கொத்தாதுன்னு சொன்னாங்க,நாங்களே எங்க தோட்டத்துல அதை கொண்டு போய் புதைச்சிட்டோம்"என்றார்.

வாசுகி சிரித்தாள்.

"சார் இது எல்லா கிராம வீட்டுலயும் சொல்ற கதை,இதை பல பேர் சொல்லி பல தடவை கேட்டாச்சு"

"ப்ளீஸ் கிண்டல் பண்ணாதீங்க,நான் கண்ணால பார்த்தது,நான் ஏன் பொய் சொல்லணும்"என்றார் அவர்.

எம்.டி.யும்,"உண்மையைத்தான் சொல்றாரு,அவரு சொல்லும் போதே அது தெரிஞ்சுது"என்றார்.

ரம்யா,"ஆமாம்,உண்மையத்தான் சொல்றார்,நாங்க இங்க வர கிளம்பினப்பவே இந்த விஷயத்தை என் கிட்ட பகிர்ந்துகிட்டார்"

எம்.டி.பரத்திடம்,"முதல்ல போற கேமிரா வேன்ல்ல இருக்கற ஓட்டுனருக்கு சொல்லுங்க,நாம் எல்லாம் சாப்பிட்டலாம்"என்றார்.

பரத் கைப்பேசியை எடுத்தார்.

அத்தியாயம் பன்னிரெண்டு

எம்.டி.பரத்தைப் பார்த்து, "பி.எம்.ஆர்.எடுத்து வச்சிட்டீங்களான்னு செக் பண்ணீங்களா?"என்று கேட்டார்.

"புதுசு இருபது பீஸ் சார்ஜ் பண்ணி இருக்கு சார்,பதினஞ்சு கிலோ மீட்டர் கிலோ மீட்டர் ரேஞ்,இந்த புது வாக்கி டாக்கியில் நாம பேசிக்கலாம்,காட்டு எல்லைக்குள்ள இறங்கினதும் எல்லார் கையிலயும் கொடுத்துட வேண்டியதுதான்"என்றார்.

"அவசியம் தான் ஒருத்தரை விட்டு தனியா போனாலும் நாம ஒருத்தர் கிட்ட ஒருத்தர் கம்யூனிகேட் பண்ணிக்கலாம்"என்றார் எம்.டி.

நான் மீண்டும் ரம்யாவை கவனித்தேன்.

அவள் சலிக்காமல் லேப் டாப்பை நோண்டி கொண்டேயிருந்தாள்.

நான் அப்பொழுதுதான் அவளின் கால்களைப் பார்த்தேன்.

சாக்ஸ் அணிந்திருந்தாள்.

செருப்புக்கு எதற்கு சாக்ஸ்.

தேவையில்லாமல் என் மனம் ஏதோ ஆராய்ச்சியில் இறங்கியது.

சேலத்தில் ஒரு ஹோட்டலில் நிறுத்தினார்கள் சாப்பிட.

சரியாய் சொல்லி வைத்தாற் போல் நாங்கள் உள்ளே நுழையும் போது எம்.டி.யின் கைப்பேசி ஒலித்தது.

காதில் பொருத்தி கேட்டவர்,"ஓ இஸ் ட்,ஒன் செகண்ட் அவங்க கிட்டயே கொடுக்கறேன்"என்றார்.

என் அருகில் வந்து என் கையில் கைப்பேசியை கொடுத்து,"பேசுங்க"என்றார்.

எடிட்டர்.

"சொல்லுங்க சார் லதா"என்றேன்.

"லதா நம்ம ப்ரோமா போட்டதிலிருந்து ஒய்வு இல்லாம போன் வந்துட்டே இருக்கு,எப்ப ஆரம்பிக்க போறீங்கன்னு,ஏஜென்சி காம்பைன் பிச்சிகிட்டுப் போகுது,ப்ராண்ட் ஸ்பான்சர் கிடைச்சாச்சு"

"ஓ சூப்பர் சார்"

"டெலிபோன் ஆப்பரேட்டர் வர போனுங்களுக்கு பதில் சொல்லி டயர்ட் ஆகிட்டாங்க,40 லைனும் பிசி"என்றார்.

பேசிக்கொண்டேயிருந்தவர்,"எனிவே டேக் கேர் லதா"என்றார்.

"நானும் நம்ப டீமும் எப்பொழுதும் நல்லா இருப்போம் சார்"என்றேன்.

அவரிடம் பேசி முடித்ததும் கைப்பேசியை எனக்கு முன்னால் ஓட்டலின் உள் நடந்து கொண்டிருந்த எம்.டி.யிடம் கொடுத்தேன்.

எம்.டி.பற்றி கொஞ்சம் சொல்ல வேண்டும்.

டவுன் டு எர்த் பெர்சன்.

அவர் இந்த தொழிலை காதலிக்கிறார் என்றே சொல்ல வேண்டும்.

மூன்று நாலு தொலைகாட்சிகள் கோலோச்சிக் கொண்டிருந்த காலத்தில் உள்ளே நுழைந்தவர்.

பெங்களூரில் பிரபல கல்லூரி ஒன்றில் விஸ்காம் படித்தவர்.

அதன் பின் அமெரிக்காவில் மூன்று வருடம் தொலைக் காட்சி மீடியா பற்றி படித்தவர்.

அதன் பின் ஒரு இரண்டு வருடம் லண்டனில் ஒரு உயரிய மணி மேனேஜ்மெண்ட் படிப்பு.

வந்த வேகத்தில் ஆரம்பித்தது தான் இந்த சேனல்.

இன்று எல்லா சேனல்களுடன் போட்டிக் கொண்டு முதல் இடத்தில் இருக்கிறது என்றால் அவரின் விடா முயற்சியும் புதுமையை புகுத்திக் கொண்டிருக்கும் விதமும் தான்.

உள்ளே ஓட்டலைல் இரண்டு மேஜைகளை சேர்த்துப் போட்டிருந்த இரண்டு வரிசைகளைப் பிடித்திருந்தார்.

நாங்கள் உட்கார்ந்த உடன் பரத் தம்ப்ளர் ஒன்றினை எடுத்து ஸ்பூன் வைத்து தட்டினார்.

"நாம இப்போ வெஜிடெரியன் சாப்பிடப் போறாம்,பாலக்காட்டுல நைட் ஸ்டே அங்கே எல்லாருக்கு பிரமாதமான சைவ அசைவ உணவு தயாரிகிட்டு இருக்கு,அது எம்.டியோட ஃப்ரெண்ட் வீடு"என்றார்.

எல்லோருக்கும் ஆர்டர் செய்த் வேளையில் ரம்யா,"ஆம்லெட் கூட கிடையாதா?"என்றாள்.

"இதென்னம்மா பாம்பு பத்தின ப்ரொக்ராம் போகும் போது முட்டை பால் எல்லாத்தையும் அவாய்ட் பண்ணுங்க,சும்மா விளையாட்டுக்கு சொன்னேன்,பாலக்காடு வீட்டுல சகலமும் தயாராய்

இருக்கு,நீண்ட பயணம் என்பதால் சைவம் மட்டும் இப்பொழுது"என்றார் பரத்.

நாங்கள் சாப்பிட்டு முடித்து வெளியில் வந்த வேளையில் எங்கள் வேனில் இருந்த தொலைக்காட்சி வேனைப் பார்த்து விட்டு மக்கள் கூடியிருந்தனர்.

அனைவரும் எங்களின் புதிய ஃப்ரொக்ராம் பற்றி ஆவலாய் கேட்க-

அவர்களிடம் உரையாடியதை கேமிராவில் எடுத்தோம்.

இதையும் உபயோகித்து கொள்ளலாமே?

அவர்களிடம் இருந்து கிளம்பும் போது வாழ்த்துகளை அள்ளி அளித்தார்கள்.

எங்களின் பயணம் தொடர்ந்தது.

எனக்கு என்னையும் அறியாமல் உறங்கி விட்டேன்.

என்னை யாரோ உலுக்கி எழுப்பினார்கள்.

ரம்யா "லதா நாம பாலக்காடு வந்துட்டோம்"என்றாள்.

நான் அனிச்சை செயலாக அவள் காலைப் பார்த்தேன்.

சாக்ஸ் அணிந்திருந்தாள்.

அந்த வீடு,வீடு என்று சொல்வதை விட பெரிய கோட்டை என்று தான் சொல்ல வேண்டாம்.

பேய் படங்களில் வரும் வீடு போல் இருந்தது.

அரண்மணை போல் இருந்தது.

கேரள பாணியில் கட்டப் பட்டிருந்தது.

மேலே ஓடுகள் சீராக வேயப் பட்டிருந்தன.

ஒரு கலசம் போல மேலே நட்டு இருந்தார்கள்.

"இவங்க தான் எனக்கு மாதா மாதம் நிறைய சம்பாத்திச்சு கொடுக்கறவங்க"என்று எங்களை தனது நண்பன் சசிதரணிடம் அறிமுகப் படுத்தினார் எம்.டி.

எல்லோரையும் அறிமுகப் படுத்திக் கொண்டே அவர்,"முதல்ல உள்ளே வாங்க,நல்ல இஞ்சி டீ,அப்புறம் சாப்பாடு"என்றார் சசிதரண்.

உள்ளே நிறைய அறைகள்.

நாங்கள் எங்கள் உடைமைகளை ஒவ்வொரு அறையிலும் வைத்து விட்டு வரும் போது முன்னறையில் இருந்த சசிதரண்,"எல்லாம் உங்க சொந்த வீடு மாதிரி நினைச்சுங்க,எந்த அறையில் வேண்டுமானாலும் தங்கலாம்'என்றார்.

நீண்ட மேஜை சாப்பாட்டு மேஜை இருந்தது.

இவ்வளவு நீளமான மேஜையை போட வேண்டுமானால் அந்த அறையில் நீள அகலம் என்னவாய் இருக்கும் என்று உங்கள் கற்பனைக்கே விட்டு விடுகிறேன்.

முன் அறையில் நிறைய சோபாக்கள்.

அங்கே உட்கார்ந்தோம்.

கொஞ்ச நேரத்தில் ஆவி பறக்க இஞ்சி டீ வந்தது.

"எல்லோருக்கும் ஒரு சின்ன அறிவிப்பு"என்றார் எம்.டி.

எல்லாம் டீயை உறிஞ்சிக் கொண்டே உன்னிப்பாய் கேட்க ஆரம்பித்தோம்.

"இரண்டு இரவுகள் இங்கே தங்கறோம்,காரணம் எவ்வளவு நாள் காட்டுக்குள்ளே தங்கப் போகிறோம் என்று தெரியாது,இரண்டு நாள் நிம்மதியாய் இருங்க,உங்க திட்டங்களை மனசுக்குள்ளே ரிப்ரெஷ்

பண்ணிக்கலாம்,இல்லே அவங்க அவங்களுக்கு பிடிச்சதை பண்ணிட்டு ஃபீரியா இருக்கலாம்,இந்த சசிதரண் சூப்பர் குக்,நமக்கு விதவிதமா செஞ்சு வச்சிருக்கார்,அவரோட ஹோட்டல் லண்டன்ல்ல இருக்கு,ஃபேமிலி முழுக்க அங்கதான் இருக்கு,இன்னொரு முக்கியமான விஷயம் இவரும் நம்ம கூட இந்த ட்ரிப்ல்ல கலந்துக்க போறார்"

எல்லோரும் 'ஓ'என்றோம்.

சசிதரண்,"உங்களை எல்லாம் சந்திச்சதுல எனக்கு ரொம்ப மகிழ்ச்சி,நான் ரொம்ப சந்தோஷமா ஃபீல் பண்றேன்"என்றார்.

'நாங்களும்'என்றோம் கோரசாய்.

டீ முடித்து கொஞ்ச நேரம் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தோம்.

வெளியில் மழை ஆரம்பித்து விட்டது.

இடி மின்னலுடன் மழை வானத்தினைப் பொத்துக் கொண்டு ஊற்றியது.

இருள் சூழ்ந்தது.

வீட்டில் எல்லா இடத்திலும் பளீரென விளக்குகள் எரிந்தன.

"கரெண்ட் போனாலும் ஜெனரேட்டர் இருக்கு,தவிர சோலார் போட்டிருக்கேன்,இப்ப எரியற விளக்குகள் எல்லாம் சோலார்ல்ல தான் வருது,உங்களுக்கு என்ன வேண்டுமானாலும் என்னை எந்தவித தயக்கமும் இல்லாம கேட்கலாம்,எனி படி வாண்ட்ஸ் டூ ஹேவ் ட்ரிங்க் பிபோர் த டின்னர்"

"நோ"என்றோம் எல்லோரும்.

"நோ ஃபார்மாலிட்டீஸ்,ஃப்ரெஞ்ச் ஒயின் கூட இருக்கு"

"நோ"என்றோம்.

"சக்சஸ்ஃபுல்லா ப்ரொக்ராம் ஆர்ம்பிச்சதும் இங்கேயே வருவோம்"என்றார் எம்.டி.

பரத்,"நாம வருவோம்.இவர் இருப்பாரா,லண்டனுக்கு 'விஷ்'ன்னு பறந்துட போறார்."என்றான் கவலை தொணிக்கும் குரலில்.

"பயம் வேண்டாம் ஆறு மாசம் இவர் இங்கதான் இருப்பார்,ஆல்ஸோ ஹை ஹேவ் த டூப்ளிகேட் கீ"என்றார் எம்.டி.

இரவு உணவு பிரமாதம்.

சிக்கன் வெரைட்டீஸ் கலக்கியிருந்தார்.

என்னை போன்ற அமாமிச பட்சிணகளுக்கு ஆப்பம்,தேங்காய் பால்,இட்லி,ஊத்தப்பம் கார சட்னி என்று அமரக்களப் படுத்தியிருந்தார்.

ரம்யா என் பக்கத்தில் தான் உட்கார்ந்திருந்தாள்.

எனக்கு 'சட்'டென்று அவள் கால்கள் நினைவில் வர ஸ்பூன் ஒன்றை வேண்டும் என்றே நழுவ விட்டேன்.

நான் எதிர்பார்த்தது போல் அவள் உடை மாற்றப் போகும் போது சாக்சை கழட்டியிருந்தாள்.

நீண்ட சுரிதாருக்கு வெளியே கால்கள் தெரிந்தன.

அவள் கால்கள் செதில் செதிலாக இருந்தன.

அத்தியாயம் பதிமூன்று

எனக்கு அவள் மீது ஏதோ ஒரு அசூயை தோன்றியது.

என்னவென்று சொல்லத் தெரியவில்லை.

ஆனாலும் அப்படி தான் தோன்றியது.

எல்லோரும் சாப்பிட்டு முடித்ததும் சரியாய் அந்த மழையிலும் குடையைப் பிடித்துக் கொண்டு அந்த முதிய பெண்மணி வந்தாள்.

'எல்லாம் சாப்ட்டாச்சா,நான் என்னோட வேலையை முடிச்சுட்டு போயிடறேன்"

சசிதரண்,"சேச்சி ஏன் இப்ப வந்தது,மழை எல்லாம் இருக்கு இல்ல,காலையில வந்திருக்கலாமே"

"இந்த பாத்திரத்தை எல்லாம் இப்படியே போட்டு வச்சா நல்லா இருக்காது,அரை மணி நேரத்தில முடிச்சுடுவேன்"

பரத்,சிரித்துக் கொண்டே,"உங்களுக்கு மிச்சத்தை எடுத்து வெளியில போடற வேலை வைக்காம நாங்களே எல்லாத்தையும் சுத்தமா காலி பண்ணியாச்சு"என்றார்.

'இருக்கட்டே'என்றபடியே அந்த பெண்மணி எல்லா பாத்திரங்களையும் எடுத்துப் போக ஆரம்பித்தாள்.

எல்லோரும் முன்னறை சோபாவில் வந்து உட்கார்ந்தோம்.

எம்.டி.,"ஒரு முக்கிய விஷயம் ஃப்ரண்ட்ஸ் என்னோட நெருங்கிய நண்பர் சசிதரண் வெளி நாட்டுல இருக்கற ஓட்டலுக்கு அதிபர் மட்டுமல்ல,அவர் கிட்ட இன்னொரு திறமை இருக்கு,அவரோட ஸ்பெஷல் அதுதான்"என்றார்.

சசிதரண் சிரித்துக் கொண்டே உள்ளே போனார்.

திரும்பி வந்தவர் கையில் ஒரு மெட்டல் ஃப்ளூட்.

அவர் அதை நேர்த்தியாக பிடித்து ஒரு பாடலை ஆரம்பித்தார்.

ஏ.ஆர்.ரஹ்மானின் 'அழகே சுகமா உன் கோபங்கள் சுகமா?'என்று குழலில் காற்றினை ஊத அது பாடலாக அறை முழுவதும் விரவியது.

வெளியில் மழை.

உள்ளே செவிக்கு விருந்து.

வரிசையாய் ஒவ்வொரு பாட்டாய் வாசிக்க வாசிக்க மெய்ம்மறந்து உட்கார்ந்திருந்தோம்.

ஒரு பாட்டை வாசித்து முடித்த சசிதரண்,"யாருக்காவது பிடிச்ச பாட்டு இல்லே ட்யூன் சொல்லுங்க,உங்க சாய்ஸ்"என்றார்.

ஆளாளுக்கு ஒவ்வொரு பாட்டாய் சொல்ல வாசித்தார்.

வெளியில் மழை உச்சத்தில் இருந்தது.

பாட்டை ரசித்தபடியே ஜன்னல் அருகில் நின்று கொட்டும் மழையை பார்த்து கொண்டிருந்தேன்.

வெளியில் தோட்டத்தில் பெரிய ஃபவுண்டன் ஒன்றை அமைத்திருந்தார் சசிதரண்.

வெளியில் விளக்கும் எரிந்து கொண்டிருந்தது.

அப்பொழுது ஒரு மின்னல் வெட்டியது.

ஃபவுண்டன் அருகில் அந்த பெரியவர் உட்கார்ந்திருந்தார் மழையில் சொட்ட சொட்ட நனைந்த படி.

என்னைப் பார்த்ததும் சிரிப்பது அடுத்து அடித்த மின்னலின் வெளிச்சத்தில் தெரிந்தது.

நான் அவரை அதிர்ச்சியுடன் பார்த்து கொண்டிருந்த போதே பெரிய பாம்பாக மாறினார்.

அப்படியே அங்கிருந்து பறந்து ஜன்னல் நோக்கி 'விர்'ரென வந்தார்.

நான் அலறிக் கொண்டு 'தடால்' என கீழே விழுந்தேன்.

நினைவு தப்பியது.

என் முகத்தின் மீது மழை பெய்தது.

கண்களை விழித்தேன்.

என் முகத்தில் தண்ணீரைத் தெளித்து எழுப்பியிருப்பதை உணர்ந்தேன்.

"என்னாச்சு?"என்றார் எம்.டி.

நான் சோபாவில் படுக்க வைக்கப் பட்டிருந்தேன்.

எல்லோரும் என்னை சுற்றி கேள்விகள் நிறைந்த முகங்கள்.

நான் மெல்ல எழுந்து உட்கார்ந்தேன்.

'என்ன ஆச்சு"என்றார் எம்.டி.மறுபடியும்.

நான் திரும்பி ஜன்னல் வழியே வெளியில் பார்த்தேன்.

மீண்டும் அதிர்ச்சி.

பெரியவர் பவுண்டன் அடியில் நின்று கொண்டிருந்தார்.

'அங்கே அங்கே'என்று கையை காட்டினேன்.

எல்லோரும் வெளியில் பார்த்தார்கள்.

"ஒண்ணுமே இல்லையே?"என்றார்கள் கோரசாய்.

"மழை மட்டும் தான் கொட்டிட்டு இருக்கு"என்றாள் ரம்யா.

நான் திரும்ப பார்த்தேன்.

அங்கே அவர் இருந்தார்.

ஆனால் மற்றவர்கள் கண்ணுக்கு தெரியவில்லை.

எனக்கு முதன் முதலாக உதறல் எடுத்தது.

இந்த நிகழ்ச்சியை நான் செய்ய ஆரம்பித்த நாளில் இருந்து இல்லாத பயம் இப்பொழுது என்னை ஆட்கொள்ள ஆரம்பித்தது.

எல்லோரும் சகஜ நிலை திரும்ப நேரம் ஆனது.

அவரவர் அறைக்கு சென்றோம்.

இரண்டு கட்டில்கள் போடப் பட்டிருந்த பெரிய அறையில் புகுந்து கொண்டோம்.

முதலில் வந்த உடனேயே அங்குதான் எங்களது தூக்கு பைகளை வைத்திருந்தோம்.

எல்லோர் அறையிலும் தசமணி போட்ட சுடு நீர் ஜக்கில் கொண்டு வந்து வைத்தார் சசிதரண்,இரண்டு தம்ப்ளர்களுடன்.

"ஏன் சார் நாங்களே வந்து எடுத்திட்டிருப்போமே"

"அட பரவாயில்லை,நீங்க எல்லாம் என்னோட விருந்தாளிகள்."

"அட உங்களுக்கு நாளைக்கு சின்ன வெங்காயம் அரிந்து போட்டு நல்ல எண்ணெய் குழம்பு வச்சுத் தரலாம்ன்னு நினைச்சேன்,விருந்தாளி எல்லாம் சமைக்கலாம் இல்லே?"

"வொய் நாட்,எனக்கு நல்ல எண்ணெய் காரக் குழம்பு ரொம்ப பிடிக்கும்,அதுக்கு சின்ன வெங்காயத்தை நறுக்கிப் போட்டு,கேட்கவே நாக்கு ஊறுது"என்றார்.

"நாளைக்கு லஞ்சுக்கு செஞ்சுடறேன்"என்றேன்.

"குட் நைட்"என்ற சசிதரண்,ரூம்ல குளிர் அதிகமான ஹீட்டர் போட்டுகங்க,ஸ்விட்ச் போர்டுல ரெண்டாவது ஸ்விட்ச்."என்றார் தொடர்ந்து.

நாங்களும் 'குட் நைட்'சொல்லியதும் ரம்யா அவர் போகும் வரை காத்திருந்து கதவினை உள் புறம் தாளிட்டு வந்தாள்.

"ஹீட்டர் போடணுமா?"

"எனக்கு வேண்டாம்,உனக்கு வேணும்ன்னா போட்டுக்கோ"என்றேன்.

"எனக்கும் வேண்டாம்"என்ற படியே இரவு விளக்கை மட்டும் எரிய விட்டு வந்தாள்.

ஜன்னலுக்கு பின்னால் பக்கவாட்டில் தள்ளு கண்ணாடி கதவு பெரியதாய் இருந்தது.

எங்களது கட்டிலில் படுத்த படியே பார்த்தால் சரியாய் பவுண்டன் மற்றும் வாசல் கேட் பக்கம் தெரியும் படி இருந்தது.

திரைசீலையை இழுத்து விட்டாள்.

அவள் பக்கத்து கட்டிலில் படுத்து கம்பளியை இழுத்துப் போர்த்திக் கொண்டாள்.

"நாம போற நேரம் காட்டுல மழை வந்து போற நேரம் தான்'"

"நான் பார்த்தேன் இணையத்துல,குறிப்பிட்ட அந்த மலையில மழை எப்ப வரும்ன்னே சொல்ல

முடியாதுன்னு போட்டு இருக்கு"

"இந்த காடு மட்டும் அல்ல எல்லா காடுகளுமே அப்படித்தான்,குறிப்பா நம்ம நாட்டுல இருக்கற காடுகள்ல்ல மழை சில சமயம் நாள் கணக்கா பெய்யும்,இட் ஸ் எ சேலஞ்சிங் ஒன்,உங்க எம்.டி.இந்த சீரியல்லு ஒத்துக் கிட்டது இல்லாம கூடவே வர்றாரே அது பெரிய விஷயம்"என்றாள்.

"ஆமாம்"என்றான்.

அவள் திடீர் என்று,"ஏன் அந்தப் பெரியவர் உங்க கண்ணுல மட்டும் படறார்?"என்று கேட்டாள்.

"தெரியலை"

"ஒரு வேளை ஏதோ உங்ககிட்ட சொல்ல வறார்ன்னு தோணுது"என்றாள்.

"ரம்யா நீ என்னை பேர் சொல்லியே கூப்பிடலாம்"என்றேன்.

"ம்.,எனக்கென்னமோ அவர் உங்கிட்ட ஏதோ புரிய வைக்க வறார்ன்னு மட்டும் தோணுது"

"இருக்கலாம்,அப்ப ஏன் தள்ளி நிக்கணும்.அங்கங்கே என் கண் முன்னாடி வந்து நிக்கறதுக்கு பதில எனக்கு முன்னாடியே வந்து நின்னு சொல்ல வேண்டியதை சொல்லிட்டுப் போகலாமே?"

ரம்யா மௌனமாய் இருந்தாள்.

கொஞ்ச நேரத்தில் அவள் தூங்கி விட்டாள் என்பது எனக்குப் புரிந்தது.

'பரவாயில்ல படுத்த உடனே தூக்கம் வர்றது பெரிய கிப்ட் தான்'என்று நினைத்துக் கொண்டு நான் கண்களை மூடினேன்.

தூங்க வேண்டும் என்று தோன்றினாலும் தூக்கம் வரவில்லை.

கம்பளியை எடுத்து விட்டு எழுந்தேன்.

காலில் ஸ்லிப்பரை மாட்டிக் கொண்டு ஜன்னல் அருகில் சென்றேன்.

திரைச்சீலையை விலக்கி வெளியில் பார்த்தேன்.

மழை நிற்காமல் அடித்துக் கொண்டிருந்தது.

அவ்வப்பொழுது மின்னல் வெட்டி இடியும் தொடர்ந்தது.

இந்த மின்னல் இடியிலும் ரம்யா தூங்கிப் போனது எனக்கு ஆச்சர்யமாய் இருந்தது.

அப்பொழுது-
அத்தியாயம் பதினாலு
படுக்கையில் படுத்திருந்த ரம்யா நெளிவது தெரிந்தது.
டெம்போ ட்ராவலரில் வந்த போது அவள் கால்களில் பார்த்த செதில்கள் என் நினைவுக்கு வந்தது.
மெல்ல அவள் கால் பக்க கம்பளியை விலக்கினேன்.
'உஸ்'என்கிற பெரிய சப்தம்.
நான் மிரண்டு போய் என் படுக்கைக்கு தாவினேன்.
கம்பளியை இழுத்து மூடிக் கொண்டேன்.
என் மீது பெரியதாய் ஏதோ ஊர்ந்தது.
என் தொண்டையில் வார்த்தைகள் சிக்கிக் கொண்டன.
என்னால் கை,கால்களை அசைக்க முடியவில்லை.
எனக்கு நன்றாக தெரிந்தது அந்த பெரிய பாம்பின் வாசம்.
அசைய முயன்றேன்.
முடியவில்லை.
பற்களை இறுக கடித்துக் கொண்டேன்.
கண்களின் ஓரம் பயத்தில் சொருகியது.
எப்பொழுது தூங்கினேன் என்று எனக்கே தெரியாது.

காலையில் கண் விழித்த போது பக்கத்து படுக்கை காலியாகி இருந்தது
வெளியில் இன்னமும் மழை பெய்து கொண்டிருந்தது
எனது கைப்பேசியை எடுத்து நேரம் பார்த்தேன்.
ஏழு.
அதற்குள் ரம்யா எழுந்து போய் விட்டாளா?
இரவு நடந்தது திப்பி திப்பியாய் இருந்தது.
உண்மையிலேயே ரம்யா இரவு பாம்பாய் மாறினாளா?
என் மீது ஊர்ந்து சென்றாளா?
குழப்பம் மண்டைக்குள் குத்தியது.
பல் தேய்த்து விட்டு வெளி வந்தேன்.
எனக்கு முன்னால் எல்லோரும் அங்கே ஆஜர் ஆகியிருந்தார்கள்.
என்னைப் பார்த்ததும் கோரசாக 'மார்னிங்'என்றார்கள்.
நான் கொஞ்சம் கூச்சத்தில் நெளிந்தேன் என்றே சொல்லலாம்.
"ரொம்ப நேரம் தூங்கிட்டேன் போல இருக்கு"
ரம்யா சிரித்துக் கொண்டே,"சரிதான் நாளையில இருந்து நாம் வேலையில இறங்கிடுவோம்,தூங்க எப்ப சான்ஸ் கிடைக்குமோ,இன்னும் ஒரு ராத்திரி இருக்கு,தூங்கிக்கலாம்"என்றாள்.
நான் போய் சோபாவில் அவள் பக்கத்தில் உட்கார்ந்தேன்.
சசிதரண் என்னைப் பார்த்து கேட்டார்.
"உங்களுக்கு என்ன வேண்டும் டீயா காபியா?"'
"எல்லாரும் டீ சாப்பிடறீங்கன்னா எனக்கும் டீ போதும்,இல்லே காபி"என்றேன்.
அவர்,"காபியே இருக்கு"என்றவர் உள் பக்கம் திரும்பி 'நல்லா சூடா ஒரு காபி"என்றார்.
கொஞ்ச நேரத்தில் உள்ளிருந்து அந்த அம்மாள் கையில் டபரா தம்பளரில் ஆவி பறக்க காபி எடுத்து வந்தார்.
அந்த அறையிலேயே காபி மனம் வீசியது.
"கூர்க்ல்ல எங்களுக்கு ஒரு காபி எஸ்டேட் இருக்கு,அங்கிருந்து வந்த காபி கொட்டையை வறுத்து

செஞ்ச பொடி"என்றார்.

காபியின் சுவை என்னை சகலத்தையும் மறக்க வைத்தது.

"காட்டுக்குள் காபிக்கு என்ன பண்ணுவது என்கிற கவலையா,டின் பால்,ரெடி மேட் காபி பவுடர் எல்லாம் லிஸ்ட்ல்ல இருக்கு"என்றார் பரத்.

"அப்படி என்ன காபிக்கு அடிமையா நான்"

"சும்மா ஒரு தகவலுக்கு சொன்னேன்."என்றார் பரத்.

எல்லோரும் சிரித்தார்கள்.

நான்,"எனக்கு கட்டாயம் வேணும்ன்னு அவசியல் இல்லே,காபி மட்டும் அல்ல எனக்கு எதுவுமே இதுதான் வேணும்ன்னு கிடையாது,கிடைக்கறதை வச்சு சமாளிச்சுட்டு போயிட்டே இருப்பேன்,நாம காட்டுக்குள்ள எவ்வளவு நாள் ட்ராவல் பண்ணப் போறோம்ன்னு நமக்கு தெரியாது,எவ்வளவு நாளைக்கு உணவு இருக்கும்ன்னு தெரியாது,நம்மளோட குறிக்கோள் அந்த கோவில் தான்,சாப்பாடு அல்ல"நான் சொன்னதும் ஒரு நிமிடம் அங்கே மவுனம் நிலவியது.

கொஞ்ச நேரத்தில் எம்.டி.கைத்தட்ட கைத்தட்டல்கள் தொடர்ந்தன.

'அடி பொளி'என்றார் சசிதரண்.

"இந்த ஸ்பிரிட் தான் நம்ம தொலைக்காட்சியை நம்பர் ஒன்னா ஆக்கிட்டு இருக்கு,உங்களை மாதிரி ஸ்டாஃப் எல்லாம் இருக்கறது எனக்கு மிகப் பெரிய பலம்"என்றார் எம்.டி.

"இன்னைக்கு எல்லோருக்கும் ப்யூர் வெஜிடேரியன்,யாருக்கும் ஆட்சேபனை இல்லையே"என்று கேட்டார் சசிதரண்.

"நோ ப்ராப்ளம்"என்றோம்.

பரத்,"என்ன ஸ்பெஷல் சார் இன்னைக்கு"

"நம்ம பங்களாவிலேயே பசலை கீரை இருக்கு,அதைப் போட்டு ஒரு ஸ்பெஷல் கூட்டு,அப்புறம் மிளகு,சீரகம் கார ரசம்,வத்தம்,வடாகம்,அப்பளம் ஊறுகாய்"என்று அடுக்கிக் கொண்டே போனார்.

"சரிதான் எல்லாம் இந்த மழைக்கு ஏத்தா மாதிரிதான் இருக்கு,அப்படியே இங்கேயே ஒரு மாசம்

தங்கிடலாம்ன்னு தோணுது"என்றர் ராமச்சந்தர்.

"சரிதான் உங்களை எங்களோட பாதுகாப்புக்கு கொண்டு வந்தா நீங்க இங்கேயே தங்கிடறேன்னு சொல்றீங்களா?"என்று கேட்டார் எம்.டி.

"இல்லே சார் ஒரு பேச்சுக்கு சொன்னேன்"என்றார் ராமச்சந்தர்.

"நாளைக்கு நாம கிளம்பறதுக்குள்ள இந்த மழை நிக்குமா?"என்று வாசலைப் பார்த்த படியே கேட்டார் எம்.டி.

'நிக்கணும்,நிக்கலேன்னாலும் நாம கிளம்பிட்டே இருப்போம்'என்றேன் நான்.

ரம்யா என்னைப் பார்த்து மெல்ல சிரித்தாள்.

ஒரு வித மர்ம புன்னகையாய் இருந்தது.

நான் அவளை பார்த்தேன்.

"எக்ஸ்கியூஸ் மீ"என்று எழுந்தேன்.

என்னுடைய அறையே நோக்கி நடந்தேன்.

நான் எதிர்ப்பார்த்தது போல் ரம்யாவும் பின்னால் நடந்து வந்தாள்.

அறைக்கு அவள் வந்ததும் நான் மெல்லிய குரலில் இரவு நடந்த விஷயங்களை சொன்னேன்.

வாய் விட்டு சிரித்தாள்.

"என்ன லதா உங்களுக்கு இவ்வளவு கற்பனை சக்தியா?"என்றவள் தன் வலது காலை நீட்டி கட்டிலின் விளிம்பில் வைத்தாள்.

தன் ஜீன்ஸ் பேண்டின் அடிப் பகுதியே சுருட்டி தன் கெண்டைக் கால்களை காட்டினாள்.

அவை பெண்ணின் கால்கள்.

வழுவழுவென்று.

நான் வரும் பொழுது வாகனத்தில் பார்த்த செதில் போல் இல்லை.

நேற்று இரவு பார்த்தது எல்லாம் கனவா,நிஜமா?

மனசு குழம்பியது'

"ஜஸ்ட் லீவ் இட்,நீங்க அந்த அசைன்மெண்டையே நினைச்சுட்டு இருக்கறதுனால உங்களுக்கு இப்படியெல்லாம் தோணுது போல"என்றாள்.

எனக்கு குழப்பம்.
இருவரும் மீண்டும் முன் அறைக்கு வந்தோம்.
வெளியில் இன்னமும் இருட்டிக் கொண்டு மழை வேகமாய் அடித்தது.
சசிதரன்,"எனக்கு ஆச்சர்யமாய் இருக்கிறது,என்னுடைய லைஃப்ல்ல இப்படி ஒரு மழை பெய்ஞ்சுதே இல்லை"என்றார்.
உள்ளே இருட்டிக் கொண்டிருக்க விளக்குகளை எரிய விட்டார்.
அந்த அம்மாள் வந்தாள்.
"டிபன் ரெடியா இருக்கு"என்றாள்.
"கொண்டு வந்து டேபிள்ல்ல வச்சிருங்க"என்றார் சசிதரண்.
சாப்பாடு மேஜையில் கொண்டு வந்து 'ஹாட் பேக்'குகளை வைத்தாள்.
எல்லோரும் சாப்பிட அமர்ந்தோம்.
சுட சுட தோசை உள்ளே இருந்தது.
விழுமனாய் அரைக்கப் பட்டிருந்த வெங்காய காரச் சட்னி,தேங்காய் சட்னி,சாம்பார் ஆவி பறக்க கொண்டு வந்து வைத்தார்.
எல்லோரும் சாப்பிட ஆரம்பித்தோம்.
என் பக்கத்தில் வாசுகி உட்கார்ந்திருந்தாள்.
அவள் வேறு அறையில் தங்கியிருந்தாள்.
அவள் இங்கு வந்ததில் இருந்தே உற்சாகம் குன்றியது போல் இருந்தாள்.
சாப்பிட்ட உடன் அவளிடம் பேசிப் பார்க்க வேண்டும்.
உள்ளே அறைக்குள் ட்யூப் லைட்டினை போட்டு அணைத்தது போல் மின்னல் வெட்டியது.
தொடர்ந்து பெரிய இடி.
'சடா'ரென்று அறைக்குள் விளக்குகள் அணைந்தன.
"டிரிப்'ஆயிடுச்சு போல"என்'ற சசிதரண் அந்தம்மாளை அழைத்தார்.
"கீழே பேஸ்மெண்டுக்கு போய் ஜெனரேட்டரை மாத்தி விடுங்க,நான் சாப்பிட்டு வந்து லைன் மாத்தி

விடறேன்"என்றார்.

அந்த அம்மாள் நகர்ந்தாள்.

"அடிக்கடி ட்ரிப் ஆகும்,அதனால் ஜெனரேட்டர் போட்டு இருக்கேன்,மூணு ஃபேஸ்ல்லயும் போனா ஆட்டோமெடிக்கா ஜெனரேட்டருக்கு மாறிடும்,இல்லேன்னா நாம கீழே போய் நாம ஃபேஸ் மாத்தணும்"என்றார்.

ரம்யா,"ரொம்ப வயசானவங்க,அவங்களுக்கு தெரியுமா"

"செஞ்சுடுவாங்க"என்றார் சசிதரண்.

அந்தம்மாள் போன கொஞ்ச நேரத்தில் விளக்குகள் எரிந்தன.

'பொத்'தென்று சப்தம் எனக்கு பக்கத்தில் கேட்டது.

எல்லோரும் பார்த்தார்கள்.

சாப்பிட்டு கொண்டிருந்த பார்த்தேன்.

அமைதியாய் சாப்பிட்டு கொண்டிருந்த வாசுகி தலை அவள் டிபன்தட்டில் கவிழ்ந்திருந்தது.

அத்தியாயம் பதினைந்து

நான் பதறிப் போய்,"வாசுகி"என்றபடியே அவள் முதுகைத் தொட்டேன்.

அவள் நிமிர்ந்தாள்.

'என்னாச்சு?'என்றாள்.

அவள் முகத்தில் சட்னி,சாம்பார் ஒட்டியிருந்தது.

"நாங்கதான் கேட்கணும்,திடீர்ன்னு தட்டுல கவிழ்ந்திருந்த உங்களைப் பார்த்ததும் நாங்க பதறிப் போயிட்டோம்"என்றாள் ரம்யா.

"என்னன்னு தெரியலை,கரெண்ட போன உடனே யாரோ என் தலையை பிடிச்சு அழுத்தினா மாதிரி இருந்தது,தட்டுல முகத்தை வச்சு அழுத்தினா மாதிரி"சிறு துண்டால் முகத்தினை இடது கையால் துடைத்த படி.

"சர்தான்"என்றார் எம்.டி.

"நீங்களே மன அழுத்தத்துல முகத்தை கவிழ்த்திருக்க வாய்ப்பு இருக்கு,இதுக்கு முன்னாடி இப்படி ஆகியிருக்கா,உங்களையும் அறியாமா?"சசிதரண் கேட்க சிரித்தாள் வாசுகி.

"சர்தான் எல்லோரும் சேர்ந்து என்னை லூஸ் ஆக்கிடுவீங்க போல,என்னமோ ப்ளாக் அவுட் ஆன மாதிரி ஆயிடுச்சுன்னு நினைக்கறேன்"

"இப்ப உங்களுக்கு எதுவும் இல்லையே?"எம்.டி.கேட்டதும்,"ஐ யம் பர்ஃபெக்ட்லி ஆல்ரைட் சார்'என்றாள் வாசுகி.

நான் அப்பொழுதுதான் கவனித்தேன்.

அவளின் பின்னங்கழுத்தில் இரண்டு ரத்தப் பொட்டுக்கள்.

கான்ஃஃபரன்ஸ் ரூமில் சுரேஷ் மரணித்த போது பார்த்த பாம்பு கொத்திய குறிகள்.

இவள் ஒன்றும் இல்லாதது போல் சாதரணமாய் உட்கார்ந்து இருக்கிறாளே?

'சட்'டென திரும்ப அவள் பின்னங்கழுத்தைப் பார்த்தேன்.

அங்கே முதலில் பார்த்த அடையாளங்கள் இல்லை.

ஒரு நிமிடம் எனக்கு ஒன்றும் புரியவில்லை.

"என்ன ஏதோ ஆழ்ந்த யோசனையில் இருக்கிற மாதிரி இருக்கு,தட்டுல போட்டு இருக்கிற இருக்கற இட்லி ஆறிடப் போகுது"என்றார் பரத்.

நான் அப்பொழுதுதான் சுயத்திற்கு வந்தேன்.

சாப்பிட்டு முடித்தோம்.

எம்.டி."நமக்கு ஒரு மகிழ்ச்சியான செய்தி,சசிதரணுக்கு நல்லா மலையாளம் தெரியும்,அவர் நம்ம கூட நாளைக்கு கிளம்பறார்"என்றார்.

'ஓ'என்று எல்லோரும் ஒரு குரல் கொடுத்தார்கள்.

பரத்,"காட்டுக்குள்ளே வந்து ஃப்ளூட் ஊத ஆரம்பிச்சுடாதீங்க,அப்புறம் காட்டுல இருக்கற எல்லா பாம்புகளும் நம்பளை தேடிட்டு வந்துடும்"என்றான் சிரித்துக் கொண்டே.

'ஒஹோ'என்று வாய் விட்டுச் சிரித்தார் சசிதரண்.

அவரின் சிரிப்பின் பின்னால் ஏதோ ஒன்று இருப்பது போல் தோன்றியது.

ரம்யா,"நாளைக்கு எத்தனை மணிக்கு கிளம்பறோம்?"என்று கேட்டாள் எம்.டி.யை பார்த்து.

எம்.டி.பரத்தைப் பார்த்தார்.

பரத்,"நாளைக்கு மதிய உணவு முடிஞ்சது கிளம்பிட வேண்டியதுதான்"என்றார்.

"ஆமாம்,என்ன மழை இருந்தாலும் கிளம்பிடறோம்"என்று தொடர்ந்து சொன்னார் எம்.டி.

எல்லோரும் சாப்பிட்டு முடித்திருந்தார்கள்.

ஒவ்வொருவராக கைகளை கழுவிக் கொண்டு வந்தனர்.

சசிதரண்,"நான் டின் புட்ஸ் நிறைய வச்சிருக்கேன்,அது எல்லாத்தையும் பேக் பண்ணி எடுத்துக்குவோம்,பேட்டர் அடுப்பு,ஒரு டீப் ஃபாரஸ்ட் அதுக்கு சில ஸ்பெஷல் டார்ச்சஸ் தேவை அதுவும் எங்கிட்ட இருக்கு"என்றார்.

அவர் சொல்லிக் கொண்டிருந்த போதே 'பொடீர்'என்று ஒரு சப்தம் கேட்டது.

பெரிய 'பாம்' வெடித்ததை போல்.

சடுதியில் விளக்குகளும் அணைந்தது.

சசிதரண் 'அம்மே'என்றபடி எழுந்தார்.

கீழே இருந்து புகை 'திபுதிபு'வென கிளம்பியது.

சசிதரண் சுவரில் மாட்டியிருந்த நெருப்பு அணைப்பான் உருளியை எடுத்துக் கொண்டே கீழே ஓடினார்.

பரத்,எம்.டி.எல்லோரும் ஓடினார்கள்.

பரத் முன்னால் கைப்பேசியில் இருந்த டார்ச்சை ஆன் செய்திருந்தான்.

வெளிச்சம்!

நாங்களும் எழுந்து பின்னால் ஓட எம்.டி.எங்களை தடுத்தார்.

"எல்லாம் மேலே இருங்க"என்றார்.

யாரும் கேட்டது போல தெரியவில்லை.

கீழே சசிதரண் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்த ஜெனரேட்டரை அணைத்தார்.

மேலே எல்லோரும் திரும்ப உள்ளே இருட்டாய் இருந்தது.

"ஒயர் எல்லாம் பத்திகிச்சு,எலக்ரிட்ஷியனை கூப்பிடணும்"என்றார்.

அவர் கைப்பேசியை எடுத்தார்.

"ஷிட் டவர் இல்லை"என்றபடியே லேண்ட் போன் அருகில் போய் அதன் ரீசிவரை எடுத்தார்.

அதுவும் வேலை செய்யவில்லை.

நான் என் கைப்பேசியைப் பார்த்தேன்.

அதுவும் வேலை செய்யவில்லை.

எல்லோரும் ஒரே சமயத்தில் சொன்னார்கள்.

"எங்க கைப்பேசியிலயும் சிக்னல் இல்லை,கம்ப்ளீட்டா டெட்டா இருக்கு"

சசிதரண்,"பரத்,நீங்க வாங்க என் கூட நாம போயிட்டு வருவோம்,எலக்ட்ரிஷியனை போய் கூட்டிட்டு வருவோம்"என்றார்.

கொஞ்ச நேரத்தில் சசிதரணின் ஜீப் கிளம்பியது.

உள்ளே இருந்து ஒரு எமர்ஜென்சி விளக்கை எடுத்து வந்து முன்னறையின் நடுவில் வைத்தாள் அந்த அம்மாள்.

"இது வாங்கனதுல இருந்து உபயோகிக்கவே இல்லை,இப்பதான் முதல் தடவை என்றார்.

முன்னே இருந்த சோப்பாக்களில் அமர்ந்தோம்.

வாசல் கதவு திறந்தே இருந்தது.

எம்.டி.எனக்கு நேர் எதிரே உட்கார்ந்து கொண்டிருந்தார்.

நடக்கும் நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றையும் பார்த்து யாரும் தளர்ந்து விடக் கூடாது என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன்.

எம்.டி.யோ என் மனதைப் படம் பிடித்தவர் போல,"லதா உங்க மனசுல இப்ப என்ன ஓடுதுன்னு என்னால யூகிக்க முடியுது,எந்த காரணம் கொண்டும் நம்ம நிகழ்ச்சியிலே எந்த மாற்றமும் கிடையாது"என்றவர் கேமிராமேனை பார்த்தார்.

"கேமிராவை எடுத்துட்டு வாங்க,இப்ப நாம அந்த இடத்தைப் பத்தி பேசறதை எடுத்துடலாம்"என்றார்.

"இதோ சார்,என்னோட ரூம்ல்ல வச்சிருக்கேன்,இதோ எடுத்துட்டு வர்றேன்"என்று எழுந்தான்.

அவன் மாடியில் அவன் அறை.

அவன் படிகளில் ஏற ஆரம்பித்ததை பார்த்துக் கொண்டேயிருந்தேன்.

மேல் படியில் அவன் காலை வைத்த போது 'ஐயோ'என்ற அலறலுடன் படிகளில் உருண்டான்.

படிகளில் பயணித்து 'பொத்'தென்று மடிந்து தரையில் விழுந்தான்.

எல்லோரும் எழுந்து ஓடினோம்.

எம்.டி.அவன் கால்களில் கையை கையை வைக்க அலறினான்.

அவன் கட்டை விரலில் நகம் பெயர்ந்து இருந்தது.

அவனை நிமிர்த்து உட்கார வைத்தார் எம்.டி.

அவன் மிரண்டு போய் அவரைப் பார்த்தான்.

"என்னாச்சு?"என்று அவனைப் பார்த்து கேட்டார்.

அவன்,"தெரியலை யாரோ என்னை பிடிச்சு பலமா தள்ளினா மாதிரி இருந்தது"என்றான்.

எம்.டி.வீட்டில் இருந்த அம்பாளைப் பார்த்து டிஞ்சர் இருக்கா?"என்று கேட்டார்.

அந்தம்மாள்,"முதல் உதவி பெட்டி இருக்கு எடுத்துட்டு வர்றேன்"என்று ஓடினாள்.

திரும்பி வந்தவள் கையில் அந்தப் பெட்டி.

சிகப்பு நிற பெட்டி.

ரம்யா அவர் கையில் இருந்து வாங்கி அதை திறந்து அதன் உள்ளே இருந்து பஞ்சு உருளையை எடுத்து அதிலிருந்து அதை கொஞ்சம் எடுத்து உருட்டி கேமிராமேன் ரத்தத்தை துடைத்தார்.

பின்னர் வேறு பஞ்சில் டிஞ்சரை தெளித்து கட்டை விரலில் வைத்து அழுத்தினாள்.

அதில் கொஞ்சம் பேண்டேஜை சுற்றி கத்திரியால் அறுத்தார்.

அவனை மெல்ல எழுப்பினார்.

அவனை சோபாவுக்கு தாங்கிப் பிடித்து அழைத்து வந்தார்.

அவன் உட்கார்ந்ததும் கேட்டார்.

"மூர்த்தி கால் தடுக்கி விழுந்துட்டீங்களா,இல்லே"

"இல்லே சார்,என்னை நிஜமாவே யாரோ நெஞ்சுல கையை வச்சு பலமா தள்ளுனதை நான் உணர்ந்தேன்"என்றான் கண்களில் திகிலோடு.

நான் படிகளைப் பார்த்தேன்.

ராமச்சந்தர்'சம்திங் ஃபிஷ்ஷி'என்றபடியே படிகளை நோக்கிப் போனார்.

அங்கே கீழ் படியில் நின்றவாறே மேலே பார்த்தார்

நான் எழுந்தேன்.

மெல்ல நடந்து படிகள் அருகில் போய் முதல் படியில் காலை வைத்தேன்.

அவர் பக்கம் திரும்பினேன்.

"வாங்க சார் போய் பார்க்கலாம்"என்றேன்.

நான் படியில் ஏற அவர் பின் தொடர்ந்தார்.

ஐந்து படி கிடந்த நான் நின்று திரும்பி,"மூர்த்தி மாடியில எங்கே உங்க அறை"என்றேன்.

"மேலே ஏறினதும் வலது பக்கம் ரெண்டாவது அறை,சும்மா தான் தாழ் போட்டிருக்கேன்"என்றார்.

படியில் தொடர்ந்து ஏறி மேலே போனோம்.

அறைக் கதவினை திறந்த போது-

அந்த சப்தம் துல்லியமாய் கேட்டது.

அத்தியாயம் பதினாறு

அறையில் கேமிரா ஸ்டேண்ட் போட்டு கட்டிலுக்கருகில் நிறுத்தி வைக்கப் பட்டிருந்தது.
'க்ர்'என்று மெல்லிய சப்தத்துடன் அது ஓடிக் கொண்டிருந்தது.
பக்கத்தில் சென்ற ராம்சந்தர் கேமிராவின் ஓட்டத்தை நிறுத்தினார்.
எனக்கு ஆச்சர்யம்.
யார் இதை இயங்க வைத்திருப்பார்கள்.
ராம்சந்தர் என்னைப் பார்த்தார்.

"சார் கேமிராவை மட்டும் ஸ்டேண்டல இருந்து எடுங்க,கீழே போயிடுவோம்,எனக்கு என்னமோ மர்மமா,திகிலா இருக்கு"

ராம்சந்தர் கேமிராவை கழட்டினார்.

அவரிடம்,"உங்களுக்கு கேமிரா எல்லாம் ஹேண்டில் பண்ண தெரியுமா?"என்றேன்.

"சர்தான் ஏதோ நாந்தான் மேலே வந்து கேமிராவை ஆன் பண்ணி வச்சுட்டு வந்தேன்னு சொல்லிடுவீங்களோ,கேமிரா நிறைய யூஸ் பண்ண வேண்டியிருக்கும் எங்க தொழில்ல"என்றபடியே கேமிராவை தூக்கிக் கொண்டு முன்னால் நடந்தார்.

நானும் பின்னால் போனேன்.

கீழே முன் அறைக்கு சென்ற போது மூர்த்தி சோபாவில் முனகிய படியே சாய்ந்து உட்கார்ந்திருந்தான்.

வாசுகி,எம்.டி.துணை தயாரிப்பாளர்,ரம்யா,சந்திரன்,மூன்று வண்டிகளையும் ஓட்டும் தோழர்கள் எல்லோரும் உட்கார்ந்திருந்தார்கள்.

மூணு ஓட்டுனர்களும் ஓட்டுனர்கள் மட்டும் அல்ல,அவசரத்திற்கு கேமிராவை இயக்குவும்,ஆன் லைன் எடிட்டிங்கிலும் தேர்ச்சி பெற்றவர்கள்.

சில சமயங்களில் சென்னையில் முக்கிய கவரேஜ் உள்ளே யாரும் ரிப்போர்ட்டர் இல்லை என்றால் அவர்களே தேவையான ஸ்பாட்டுக்கு சென்று கவரேஜ் செய்யும் அளவுக்கு திறமையானவர்கள் தான்.

ராம்சந்தர்,"மேலே கேமிரா ஸ்டேண்ட்ல்ல போட்டு ஓடிட்டு இருந்தது,நான் நிறுத்தி எடுத்துட்டு வந்தோம்"என்றார்.

எம்.டி.திகைப்புடன் மூர்த்தியைப் பார்த்தார்.

மூர்த்தி,"நோ சான்ஸ்,வாய்ப்பே இல்லை,இப்படி கொடுங்க"என்று கேமிராவை வாங்கினார்.

கேமிராவை ஆன் செய்து பார்த்தார்.

அவர் கண்கள் விரிவதைப் பார்த்தேன்.

கொஞ்சம் பயத்துடன் எம்.டி.யை பார்த்தார்.

"சார் இங்கே வந்து பாருங்க"என்றார்.

எம்.டி.மூர்த்தி அருகில் சென்று பார்த்தார்.

அவர் கண்களும் விரிந்தன.

என்னைப் பார்த்த எம்.டி.,"லதா முதல்ல நீங்க இதைப் பாருங்க'என்றார்.

நான் பக்கத்தில் சென்று மூர்த்தி கேமிராவின் சின்ன வ்யூ ஃபைண்டரில் பார்த்தேன்.

அறை முழுவதும் அங்கங்கே சின்ன சின்ன பாம்புகள் பறந்து கொண்டிருந்தது பனிப் படலம் போல் பதிவாகியிருந்தது.

மூர்த்தி மிரட்சி நீங்காத விழிகளுடன்,"நான் வந்ததுலேந்து கேமிராவை ஒபன் பண்ணவே இல்லை,வேற யாராவது ஸ்டேண்ட் போட்டு வச்சீங்களா"என்று கேட்டார்.

எல்லோரும்,"இல்லை"என்றே சொன்னார்கள்.

எம்.டி.அறைக்குள் குறுக்கும் நெடுக்கும் நடந்தார்.

தீவிரமாய் யோசிக்கிறார் போல் இருக்கிறது.

ஒரு வித மயான அமைதி அறைக்குள் நிலவியது.

மௌனத்தை நான் உடைத்தேன்.

'இது மாதிரி அமானுஷ்ய விஷயங்கள் எல்லாம் என்னை இன்னும் தீவிரமாக்குது சார்"என்றேன்.

அவரும்,"ஆமாம்"என்றார்.

வெளியில் ஜீப் வருவது மழை சப்தத்தினையும் மீறி கேட்டது.

சசிதரண்,பரத் இருவரும் உடன் ஒரு புது ஆசாமியும் உள்ளே நுழைந்தார்கள்.

புது ஆசாமியின் கையில் ஒரு சின்ன ப்ளாஸ்டிக் பை இருந்தது.

கையில் ஒரு ஒயர் சுருளும் இருந்தது.

உள்ளே வந்தவன் சசிதரணிடம்,"ஞான் நோக்கட்டே"என்று உள்ளே போனான்.

சசிதரண்,"என்னை எல்லோரும் இவ்வளவு அமைதியா இருக்கீங்க"என்றார்.

எம்.டி.கேமிராவில் பதிவாகியிருக்கும் விஷயத்தினைப் பற்றி சொல்ல அவருக்கு அதிர்ச்சி.

"என்ன சொல்றீங்க,இட் காண்ட் பீ"என்றார்.

எம்.டி.மூர்த்தியைப் பார்க்க-

அவர்,"இங்கே வந்து பாருங்க"என்றார்.

சசிதரண் பார்த்ததும் மௌனமாகிப் போனார்.

உள்ளே போன மின் பணியாளன்,"சார் முப்பது மினிட்டு ஆகும்"என்றான்.

'ம்'என்று ஒற்றை எழுத்து சொல்லி அவனை அனுப்பிய சசிதரண் எங்களைப் பார்த்தார்.

"எனக்கு இது பயங்கர அதிர்ச்சியாய் இருக்கு"என்றார்.

நான் கேட்டேன்.

"உங்க வீட்டுல,அதாவது இந்த வீட்டுல பாம்பு இருந்ததா?"

"நான் கேள்விப் பட்டிருக்கேன்,எங்கம்மா சொல்லியிருக்காங்க,இந்த வீட்டை சுத்தியே நிறைய பாம்புகள் ஒரு காலத்துல நடமாடிட்டு இருந்ததாம்,முதன் முதல்ல வீட்டை கட்டும் போது வீட்டு வேலை செஞ்சவங்க நிறைய பாம்புகளை பணிக்கு இடஞ்சலா இருக்குன்னு கொன்னுருக்காங்க,எல்லாத்துக்கும் மேலே வீடு க்ரக ப்ரவேசம் அப்போ ஹோம குண்டம் ஏத்தி மந்திரம் சொல்லிட்டு இருக்கும் போது திடீர்ன்னு எங்கிருந்தோ வந்த பெரிய பாம்பு ஒண்ணு யாரும் எதிர்பார்க்காத போது பட்டுன்னு ஹோம குண்டத்துல விழுந்துடுச்சு,நம்பூதிரி ஒருத்தர் எங்க குடும்பத்துக்கு வேண்டியவர்,நிலத்துக்கு அடியில் பெரிய பாம்புகளோட உறைவிடம் இருந்திருக்கும்ன்னு சொல்லி அதற்கு பிராய்ச்சித்தம் எல்லாம் பண்ணார்,மற்றபடி பாம்பு அப்புறம் வீட்டுக்குள்ளே ஏறின சம்பவம் நடந்தது இல்லே,நான் பல முறை மழை இல்லாத நேரத்துல பூ பறிக்க போவேன்,முன்னாடி இருக்கற பவழ மல்லி பொருக்கப் போகும் போது நிறைய தடவை ஒரு பாம்பைப் பார்த்துருக்கேன்,அது கொஞ்சமும் சலனம் இல்லாம சுவற்று மூலையில போயிடும்,பட் வீட்டுக்குள்ள எப்படி,அதுவும் பறக்கற மாதிரி,எனக்கு ஆச்சர்யமாவும் இருக்கு,அதே சமயத்துல திகிலாவும் இருக்கு"என்றார்.

நான்,"மனிதர்களுக்கு ஆன்மா இருக்கறா மாதிரியே பாம்புகளுக்கும் ஆன்மா இருக்கு,நிறைய பேர் ஆராய்ச்சி பண்ணிட்டு இருக்காங்க,பாம்புகளோட

ஆவி உங்க வீட்டுல சுத்துது போல,எல்லாத்துக்கும் மேலே எந்த பாம்பு வகைக்கு என்ன வயதுன்னு இன்னும் யாருக்கும் தெரியலை,இட்சாதாரி பாம்புகள் இன்னும் பூமியில இருக்கு"

நான் சொல்லி விட்டு ரம்யாவை பார்த்தேன்.

அவள் என்னைப் பார்ப்பதை தவிர்த்து விட்டு வேறு எங்கோ திரும்பி கொண்டாள்.

அதே நேரத்தில் சசிதரண்,"அதெல்லாம் சரி,என்னோட வீட்டுல மாடியில எடுத்ததுனா இது?"என்று மூர்த்தியைப் பார்த்து கேட்டார்.

"என்ன சார் இவ்வளவு நேரம் கழிச்சு உங்களுக்கு இந்த சந்தேகம்"என்று கேட்டார் மூர்த்தி.

"உங்க வீடுதான் சுற்றியிருக்கற சுவர்களை பாருங்க புரியும்"என்றேன்.

நாங்கள் மாறி மாறி பேசிக் கொண்டிருக்கும் போதே உள்ளே பளீரென விளக்குகள் எரிந்தன.

உள்ளே போன ஆசாமி திரும்பி வந்தார்.

"சேட்டா எல்லாம் சரி பண்ணிட்டேன்,கீழே போயிருந்த ஒயரிங் மட்டும் மாத்தனும்,மாத்திட்டேன்,டேமேஜ் ஆனது மட்டும்,புது ஜெனரேட்டர் எப்ப போடலாம்ன்னு சொல்லுங்க போட்டுடலாம்"என்றான்.

"நான் ஊருக்கு கிளம்பறேன்,வந்து சொல்றேன்"என்றார் சசிதரண்.

எங்கள் பக்கம் திரும்பியவர்,"கொஞ்ச நேரம் இருங்க,இவரை கொண்டு விட்டுட்டு வந்திடறேன்"என்று கிளம்பினார்.

அவர் போனதும் எம்.டி.,"நமக்கு ரொம்ப சேலஞ்சிங்கான விஷயமாத்தான் இந்த ப்ரொக்ராம் இருக்கு போல இருக்கு,ஆரம்பத்துல இருந்து நடந்துட்டு வர்ற விஷயங்கள் எல்லாமே பயங்கரமாத்தான் இருக்கு,நாளைக்கு நாம கிளம்பறதை உறுதி படுத்தறேன்"என்றார்.

நாங்கள் அமைதியாய் இருந்தோம்.

அவர் மூர்த்தி பக்கம் திரும்பி,"இப்ப வலி எப்படி இருக்கு"என்று கேட்டார்.

"நீங்க வேற இந்த ரிகார்ட்டிங் பார்த்த அதிர்ச்சியில எனக்கு எல்லாமே ஓடிப் போயிடுச்சு"என்றார்.

கொஞ்ச நேரத்தில் சசிதரண் வந்து விட்டார்.

அவரிடம்,"நாளை எத்தனை மணிக்கு நாம் இங்கிருந்து கிளம்பறோம்"என்று கேட்டார்.

"நாம் ஏற்கனவே பேசின மாதிரிதான்,லஞ்ச் முடிஞ்சதும் கிளம்பிடுவோம்"

"ஒ.கே."

"நான் போய் இந்த டின் புட் சமாச்சாரம் எல்லாம் எடுத்துட்டு வர்றேன்,அவங்க அவங்களுக்கு தேவையானதை அவங்க அவங்க பேக்குல எடுத்து வச்சுகங்க,அப்புறம் நாம் முதல்ல கடக்க வேண்டியது நல்கொல்லி காட்டுப் பகுதி,அது ஃபாரஸ்ட் டிபார்ட்மெண்ட் ஏரியா,ஏற்கனவே ஃப்ரண்ட் சொன்னதால பர்மிஷன் வாங்கிட்டேன்,அங்கே போய் எல்லாரும் ஒரு கடிதம் கொடுக்கணும்,நாம் சொந்த ரிஸ்க் ல்ல உள்ளே போறோம்ன்னு"என்றார்.

எம்.டி."அது எல்லாம் பிரிண்ட பண்ணியே கொண்டு வந்தாச்சு,பரத் அதை எல்லாம் கொண்டு வந்து கொடுங்க,எல்லார் கிட்டயும் கையெழுத்து வாங்கிடலாம்"என்றார்.

எல்லோரும் திகிலுடன் என்னைப் பார்த்தார்கள்.

நான் வாயைத் திறந்தேன்.

அத்தியாயம் பதினெட்டு

"சார் நடக்கற விஷயத்தை எல்லாம் பார்த்து கொஞ்சம் பயந்தே இருக்காங்க,இந்த நேரத்துல இது அவசியமா?"

"இது ஃபாரஸ்ட் ரூல்ஸ்,உள்ளே ரிஸ்க் எடுத்து போற நாம் இதுல கையெழுத்து போட்டுத்தான் ஆகணும்"பரத்தும் சசிதரணும் சொல்ல எல்லோரும் அதை வாங்கி கையெழுத்து போட்டார்கள்.

நானும் எனக்கு தந்த பத்திரப் பேப்பரை பார்த்தேன்.

கையெழுத்துப் போட்டு திரும்ப கொடுத்தேன்.

ஆனாலும் எல்லோரும் ஒரு வித அமைதியுடன் இருந்தார்கள்.

சசிதரண் பரத்தைப் பார்த்த்தார்.

பரத் எல்லோரிடம் இருந்தும் கையெழுத்துப் போட்டு வாங்கிய பத்திர பேப்பரை மொத்தமாய் ஒரு பிளாஸ்டிக்கில் ஃபோல்டரில் போட்டு சசிதரண் வசம் கொடுத்தான்.

அவர் எழுந்து,"பரத் வாங்க இந்த ஃபுட் கேன்ஸ் எல்லாம் கீழே ஃப்ரீஸர்ல்ல இருக்கு,போய் எடுத்துட்டு வந்துவோம்"என்றார்.

இருவரும் அங்கிருந்து அகன்றார்கள்.

நான் செல்போனை எடுத்துப் பார்த்தேன்.

டவர் ரேஞ்ச் இல்லை.

திடீர் என்று நினைவில் வந்தது அது.

மெல்ல ராம்சந்தர் பக்கம் திரும்பினேன்.

"சார்,நீங்களும் ரம்யாவும் சராவாக் காட்டிலே ஒரு பெரிய பாம்புகிட்ட மாட்டிக்கிட்டு தப்பிச்சதைப் பற்றி சொல்ல ஆரம்பிச்சீங்க நாம வந்துட்டு இருக்கும் போது,அதை ஆரம்பிச்ச உடனேயே நிறுத்த வேண்டியதாச்சு,நாம வந்த வண்டி மேலே மரத்துல இருந்து ஒரு பெரிய பாம்பு விழுந்ததாலே,இப்ப சொல்லுங்க"என்றேன்.

அவர் வியப்புடன் என்னைப் பார்த்தார்.

"என்ன சொல்றீங்க லதா, எப்ப அதை நான் உங்ககிட்ட சொன்னேன்,ஆறு மாசம் முன்னாடி நடந்த விஷயம் அது?"என்று ஆச்சர்யத்துடன் கேட்டார்.

அவர் அப்படி சொன்னதும் அத்தனை பேர் கண்களும் என்னை மிகவும் ஆர்வத்துடன் பார்ப்பதை நான் உணர ஆரம்பித்தேன்.

"சொல்ல ஆரம்பிச்சீங்க,நிறுத்திட்டீங்க"என்றேன்.

அவர் இன்னமும் ஆச்சர்யமாக என்னைப் பார்த்தார்.

எல்லோரையும் பார்த்தார்.

வண்டியில் வரும் போது எங்கள் பக்கத்தில் உட்கார்ந்து வந்த கேமிராமேன் தேவனும் என்னை ஆச்சர்யமாகப் பார்த்தான்.

அவன் ஒரு சாந்த சொரூபி.

அவன் வழக்கமாக அதிகம் பேசவே மாட்டான்.

அவ்வளவு அமைதி.

அவன் 'சட்'டென்று சொன்னான்.

"ஆமாம் சார்,நான் தான் உங்க பக்கத்துல உட்கார்ந்து இருந்தேன்,நீங்க ஆரம்பிச்சீங்க,பாம்பு நம்ம வண்டி மேலே விழுந்தப்ப நீங்க பட்டுன்னு நிறுத்தீட்டீங்க"என்றான்.

ராம்சந்தர்,"எனக்கு உண்மையில அப்படி சொல்ல ஆரம்பிச்சது நினைவில் இல்லை,இருந்தாலும் சொல்றேன்"என்றார்.

அங்கே கூடியிருந்த எல்லோருக்கும் பெரிய ஆவல் பொங்கிய முகமாக மாறியது தோற்றம்.

"இரண்டு வருஷம் இருக்கும்,நானும் ரம்யா கூட போயிருந்தேன்,சரவாக் காட்டுல ஒரு ஆராய்ச்சிக்காக போன மலாய் மாணவர்கள் போயிருந்தோம்,உள்ளே காட்டுக்கு உள்ளே டீப்பா போன் இரண்டாவது நாள் அது நடந்தது,எனக்கு பாம்போட வாசம் ரொம்ப நல்லா தெரியும்,இரு நூறு மீட்டர் தூரத்துலே ஒரு பாம்பு வந்தா கூட நான் தெளிவாயிடுவேன்,இந்த வெரைட்டி பாம்பு வருதுன்னு,நானும் ரம்யாவும் ஒரே டெண்டுல படுத்திருந்தோம்,அன்னைக்கு ராத்திரி அவ படுத்த உடனேயே தூங்கிட்டா, எனக்குதான் ரொம்ப நேரம் தூக்கம் வரவேயில்லை,புரண்டு புரண்டு படுத்திட்டு இருந்தேன்,எப்ப தூங்கினேன்னு எனக்கு தெரியாது,சாதாரணமா ஒரு பெரிய பாம்பு ஒரு மனுஷன சுத்தி இருக்கப் போகுதுன்னா அவன் தனியா இருக்கணும்,பக்கத்துல இன்னொருத்தர் இருக்கும் போது அப்படி நடந்து நான் வாழ் நாள்ல்ல பார்த்தது இல்லே,கேள்விப் பட்டதும் இல்லே,தூக்கம் இல்லாம ஒரு வித மயக்கம்,அப்படியே திப்பியா நினைவுகள் தப்பிட்டே போகுது,வழக்கமா என்னோட உடம்புல சின்ன தூசு வந்து விழுந்தா கூட நான் அலர்ட் ஆகிடுவேன்,தீடீர்ன்னு ஒரு ஃபீல் என்னோட இடுப்புக்கு கீழே ஏதோ நுழையற மாதிரி,'பொட்'டுன்னு கண்ணை விழுச்சிப் பார்க்கறேன்,ரம்யாவோட உடம்புல கீழே நுழைஞ்சிருந்த அந்த பாம்பு என்னோட இடுப்பு கிட்டயும் கீழே சொருக ஆரம்பிச்சது,நான் உடனே நான் சட்டுன என்னோட சட்டைப் பையில வச்சிருந்த துண்டு ஃப்ளேடை எடுத்தேன்,வால்ல ஒரு சின்ன கோடு போட 'விசுக்'குன்னு இழுத்துடுச்சு வாலை,அது இழுத்த

வேகத்தில ரம்யாவும் முழிச்சிட்டா,பேட்டரி லைட்டோட எழுந்தோம்,டெண்டுக்கு வெளியில வந்து பார்க்கும் போதுதான் அந்த பெரிய பாம்பைப் பார்த்தோம்,கிட்டத் தட்ட எட்டு அடி இருக்கும்,எடை உத்தேசமா எழுபத்து அஞ்சு கிலோ இருக்கும்"

தேவன் இடை மறித்தான்.

"என்ன சார் திகில் பண்றீங்க,பார்த்த உடனேயே பாம்போட எடையை சொல்லிடுவீங்களா?"

"எல்லாமே அனுபவம் தான்,ஏற்கனவே அதே மாதிரி பாம்பை,பைத்தான் வெரைட்டியிய பினாங்குல டூரிஸ்ட் ஸ்பாட்ல பார்த்து இருக்கேன்"

"நீங்க அதை காயப் படுத்தீனீங்க,அது உங்களை பழி வாங்க வராதா?"

ராம்சந்தர் சிரித்தவாறே ரம்யாவைப் பார்த்தார்.

ரம்யா,"வரும்,எத்தனை வருஷம் ஆனாலும் அது பழிவாங்க வரும்,எத்தனை கோடி ஜனங்கள் இருந்தாலும் தன்னை காயப் படுத்தின மனிதனோட வாசனை அதுக்கு தெரியும்,சந்தர்ப்பம் அமைஞ்சா அதே காட்டுக்குள்ளே திரும்ப வரும் போது வந்துடும் தேடிட்டு,அதையெல்லாம் எதிர்பார்த்து தான் அதே காட்டுக்குள்ளே திரும்ப போகும் போது அலர்ட் ஆ இருக்கணும்"என்றபடியே என்னை பார்த்தாள்.

அப்பொழுது அவள் பார்த்த பார்வையில் கொஞ்சம் வித்தியாசம் இருந்தது.

அவள் பார்வையில் அர்த்தம் எனக்குப் புரியவில்லை.

ஆனாலும் அவள் எதையோ எனக்கு உணர்த்த முயல்வது போல் இருந்தது.

நாங்கள் சுவாரஸ்யமாய் பேசிக் கொண்டிருக்கும் போதே சசிதரனும் பரத்தும் இரண்டு பெரிய சாக்கு மூட்டைகளை கொண்டு வந்து நடுவில் வைத்தார்கள்.

"இதென்ன இவ்வளவு பெரிய மூட்டைகள்?"என்று கேட்டார் எம்.டி.

"இதில் எல்லாவகையான உணவு டின் களும் இருக்கு,யார் யாராக்கு என்ன பிடிக்குதோ,பார்த்து எடுத்து வச்சுகங்க"என்றார்.

எல்லோரும் பாம்பு கதையில் உறைந்து போய் உட்கார்ந்து இருந்தார்கள்.

"வாட் ஹாப்பண்ட நாங்க உள்ளே போயிருந்தப்ப எதாவது இண்டர்ஸ்டிங்கா பகிர்ந்துகிட்டீங்களா?"

'ஆம்'என்ற நான் ராம்சந்தருக்கும் ரம்யாவிற்கும் சரவாக் வனத்தில் ஏற்பட்ட அனுபவம் பற்றி சொன்னதை விளக்கினேன்.

சசிதரண் கண்கள் பீதியில் ஆழ்ந்தது எனக்கு நன்றாக தெரிந்தது.

ஆனாலும் சிரித்துக் கொண்டே"நாம போகப் போற ஆள் கொல்லி மலையிலயும் பெரிய பாம்புகள் இருக்கு,அதை தாண்டிதான் நாம சர்ப்பக் காவுக்கு போகணும்"என்றார்.

தொடர்ந்து,"என்னோட அனுபங்களை கேட்டாலும் நீங்க எல்லோரும் ஆச்சர்யப் படுவீங்க"என்று சொல்லி நிறுத்தினார்.

வாசுகி,"சார் கொஞ்சம் இடைவெளி விடுங்க,இப்பத்தான் அவர் அனுபவத்தை கேட்டு மிரண்டு போய் உட்கார்ந்து இருக்கோம்,நீங்க வேற அடுத்ததை ஆரம்பிச்சுடாதீங்க,பயந்து பயந்து வருது"என்றாள்.

எம்.டி.முகத்தில் புன்னகையுடன்,"அவர் சொல்றதையும் கேட்டுக்கிட்டா நாம என்னன்னு தெரிஞ்சுகிட்டு கொஞ்சம் ஜாக்கிரதையா இருக்காலாம் இல்லே"அவர் சொல்லிக் கொண்டிருக்கும் போது வெளியில் ஒரு பெரிய மின்னல் வெட்டி தொடர்ந்து இடி சப்தம் பயங்கரமாய் கேட்டது.

வாசுகி,"எதுவா இருந்தாலும் இப்ப வேண்டாம்,மதியம் சாப்பாடு முடிஞ்சதும் பேசலாம்"என்றாள்.

"அதுவும் சரிதான்,சாப்பிடும் போது சுவாரஸ்யமாய் பேச ஏதாவது வேணும் இல்லே"என்றேன் நான்.

"பாருங்க இந்த வேலையில சமையல் எந்த அளவுல இருக்குன்னு கவனிக்கவேயில்லை"

"நீங்க கவனிக்கலைன்னாலும் காலையில நான் கேட்டு வச்சுட்டேன் இல்லே"என்றார் ராமச்சந்தர்.

"உருளைப் பொறியல்,சின்ன வெங்காய சாம்பார்,ஸ்பெஷல் மசால் வடை"என்று பட்டியலை சொன்னார்.

பேசிக்கொண்டே இருக்கும் பொழுதே கவனித்தேன்.

ரம்யா ஏதோ சங்கடத்தில் நெளிவது தெரிந்தது.

அவள் எழுந்து அறையை நோக்கிப் போனாள்.

நான் சிறிது நேரம் கழித்து நானும் எழுந்தேன்.

அத்தியாயம் பதினெட்டு

ரம்யா போன வேகத்தில் அறைக்குள் இருந்து வெளியில் வந்தாள்.

நான் அவளை தொடர்ந்து வந்தது தெரியாமல் இருக்க அவளைக் கடந்து அறைக்குள் நுழைந்தேன்.

எதற்கு வேகமாய் உள்ளே வந்தால் ஏன் வெளியில் சென்றால் என்று புரியவில்லை.

மெல்ல ஒவ்வொரு இடமாக பார்த்தேன்.

அறைக்குள் எந்தவித மாற்றமும் இல்லை.

எதற்கோ வந்திருக்கிறாள்.

என்ன காரணத்தினோலோ உடனே வெளியேறி விட்டாள்.

யோசித்தபடியே நின்று கொண்டிருந்த நான் திரும்பினேன்.

எனக்கு மிக அருகில் நின்றிருந்தாள் ரம்யா.

நான் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை.

அவள் முகத்தில் எந்த வித சலனமும் இல்லை.

எளிதில் படிக்க முடியாததாக இருந்தது அவளின் முக பாவம்.

எந்த வித சலனமும் இல்லாமல் வைத்துக் கொள்ள ஒரு வித தனித் திறன் வேண்டும்.

பலர் கூடியிருக்கும் இடத்தில் சங்கடமான பாதிக்கும் தருணங்களில் இப்படி பெண்கள் முகத்தினை வைத்துக் கொள்வது அதிகம்.

"என்ன ரம்யா?"

"நான் வந்ததும் என் பின்னாடியே வந்தீங்க,என்னை வேவு பார்க்கறீங்களா?"

அவள் 'பட்'டென்று கேட்டு விட்டாள்.

எனக்கு அதிர்ச்சியாய் இருந்தது.

அவள் அப்படி கேட்பாள் என்று நான் கொஞ்சமும் எதிர்ப்பார்க்கவில்லை.

உடனே என்ன சொல்லி சமாளிப்பது என்று தான் வினாடியில் யோசித்தேன்.

"என்ன அப்படி கேட்ட ரம்யா உன்னை வேவு பார்க்க என்ன இருக்கு,நீயும் ராமச்சந்தரும் எங்களுக்கு உதவ தானே வந்தீங்க?"என்று கேட்டேன்.

"இல்லை நேத்து ராத்திரி கூட நான் சரியா தூங்கலை,என்னமோ நீங்க என்னையே பார்த்துட்டு படுக்கையில உட்கார்ந்து இருந்தா மாதிரி எனக்கு தோணுச்சு"

அவள் அவ்வளவு உன்னிப்பாக கவனித்து இருக்கிறாள் என்பதே எனக்கு திகைப்பை ஏற்படுத்தியது.

பேச்சுக்கு முற்றுப் புள்ளி வைக்க நினைத்தேன்.

"அப்படியெல்லாம் இல்லே,எனக்கு தூக்கம் வராதது உண்மைதான்.படுக்கையிலேயே உட்கார்ந்திருந்தேன்"என்றேன்.

"என்ன ரெண்டு பேரும் இங்கே வந்துட்டீங்க,அங்கே ஃபுட் கேன் எல்லாம் எடுத்துட்டு இருக்காங்க,நீங்க லேட்டா வந்தா இருக்காது"என்றபடியே வாசுகி வந்தாள்.

"அதுவும் நல்லதுதான் எப்படியும் யாரோட ஷோல்டர் பேக்குலவாவது இருக்கும் இல்லே,சுமக்கற வலி மிச்சம்"என்றேன் நான்.

"அட இது வேறயா?"வாசுகி கையை பிடித்து இழுக்காத குறையாக எங்கள் இருவரையும் அழைத்துக் கொண்டு வந்தாள்.

நான் சில ஃபுட் கேன் களை தேர்வு செய்து எடுத்து வைத்து கொண்டேன்.

உள்ளிருந்து வெங்காய சாம்பார் வாசம் தூக்கியது.

கொஞ்சம் மழை குறைந்தார் போல் இருந்தது.

சாப்பிட உட்கார்ந்தோம்.

தேவன்,"மழை விட்டா மாதிரி இருக்கே,சாப்பிட்டதும் கிளம்பிடலாமா?"என்று பொதுவில் கேட்டார்.

எம்.டி.,"இல்லே திட்டமிட்ட படி நாளை கிளம்பறோம்"என்றார்.

வாசுகி,"நம்ம சேனல்ல இருந்து ஒரு தகவலும் இல்லையே"என்று கேட்டாள்.

"நாமதான் தொடர்ப்பு எல்லைக்கு வெளியில் இருக்கோமே"என்றேன்.

"நான் வீட்டுல கேபிள் கனெக்ஷன் போடலை,இல்லேன்னா அதுலயாவது உங்க சேனல் பார்க்கலாம்"என்றார் சசிதரண்.

பரிமாறிக் கொண்டிருந்த சமையல் கார அம்மாள் சொன்னாள்.

"வாசல்ல யாரோ நிக்கறாங்க"என்றாள்.

எல்லோருமே அனிச்சையாக திரும்பிப் பாத்தோம்.

சொட்ட சொட்ட நனைந்த படி நின்றிருந்தாள் அந்த வயதான பெண்மணி.

"ரொம்ப பாவமா இருக்கே"என்றாள் வாசுகி.

சசிதரண் அந்தப் பெண்மணியைப் பார்த்தார்.

"வரு"என்றார்.

அந்தம்மாள் முன்னே வர-

சமையல்கார பெண்மணியிடம்-

"முதல்ல அந்தம்மாவுக்கு ஒரு துண்டு கொடுங்க,அப்புறம் தட்டுல சாப்பாடு போட்டு கொடுங்க"என்றார்.

அந்தம்மாளைப் பார்த்தார்.

"ஸ்தலம் எவ்விடையானு?"

அந்த அம்மாள் பதில் சொல்லாமல் கைகளினால் கீழே தரையை காட்டினாள்.

"ஓ இந்த ஊர் தானா,பார்த்ததே இல்லை"என்றார்.

சமையல்கார பெண்மணி உள்ளே சென்று ஒரு புதிய துண்டை கொண்டு வந்து கொடுத்தாள்.

அதனால் தலையை மட்டும் துவட்டிக் கொண்டே சமையல்கார அம்மாளை பார்த்து காரைப் பற்கள் தெரிய சிரித்தாள்.

சமையல்கார அம்மாள் ஒரு தட்டில் சோற்றைப் போட்டு அதன் தலையில் சாம்பாரை ஊற்றி அந்தம்மாள் கையில் கொடுத்தாள்.

அதை வாங்கி கொண்டு சமையல் அறை வாசலிலேயே உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்தாள்.

அவள் என்னைப் பார்த்தாள்.

அவள் கண்களில் ஒரு வித நகைப்பு இருந்தது.

நான் சின்ன திகைப்புடன் அவளையே பார்த்து கொண்டிருந்தான்.

ஒரு வினாடி அங்கு அவள் இல்லாதது போல் இருந்தது.

அடுத்த வினாடி பற்கள் தெரிய என்னைப் பார்த்து சிரித்தாள்.

எனக்கு கொஞ்சம் திகிலாய் தான் இருந்தது.

என் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ரம்யா என்னை தட்டி 'சாப்பிடுங்க'என்றாள்.

நான் சுயத்துக்கு திரும்பினேன்.

சாப்பிட ஆரம்பித்தேன்.

ஆனால் எனக்குள்ளே ஒரு உறுத்தல்.

என்னை யாரோ பார்த்துக் கொண்டிருப்பது போல்.

சாப்பிட்டுக் கொண்டே மீண்டும் அந்தம்மாளை பார்த்தேன்.

அப்பொழுதுதான் அது நிகழ்ந்தது.

'ஹே ஹே'என்று பெரும் கூச்சலிட்டு கத்தினாள் அந்த பெண்மணி.

எல்லோரும் அதிர்ந்து அந்தம்மாளை பார்ப்பதை அறிந்தேன்.

நானும் ஒரு அதிர்ச்சியோடு அந்தம்மாளை பார்த்து கொண்டிருந்தேன்.

எங்களை நோக்கி தன் கையில் இருந்த தட்டை விசிறி எறிந்தாள்.

எங்களின் மேல் எல்லாம் குழம்பும் சோறும் விழுந்தன.

எழுந்து நின்றாள்.

அவளின் முகம் இப்பொழுது மாறி இருந்தது.

அவளின் உடல் முழுக்க பாம்புகள் அங்கும் இங்கும் தொங்கி நெளிந்து கொண்டிருந்தேன்.

"டேய் எங்கடா கிளம்பிட்டீங்க,உங்கள்ல ஒருத்தருக்கும் உயிர் மேலே ஆசை இல்லையா,எத்தனை பேரை காவு வாங்கப் போறேன் தெரியுமா?"என்று கர்ண கொடூரமான குரலில் கத்தினாள்.

"ஒருத்தன் உயிரோட திரும்ப மாட்டீங்க"என்றாள் தொடர்ந்து.

நான் பீதியுடன் அவளை பார்த்து கொண்டிருந்தான்.

சமையல்கார அம்மாள் அந்த பெண்மணியின் தோற்றம் பார்த்து 'அம்மே'என்றலறிய படி உள்ளே ஓடிப் போனாள்.

பக்கத்தில் இருந்த ரம்யா என் கைகளைப் பற்றினாள்.

அவள் கைகள் 'சுரசுர'ப்பாய்தான் இருந்தன.

நான் எம்.டி.யையும் சசிதரனையும் மாறி மாறி பார்த்தேன்.

எல்லோர் பார்வையும் அந்தம்மாள் மேல் தான் பதிந்திருந்தது.

அந்தம்மாள் நாங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே,விருட்டென்று வாசலை நோக்கி விரைந்தாள்,விரைந்தாள் என்று சொல்வதை விட பறந்தாள் என்பதே சரியாய் இருக்கும்.

நான் அப்பொழுதுதான் தேவனை பார்த்தேன்.

அவன் அனைத்தையும் படம் பிடித்து கொண்டிருந்தான்.

சடுதியில் காணாமல் போனாள்.

எம்.டி.தேவனை பார்த்தார்.

"முழுக்க எடுத்தீங்களா?"என்று கேட்டார்.

"எனக்கு என்னமோ அந்தம்மா வரும் போதே கவனிச்சேன்,என்னமோ வித்தியாசமா தோணுச்சு,பக்கவாட்டு ரூம்ல்ல கேமிராவை ஸ்டேண்ட் போட்டு வச்சேன்,அவங்க கத்த ஆரம்பிச்சதும் போய் கையில தூக்கிட்டு வந்தேன்"என்றான்.

"இங்கே கொண்டு வாங்க பார்க்கலாம்"

தேவன் காமிராவில் பதிவு செய்திருந்ததை காண்பிக்க பார்த்தோம்.
மிரட்டலாக இருந்தது.
"சசிதரண் இங்கே தனியார் கூரியர் இருக்கா?"
"இருக்கு டவுன்ல்ல,இப்ப கொண்டு கொடுத்தா,நாளைக்கு காலையில டெலிவரி ஆயிடும்"என்றார்.
எம்.டி."ஓ.கே.தேவன் நீங்க இப்பவே தேவன் கூட போய் இந்த டேப்பை பேக் பண்ணி அனுப்புங்க எடிட்டருக்கு,நாளைக்கு ப்ரோமல்ல ஏத்தட்டும்"என்றார்.
"நிச்சயமா சார்"என்றான் தேவன்.
தேவன் சசிதரணுடன் கிளம்பி போனான்.
எம்.டி.ஏதோ சிந்தித்து கொண்டே இருந்தார்.
கேமிராவில் புது டேப் போட்டு எங்களை பார்த்து ஸ்டாண்டில் செட் செய்து விட்டு போயிருந்தான்.
நாங்கள் உரையாடுவதை கூட படம் பிடிக்க வேண்டும் எம்.டி.சொல்லி விட்டார்.
எம்.டி.திடீர் என்று 'லதா'என்றார்.
"சொல்லுங்க சார்"என்றேன்.
அப்பொழுது-
அத்தியாயம் பத்தொன்பது
காமிரா ஸ்டேண்ட் 'படபட' என்று அதுவாகவே ஆட ஆரம்பித்தது.
ராமச்சந்தர் எழுந்து அதை அழுத்திப் பிடித்தார்.
எம்.டி.வேகமாய் ஓரமாய் தேவன் எடுத்து வைத்திருந்த கேமிராவை ஆன் செய்து ஆடிக் கொண்டிருந்த ஸ்டாண்டை படமெடுக்க ஆரம்பித்தார்.
ஆடிக் கொண்டிருந்த ஸ்டாண்ட படாரென்று எம்.டி.யின் தலையில் அடித்தது.
அதைப் பிடித்துக் கொண்டிருந்த ராமச்சந்தர் எகிறி யாரோலோ தள்ளப் பட்டது போல் சுவர் மீது தூக்கியெறியப் பட்டு விழுந்தார்.
நான் அதிர்ச்சியில் இருந்தேன்.
சுவரோரம் உட்கார்ந்து கொண்டேன்.

எங்கிருந்தோ ஒரு வாசனை.
அதேதான் பயத்தம் வாசனை அறை முழுவதும் படர்ந்தது.
பாம்புகள் அதிகம் நடமாட்டம் இருக்கும் இடத்தில் மட்டுமே வீசும் வாசம்.
நான் கொஞ்சம் திகிலோடு இருபுறமும் மிரண்டு பார்த்துக் கொண்டிருந்தேன்.
வாசல் கதவு 'தடார்' என்று யாரோ அறைந்து சாத்தியது போல் மூடிக் கொண்டது.
மின்னல் ஒன்று பளீரென்று வெட்டியது.
தொடர்ந்து பலத்த இடி.
உத்தரத்தில் பார்க்க மேல் பக்கம்
நீண்ட பாம்பு ஒன்று படுத்திருப்பது போல் தோன்றியது.
கருப்பாக அது மேல்பக்கமே நெளிந்தது போல் இருந்தது.
அதன் தோற்றமே என்னை மிரளச் செய்தது.
ரம்யாவிடம் அதைக் காட்ட அவள் சாதரணமாய் இருந்தாள்.
வாசுகி நான் ரம்யாவிடம் காட்டியதும் மேலே பார்த்து அலறினாள்.
ஐந்து நிமிடம் அங்கே என்ன நடக்கிறது என்றே தெரியாத அளவுக்கு களேபரம்.
கண்களை மூடி உட்கார்ந்தேன்.
'தட் தபால் டமார்'என்று ஒரு பெரிய சப்தம்.
கண்ணாடி நொறுங்கும் சப்தம்.
எது விழுந்தது,எது உடைந்தது.
கொஞ்ச நேரத்தில் வெளியில் மீண்டும் மின்னல்.
தொடர் இடி.
மழையின் ஓசை அதீதமாய் கேட்டது.
அவ்வளவு நிசப்தத்திற்குள் திடீர் என்று அறை ஆழ்ந்து விட்டது.
மெல்ல கண்களைத் திறந்தேன்.
எம்.டி.மடியில் கேமிராவை புதைத்துக் கொண்டு எதிர்புறம் சுவரில் சாய்ந்து உட்கார்ந்திருந்தார்.

அவர் பக்கத்தில் வாசுகி மற்றும் ராமச்சந்தர்.

எனக்கு பக்கத்தில் ரம்யா.

அவள் கண்களை அகல திறந்து வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

மூன்று நாளாக எதுவுமே சொல்லாமல் இருந்த திருஞானம் என்னை பார்த்து,"என்னம்மா நடக்குது இங்கே,காட்டுக்கு சீரியல் பண்ண கூட்டிட்டுப் போறேன்னு சொல்லிட்டு,அங்கே நுழையறதுக்குள்ளேயே எங்களை எல்லாம் காவு வாங்கிடுவ போல இருக்கிறது"பலவந்தமாக சிரிப்பை வரவழைத்துக் கொண்டு பேசினாலும் அவர் முகம் திகிலில் மீண்டும் வீழ்ந்தது தெரிந்தது.

"தெரியலை சார்,எனக்கென்னமோ எதுவும் விபரீதமா நடக்காதுன்னு தோணுது"

"உனக்கு ஒண்ணும் நடக்காது,எங்களுக்கு"என்றார்.

"ஏன் சார் இப்படி பிரிச்சுப் பேசறீங்க,நாம எல்லாம் ஒரே இடத்துல இருக்கோம்"

"அது சரி நான் இன்னும் கல்யாணம் கூட பண்ணிக்கலை"

உடனே ராமச்சந்தர் சிரித்துக் கொண்டே,"அதுக்கென்ன சார்,சசிதரண் வந்ததும் அவரை விட்டு இந்த ஊர்ல்ல நல்ல ஃபிகரைப் பார்த்து உங்களுக்கு கல்யாணம் பண்ணி வச்சுடறோம்"என்றார்.

சிவஞானம்,"அட போங்க சார்,நீங்க வேற இந்த நேரத்துல ஜோக் அடிச்சுகிட்டு"என்று அமைதியாகி விட்டார்.

எங்களின் பிராதன கேமிரா மேன் கண்ணன் மாடியில் இருந்து இறங்கி வந்தார்.

"என்ன ஓரே சப்தம்,கொஞ்சம் நேரம் தூங்கலாம்ன்னு போனேன்"என்றபடியே சோபாவில் உட்கார்ந்தார்.

"என்ன எல்லோரும் ஆளுக்கு ஒருபக்கம் உட்கார்ந்து இருக்கீங்க"என்று தொடர்ந்து கேட்டார்.

எம்.டி.மெல்ல புன்னகைத்தார்.

"சர்தான்,கண்ணன்,அப்படி ஒரு தூக்கமா"என்று காமிராவை பக்கத்தில் ஓரமாய் வைத்து விட்டு

எழுந்தார்.
பின் அதை எடுத்து கண்ணனிடம் கொடுத்து,"கொஞ்ச நேரம் முன்னாடி இங்கே நடந்தது எல்லாம் பதிவாகியிருக்கும் பாருங்க"என்றார்.
கண்ணன் காமிராவில் கண்களைப் பொதிக்க-
எல்லோரும் அவரை சூழ்ந்து கொண்டோம்.
அவர்,"வேர் ஈஸ் தேவன்?"என்றார்.
"ப்ரோமுவுக்கு கூரியர் பண்ண போயிருக்காரு சசிதரண் சார் அழைச்சுட்டு போயிருக்காரு,இப்படி ஒண்ணு நடக்கப் போவுதுன்னு தெரிஞ்சிருந்தா,இதையும் சேர்த்து எடுத்துட்டுப் போக சொல்லியிருக்கலாம்"என்றார் எம்.டி.
வெளியில் மழை கொட்ட ஆரம்பித்தது.
சிவஞானம்,"இப்படி மழை கொட்டுச்சுன்னு எப்படி நாம சரியான நேரத்துக்கு கிளம்பறது?"என்று கேட்டார்.
நான்,"சார் என்ன நடந்தாலும் என்ன மழை கொட்டினாலும் நாம் நாளைக்கு பேசின படி கிளம்பிடறோம்"என்றேன்.
"எஸ்"என்றார் எம்.டி.
ரம்யா ஒன்றும் பேசாமல் இருந்தது எனக்கு ஆச்சர்யத்தினை தந்தது.
நான் பார்ப்பதை உணர்ந்த அவள் என்னைத் திரும்ப பார்த்தாள்.
அவள் கண்களில் ஒரு கள்ளம் இருந்தது.
என்னைப் பார்த்து அவள் முறைத்தாள் என்றே சொல்ல வேண்டும்,அப்படித்தான் இருந்தது அவள் பார்வை.
எம்.டி."லதா,நடக்கறது எல்லாம் பார்த்தா நம்ம ப்ரொக்ராம் சூப்பர் டூப்பர் ஹிட் ஆகும் போல இருக்கு"என்றார்.
"ஆனா அதுக்கு முன்னால சிலரை காவு வாங்கிடும் போல இருக்கே"என்றார் ராம்சந்தர்.
"நானும் அதையே தான் நினைக்கிறேன்"என்றாள் ரம்யா.
எம்.டி."நீங்க ரெண்டு பேரும் எங்களுக்கு செக்யூரிட்டியா வந்திருக்கீங்க,நீங்களே இப்படி

சொல்லலாமா?"என்று கேட்டார் சகஜமான குரலில்.

ஆனால் அவர் அவர்களின் பேச்சை சகஜமாக எடுத்துக் கொள்ளவில்லை என்பதை நான் உணர்ந்தேன்.

எந்த நேரத்தில் எப்படி அவர் பேசுவார் என்பது எங்களுக்குத் தானே தெரியும்.

கடுமையான கோபத்தில் இருக்கிறார் என்பதை நான் உணராமல் இல்லை.

வெளியில் ஜூப் சப்தம்.

கொஞ்ச நேரத்தில் தேவனும்,சசிதரணும் உள்ளே நுழைந்தார்கள்.

நாங்கள் எல்லோரும் ஆளுக்கொரு இடத்தில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து,"என்ன ஆச்சு,எல்லாமே பேய் அடிச்சா மாதிரி உட்கார்ந்து இருக்கீங்க?"என்று கேட்டார்.

தேவன் கண்ணனின் கையில் கேமிராவைப் பார்த்து விட்டு எம்.டி.யைப் பார்த்து,"சார் அடுத்த ப்ரொமுவுக்கு ஏதோ சம்பவம் நடந்துட்டா மாதிரி தெரியுது"என்று திகிலுடன் கேட்டார்.

நான் சொல்லலாம் என்று நினைக்கும் முன் சிவஞானம் அப்படியே நடந்ததை ஒரு வினாடி நிகழ்வு கூட விடாமல் அப்படியே சொன்னார்.

அவர் சொன்ன விதமே இன்னும் திகில் ஊட்டுவதாக இருந்தது.

சசிதரண் அப்படியே தலையைப் பிடித்துக் கொண்டு கண்ணன் பக்கத்தில் உட்கார்ந்தார்.

தேவன் கண்ணனிடம் இருந்து கேமிராவை வாங்கி பார்த்தார்.

நான் மெல்ல எழுந்தேன்.

கண்ணனுக்கு பக்கத்தில் கேமிராவை வ்யூ ஃபைண்டரில் பார்த்துக் கொண்டிருந்த தேவன் அருகில் போனேன்.

தேவன் என் பக்கம் திருப்பிக் காட்ட நானும் பார்த்தேன்.

என் திகிலான முகம் துல்லியமாய் பதிவாகியிருந்தது.

எம்.டி.யை பார்த்தேன்.

"சார் இதை உடனே அனுப்புங்க,வித் அவுட் எடிட்டிங்,இசைக்கோர்வை மட்டும் சேர்த்து போட சொல்லுங்க,நம்ம தொலைக்காட்சி நம்பர் ஒன் பொசிஷனுக்கு வந்துடும்"என்றேன்.

சசிதரண்,"அனுப்பிடுவோம்"என்றார்.

அவர் படு உற்சாகமாய்த்தான் இருந்தார்.

"பசிக்குது"என்றாள் வாசுகி.

"இப்பத்தானே சாப்பிட்டோம்"

"என்னனு தெரியலை,ரொம்ப பசிக்குது"என்றாள்.

சசிதரண் கிச்சனைப் பார்த்து சமையல் கார அம்மாவை கூப்பிட்டார்.

பதில் இல்லை.

'அம்மே அம்மே'என்று கத்திக் கூடப் பார்த்தார்.

பதில் இல்லை.

சசிதரண்,"எங்க போச்சு இந்தம்மா"என்று எழுந்தார்.

சமையல் அறை நோக்கி நடந்தார்.

அதே நேரத்தில் என் பக்கம் சின்ன கனைப்பு-

திரும்பிய நான் அதிர்ந்தேன்.

அத்தியாயம் இருபது

என் பின்னால் இருந்து ஏதோ சப்தம்.

திடுக்கிட்டு திரும்பினேன்.

பின்னால் ரம்யா நின்றிருந்தாள்.

நான் எழுந்தேன்.

எனக்கு மிக அருகில் இருந்தாள் ரம்யா.

அவளின் கண்கள் நீலம் பூத்தது போல் இருந்தது.

வெளியில் ஒரு மின்னல் வெட்டியது.

அந்த மின்னலில் அவள் கண்கள் பார்ப்பதற்கு ஒரு மிரட்டலாய் இருந்தது.

அவள் என்னை ஆக்ரோஷமாகத் தான் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவள் மீதிருந்து அந்த வாசம் வீச்சமாய் அடிக்க ஆரம்பித்தது.

'ரம்யா'என்றேன் கொஞ்சம் சப்தமாக.

அவள் முகம் 'சட்'டென்று சாதரண நிலைக்கு மாறியது.

மாடிப் படியில் இருந்து இறங்கி வந்து கொண்டிருந்தார் எங்களின் பிரதான கேமிரா மேன் கண்ணன்.

எம்.டி.,"வந்ததிலிருந்தே ரொம்ப மவுனமாவே இருக்கீங்க,சாப்பிட்டதும் மாடிக்குப் போயிட்டீங்க,கீழே பிரளயமே வந்தாலும் வர மாட்டீங்க போல"என்றார்.

"இல்லே காட்டுக்குள்ளே போயிட்டா நாம எப்ப ரெஸ்ட் எடுப்போம்ன்னு தெரியாது,அதுதான் இப்பவே எடுக்கறோம்"

"நல்லது பெரிய கலவரேம் நடந்து போச்சு கீழே,தேவனும்,சசிதரணும் டேப்பை எடுத்துட்டு கூரியர்ல்ல அனுப்ப போயிருக்காங்க,புது டேப்ல்ல பதிவானதைப் பாருங்க"என்றார் எம்.டி.

கண்ணன் கேமிராவை அவரிடம் இருந்து வாங்கி கொண்டு சோபாவில் உட்கார்ந்தார்.

அவர் கண்கள் விரிந்தன.

நானும் பின்னால் போய் நின்று கொண்டு பார்த்தேன்.

முழுவதும் பார்த்தவர்,"இப்ப இதையும் ப்ரோமுவுக்கு அனுப்பிடணும் இல்லே"என்று எம்.டி.யிடம் சொல்ல எம்.டி."யெஸ்"என்றார்.

வெளியில் மீண்டும் மின்னல் வெட்டியது.

அறை முழுவது பெரும் ஒளி வெள்ளம்.

நான் அனிச்சையாய் ரம்யாவை திரும்பிப் பார்த்தேன்.

அவள் ஒரு நீண்ட பாம்பு நிற்பது போல் இருந்தது.

எனக்குத்தான் அப்படி தோன்றுகிறதா என்று மற்றவர்களைப் பார்த்தேன்.

ராம்சந்தரும் சிவஞானமும் ரம்யாவைப் பார்த்துக் கொண்டுதான் இருந்தார்கள்.

அவர்கள் முகத்தில் எந்த மாற்றமும் இல்லை.

நான் சிவஞானம் அருகில் போய் மெல்லிய குரலில்,"சார்"என்றேன்.

"என்ன லதா?"

"உங்களுக்கு ரம்யாவைப் பார்த்தா ஏதாவது வித்தியாசமா தெரியுது"

நான் சொன்னவுடன் அவர் ரம்யாவை நிமிர்ந்துப் பார்த்தார்.

பின் என்னிடம்,"இல்லை லதா எனக்கு ஒண்ணும் அப்படி தெரியலை,நீ எதை மீன் பண்றே?"என்று கேட்டார்.

"எனக்கு என்னமோ அவ மேல ஒரு டௌட் இருக்கு சார்?"

"எதுல?"

"அவ மேல ஒரு கண்ணு வச்சுகங்க"என்றேன்.

எங்களின் அருகில் வந்த வாசுகி,"என்ன சீனியரும் ஜூனியரும் ஏதோ ரகசியம் பேசறா போல இருக்கு?"என்று கேட்டதும்,"ரகசியம் என்ன ரகசியம்,உனக்கு ரம்யாவைப் பார்த்தா ஏதாவது வித்தியாசமா தோணுதா?"என்று மெல்லிய குரலில் பொசுக்கென்று கேட்டார் சிவஞானம்.

வாசுகியின் முகம் கொஞ்சம் மாறித்தான் போனது.

அவள் ரம்யாவைப் பார்த்தாள்.

பின் எங்களிடம்,"எனக்கென்னமோ எந்த மாதிரி புதுசாவும் தெரியவில்லை"என்றாள்.

எம்.டி.எங்களை கவனித்து விட்டார்.

"என்ன நடக்குது அங்கே?"

சிவஞானம்,"லதாவ விட வாசுகிக்கு ஆர்வம் அதிகமாயிடுச்சு,காட்டைப் பற்றி எங்ககிட்ட கேட்டுட்டு இருக்கா"என்றார்.

வெளியில் ஜீப் சப்தம் கேட்டது

கொஞ்ச நேரத்தில் தேவனும்,சசிதரணும் வந்தார்கள்.

எங்களைப் பார்த்ததுமே ஏதோ நடந்திருப்பதை புரிந்து கொண்டது போல் தோன்றியது.

"அடுத்து என்ன நடந்தது?"என்று என்னைப் பார்த்து கேட்டார்.

நான் கண்ணனிடம் இருந்த கேமிராவைப் பார்த்தேன்.

சசிதரண் அருகில் போய் பார்த்தார்.

கண்ணன் முழுவது அவருக்கு காட்ட கண்களில் அதிர்ச்சி பொங்க பார்த்தார்.

பின் எம்.டி.யைப் பார்த்தார்.

"மழை தொடர்ந்து பெய்யுமாம்,டவுன்ல்ல டி.வி.யில செய்தி பார்த்தேன்,காட்டுக்குள்ளே போற நேரத்தை மாத்தற எண்ணம் ஏதும் இருக்கா?"என்று கேட்டார்.

"அதெல்லாம் இல்லே,நாம் காட்டுக்குள்ள போன பிறகு மழை திடீர்ன்னு வந்தாலும் முன்னேறி போயிட்டே தான இருப்போம்"என்றார்.

"அதுவும் சரிதான்,ஒரு நிமிஷம் இந்த அம்மாகிட்ட சில பொறுப்புகளை சொல்லிட்டுப் போகணும்"என்றவர் சமைய்லறை பக்கம் பார்த்து குரல் கொடுத்தார்.

"காத்யாயிணி காத்யாயிணி"என்று.

அவர் கூப்பிட்ட விதமே ஏதோ அசம்பாவிதத்தி எதிர்பார்த்தவர் போல் தோன்றியது.

உள்ளிருந்து பதில் வரவில்லை.

அவர் மீண்டும் கூப்பிட்டார்.

பதில் இல்லை.

"நான் போய் பார்க்கட்டுமா சார்"என்றபடியே முன்னேறினேன்.

"பாருங்க,அப்படியே எல்லாருக்கும் டீ போட சொல்லுங்க,உள்ளேதான் ஒரு பக்கம் தூங்கியிருக்கும் அந்தம்மா?"

நான் உள்ளே கிச்சனுக்குள் நுழைந்தேன்.

அங்கே அவள் இல்லை.

உள்ளே சமையல் அறைக்குள்ளேயே பொருட்களுக்கு என்று ஒரு அறை இருப்பதை முதல் நாளே பார்த்திருந்தேன்.

அங்கே இருக்கிறாரா என்று முன்னால் சென்றேன்.

உள்ளே அறைக்குள் வெளிச்சம் இல்லை.

நகர்ந்து சென்ற நான் சுவரில் கையைத் தடவி விளக்கைப் போட்டேன்

சுவரின் ஓரத்தில் அந்தம்மாள் சரிந்து கிடந்தாள்.

பக்கத்தில் பருப்பு டப்பா கவிழ்ந்து கிடந்தது.

நான் 'சார்'என்று அலறினேன்.

பலர் ஓடி வருவதை அவர்களின் காலடி சப்தம் சொன்னது.

அந்தம்மாளின் கழுத்தைப் பார்த்தேன்.

நரம்பு புடைத்து புடைத்து தணிந்தது.

கையை வைத்துப் பார்த்த சசிதரண்'உயிர் இருக்கு யாராவது கை கொடுங்க முன்னறைக்கு தூக்கிட்டுப் போகலாம்"என்று தொடர்ந்து குரல் கொடுத்தார்.

யார் யார் தூக்கினார்கள் என்று கூட தெரியவில்லை.

சில வினாடிகளில் முன்னறையின் சோபாவில் கிடத்தினார்.

வேகமாய் ஓடினார் வாசலுக்கு.

திரும்பியவர் கைகளில் ஏதோ கொடி வேர்.

அந்த இலைகளை கையில் வைத்து கசக்கி அந்தம்மாளின் வாயில் பிழிந்தார்.

கொஞ்ச நேரம் அந்த அம்மாள் கால்களை உதறினார்.

மெல்ல கண்களைத் திறந்தார்.

நாங்கள் ஆச்சர்யத்தோடு அவரைப் பார்த்தோம்.

"எந்த கடுமையான விஷம் குறிப்பா ஊர்வன மூலம் ஏறினாலும், இந்த காட்டுக் கன்னி வேர் காப்பாத்தும்,நாம போகப் போற காட்டுல நிறையா இருக்கு,அது இயற்கை நமக்கு தந்த கொடை,நாம எங்கே வசிக்கிறோமா அங்கே நமக்கு பாதிப்பை ஏற்படுத்தற விஷ ஜந்துக்கள் கிட்டயிருந்து அங்கேயே கொடியை வச்சுருக்கும்,இன்னோரு விஷயம் இதே மாதிரி இலை கொண்ட செடி ஒண்ணு இருக்கு,பொய் கன்னிச்செடி அதை மாத்தி வாயில் பிழிஞ்சுட்டா புத்தி பேதலிச்சு போயிடும்"என்றார்.

"உங்களுக்கு மூலிகை வைத்தியமும் தெரியும் போல இருக்கு"

"எல்லாம் எங்கம்மா கிட்டயிருந்து கத்துக்கிட்டது,அவங்க தேயிலை தோட்டத்துல அப்புறம் ஏலம் காட்டுல வேலை செஞ்சவங்க.பெரிய தோட்டமே வஞ்சிருந்தாங்க"என்றார்.

அந்தம்மாள் நிமிர்ந்து உட்கார்ந்திருந்தார்.

"ரொம்ப தாகமா இருக்கு"என்றார்.

நான் டேபிள் மேல் பார்த்தேன்.

தண்ணீர் ஜக் கவிழ்ந்திருந்தது.

மீண்டும் சமையல் அறைக்கு சென்றேன்.

அங்கிருந்து தண்ணீரை தம்ப்ளரில் எடுத்துக் கொண்டு வந்தேன்.

அந்தம்மாளிடம் தண்ணீர் குடிக்க கொடுக்க வாங்கி 'மடக் மடக்' கென்று குடித்தேன்.

நாங்கள் கேட்காமலே அந்த அம்மாள் சொன்னார்.

"நான் உள்ளறைக்கு பருப்பு எடுக்கத்தான் போனேன்,யாரோ என் பின்னாடி வந்தா மாதிரி இருந்துச்சு,திரும்பறத்துக்குள்ள பின்னங்கழுத்துல சுருக்குன்னு குத்திச்சு மயங்கி விழுந்தேன்"என்றார்.

வாசுகி அந்தம்மாளின் கழுத்தினைப் பிடித்து பின்னால் சாய்த்துப் பார்த்தார்.

அங்கே இரண்டு புள்ளிகள் இருந்தன.

முதல் கொலை கான்ஃபரன்ஸ் ரூமில் நடந்த போது பார்த்த அதே புள்ளி மாதிரிகள்.

பாம்பின் கொத்து குறி.

நான் மிரண்டு போய் எம்.டி.யைப் பார்த்தேன்.

"சசி இந்த வீட்டுக்குள்ள பாம்பு வர சாத்தியம் இருக்கா?"

'ஏன் இல்லாம ரெகுலா வரும்,ஆனா இது வரைக்கும் கொத்தினது இல்லே,ரெண்டாவது இந்தம்மா நின்னுட்டு இருந்தேன்னு சொல்லிச்சு"என்று யோசிக்க ஆரம்பித்தார்.

வாசுகியைப் பார்த்தேன்.

கொஞ்ச நேரம் முன்னால் தைரியமாய் இருந்த அவள் முகம் ஒரு மாதிரி திகிலானது.

சிவஞானம்,"எது நடக்கணுமோ,அது நடக்கும்,எது நடக்க கூடாதோ அது எந்த காரணம் கொண்டும் நடக்காது"என்று சொல்லி முடிக்கும் முன் அது நிகழ்ந்தது.

## அத்தியாயம் இருபத்து ஒன்று

"என்ன சார் கீதையெல்லாம் அவிழ்த்து விடறீங்க?'"என்றார் ராம்சந்தர்.

"தின வாழ்க்கையில் நாம் கடைப்பிடிக்க வேண்டிய தத்துவம் சார்"

வெளியில் திடீர் என்று வெயில் அடிக்க ஆரம்பித்தது.

"அப்பா மூணு நாளைக்குப் பிறகு இன்னைக்கு தான் வெயில் பார்க்கறோம்"என்றார் கண்ணன்.

"சொல்ல முடியாது,தலையை காட்டறா மாதிரி காட்டு சூரியன் போய் பம்மிடும்,மறுபடியும் நாம எதிர்பார்க்காத நேரத்துல மழை பின்னியெடுக்கும்"என்றார் சசிதரண்.

அவர் சொல்லி முடிக்கவில்லை உடனே வானம் இருண்டது.

சசிதரண் சிரித்தார்.

"பார்த்தீங்களா?"என்றார்.

என் பார்வையெல்லாம் ரம்யா மீதுதான் இருந்தது.

ரம்யா என்னை அடிக்கடி பார்த்துக் கொண்டு தான் இருந்தாள்.

அந்தம்மாள் பெருமூச்சு விட்டப் படி சோபாவில் சரிந்திருந்தாள்.

மேலே 'தடால் தடால்'என சப்தம் கேட்டது.

எல்லோருமே திகிலுடன் மேலே பார்த்தோம்.

மேலே பார்த்த நான் ஏதோ உறுத்த சசிதரணைப் பார்த்தேன்.

அவரின் முகம் மாறியிருந்தது.

இரண்டு மூன்று பேர் ஓடினால் எப்படி இருக்குமோ அப்படி ஒரு சப்தம் கேட்டது.

கண்ணனைப் பார்த்த எம்.டி.,"மேலே நம்ம ஆட்கள் யாராவது இருக்காங்களா?"என்று கேட்டார்.

அவர் கேட்ட நேரத்தில் ட்ரைவர்கள் இருவரும் 'தப தப' வென்று படியில் 'தட தட' வெனவந்துக் கொண்டிருந்தார்கள்.

கீழே வந்தவர்கள் 'மேலே மேலே'என்றனர் மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க.

"என்னாச்சு?,நான் கீழே வரும் போது ரெண்டும் பேரும் உங்க அறைகளை திறந்து வச்சுட்டு நல்லா குறைட்டை விட்டு தூங்கிட்டு இருந்தீங்களே?"என்றார்.

"ஆமாம்,நாங்க படுத்துட்டு தான் இருந்தோம்"என்றார்கள் கோரசாய்.

நாகேந்திரன்,"நா நல்லா தூங்கிட்டு தான் இருந்தேன்,ஆனா திடீர்னு யாரோ பக்கத்துல பெருசா மூச்சு விடறா மாதிரி சப்தம்,கண்ணைத் திறந்து பார்த்தேன்,பெரிய பாம்பு ஒண்ணு என் பக்கத்துல படுத்துட்டு இருக்கு,அப்படியே சரிஞ்சு கீழே விழுந்துட்டேன்.ஓடி வந்தேன்,பெரிசா தரையில என்னை யாரோ துரத்தறா மாதிரி சப்தம்"என-

ராமு,"எனக்கும் அதேதான் நடந்தது"என்றான்.

எனக்கு எம்.டி.யின் மீது முதன் முதலாய் சந்தேகம் வந்தது.

சசிதரண் வீட்டில் ஏதோ மர்மம் இருக்கிறது.

அதை சொல்லாமல் எங்களை இங்கே தங்க வைத்திருப்பதாக தோன்றியது.

நான் மீண்டும் சசிதரணைப் பார்த்தேன்.

அவர் மாடியையே பார்த்து கொண்டிருந்தார்.

என் பக்கம் திரும்பியவர் 'சடா'ரென்று "லதா நீங்க நினைக்கறா மாதிரி இந்த வீட்டுல எந்த மர்மமும் இல்லே"என்றார்.

எனக்கு தூக்கிவாரிப் போட்டது.

"எப்படி என் மனதிலிருப்பதை படம் பிடித்தாற் போல் சொல்கிறீர்கள்?"என்று எல்லோர் முன்னிலையிலும் நேரடியாகவே கேட்டேன்.

மற்றவர்களுக்கும் அப்படி இருந்தால் தெரியட்டுமே என்கிற எண்ணம் தான்.

"இல்லே லதா,எனக்கு என்னமோ தோணுச்சு,அதான் சொன்னேன்"என்றார்.

எனக்கு சசிதரண் அப்படி சொன்னதில் கொஞ்சமும் சமாதானம் ஆகவில்லை.

மனதில் ஒரு தீர்மானமான முடிவு ஏற்பட்டிருந்தது.

இரவு சசிதரண் வீட்டை ஒரு முழுமையான பார்வைப் பார்ப்பது என்று.

முடிந்தால் கைப்பேசியில் பார்ப்பது அனைத்தையும் பதிவு செய்து விட வேண்டும்.

சசிதரண் என்னைப் பார்த்து புன்னகைத்தார்.

எனக்கு அவரின் புன்னகையின் அர்த்தம் புரியவில்லை.
அப்பொழுதுதான் எனக்கும் உறைத்தது.
அவர் வீட்டில் இதுவரை என் கண்ணில் படவேயில்லை அது.
அவரிடேம் கேட்டு விடலாம் என்று தோன்றியது.
'பட்'டென்று கேட்டும் விட்டேன்.
"சார் உங்க வீட்டுல பூஜையறை எங்க இருக்கு?"
நான் கேட்டதும் ஒரு நிமிடம் அவர் கொஞ்சம் ஆடிப் போனார் என்று தான் சொல்ல வேண்டும்.
காரணம் இல்லாமல் இல்லை.
இவ்வளவு பெரிய வீடு.
அவரது குடும்பத்தார் நிச்சயம் சாமி பக்தி உள்ளவர்களாகத்தான் இருப்பார்கள்.
அவர் நெற்றியிலும் குங்குமப் பொட்டு!
சசிதரண்,"லண்டன் வீட்ல்ல பெரிய பூஜை அறை இருக்கு,இங்கே"என்று இழுத்தார்.
நான் சிரித்துக்கொண்டே கேட்டேன்.
"என்ன சார் சொல்றீங்க?"
"ஆமாம் இங்கே இன்னும் பூஜைக்குன்னு ஒரு இடம் ஒதுக்கலை,ஃபாமிலி இங்கே வந்த உடனே தான் செட் பண்ணனும்"என்றார்.
எனக்கு சில விஷயங்கள் உடனே புரிந்தன.
அதோடு அந்த டாபிக்கை பேசுவதை நிறுத்தி விட்டேன்.
அன்று இரவு-
சீக்கிரமே எல்லோரும் சாப்பிட்டு விட்டும்.
சிம்புளாக இட்லியும் சாம்பாரும்.
அந்தப் பெண்மணியும் ஏனோ கொஞ்சம் தளர்ந்திருந்தார்.
சிவஞானம் சார் சாப்பிட்டு முடித்தவுடன் அவர் பொறுப்பில் இருந்த வாக்கி டாக்கிகளை பவர் பார்த்துப் பரிசோதித்து விட்டு எல்லோர் கையிலும் ஒன்றொன்று கொடுத்தார்.

"டீப் பாரஸ்டுக்குள்ள போன உடனே நாம ஆன் பண்ணா போதும்,ஒரு எல்லை வரைக்கும் தான் நாம வண்டியில போக முடியும்,அதுக்குப்புறம் நடந்து தான் போகப் போறேம்,கேமிரா பேட்டரி எக்ஸ்ட்ரா பேட்டரி எல்லாம் கண்ணன் உங்க இன்சார்ஜ் எல்லாத்தையும் எடுத்து வச்சுட்டீங்க இல்லே"

"ஆமாம் சார்,எந்த கவலையும் வேண்டாம்"

சிவஞானம் தேவன் பக்கம் திரும்பினார்.

"தேவன் நீங்க தான் ஃப்ரண்ட்ல்ல லதாவோட் முதல்ல போறீங்க,நானும் எம்.டியும் அடுத்து,பின்னாடி எல்லோரும் ஃபாலோ பண்ணுவாங்க"என்றார்.

பின் எழுந்த சிவஞானம் அவரது 'ஷோல்டர் பேக்'கை எடுத்து வந்தார்.

அதில் இருந்து கொத்தாய் அவற்றை வெளியில் எடுத்தார்.

ரெட் கலர் ரிப்பன்ஸ்.

என் கையில் கொடுத்தார்.

"லதா முன்னாலே போற நீங்க கடந்து போற ஒவ்வொரு மரமா இதை கட்டிட்டுப் போறீங்க,ஒரு அடையாளத்துக்குதான் இது,பின்னாடி வர அத்தனை பேரும் அந்த குறிப்பிட்ட மரத்தோட உருவத்தை மனசுல ஏத்திகங்க,நாம ட்ராக் மாறி போகப் போறது இல்லே,ஆனாலும் நாம போற வழியை மறந்துடக் கூடாது,அப்புறம் எந்த காரணம் கொண்டும் எந்த சிறு இலையை கூட பரிச்சு தின்னுடக் கூடாது,லதா நீங்க இந்த காட்டைப் பற்றி சொன்ன உடனேயே விவரமா நெட்ல தேடிப் பார்த்து படிச்சேன்,நீங்க கொடுத்திருந்த இணையத் தள முகவரிலயும் போய் முழுக்க படிச்சேன்,இந்த காட்டுல குள்ளர்கள் பரம்பரை இருக்கறாத போட்டு இருந்தது,அவங்க ஜெனரேஷன்ஸ் இப்ப இல்லேன்னு சொல்ல முடியாது,அவங்க அன்னியர்கள் காட்டுக்குள்ளே வரதை விரும்பறது இல்லேன்னு போட்டு இருக்காங்க,ரெண்டு வருஷம் முன்னாடி ஜெர்மனியில இருந்து வந்த ஏழு ஜெர்மானிய ஆராய்ச்சியாளர்கள் உள்ளே போயிட்டு திரும்பவேயில்லைன்னும் அவங்கள அரசாங்கம் இன்னும் தேடிட்டு இருக்குன்னு

போட்டிருக்காங்களே,அதை நீங்க சொல்லவேயில்லையே?"

"நானும் படிச்சேன்"என்றாள் வாசுகி.

ராம்சந்தர் குறிக்கிட்டார்.

"நான் உங்க கிட்ட சில தகவல்களை சொல்லணும்,இந்த விஷயத்தை ஏற்கனவே உங்க எம்டிக்கிட்டே அவர் எங்களை சந்திச்சு இந்த சீரியல் பத்தி சொல்லும் போதே சொன்னேன்,இதுல நிறைய ஆபத்து இருக்குன்னு,எந்த காடா இருந்தாலும் அதுல நிச்சயமா அதோட ஒட்டி வாழற மக்கள் நிச்சயமா ஒரு சிறு கூட்டமா இருப்பாங்க,அவங்க தான் மறைமுகமா எந்தக் காட்டையும் அதோட சொந்த நிறத்துல,சொந்த வடிவத்துல அதோட ஜீவன் கலையாம பார்த்துக்கறது,அதே மாதிரி இந்த காட்டுலயும் நிச்சயமா இருப்பாங்கன்னு நம்பறேன்,நாம கொண்டு போற டார்ச் கூட அவங்களுக்கு பயத்தினை உண்டு பண்ணலாம்,அவங்க நம்பளை அவங்களோட உயிருக்கு ஆபத்தானவங்கன்னு நினைச்சுட்டா நமக்கு ஆபத்துதான்"என்று சொல்லி நிறுத்தினார்.

நான் சிரித்தேன்.

"சார் மனிதன் உள்பட எந்த உயிரனமா இருந்தாலும் தங்களோட இருப்புக்கு ஆபத்துன்னா அதை தற்காத்துக்க ஏதாவது பண்ணத்தான் செய்வாங்க,அதுக்கு எல்லாம் நாம பயப்பட கூடாது,கொஞ்சம் அதிகப்பட்ச அலர்டா இருக்கணும்"என்றேன்.

அப்பொழுது-

## அத்தியாயம் இருபத்தியிரண்டு

ரம்யாவிடம் இருந்து ஏதோ ஒரு வினோத சப்தம் வந்தது.

எல்லோரும் அவளைத் திரும்பிப் பார்த்தனர்.

அவள் சங்கடத்தில் நெளிந்தாள்.

எல்லோரும் பார்ப்பதை உணர்ந்தவளாய் முகம் மாற்றி,"என்ன எல்லோரும் என்னையே பார்க்கறீங்க?"என்று வெகுளியாய் கேட்டாள்.

நான் சும்மா இருக்கவில்லை.

"என்ன கேட்கறே ரம்யா,உன் கிட்டயிருந்து தான் சப்தம் ஏதோ வினோதமா வந்தது"என்றேன்.

"அப்படியா, எனக்கு ஒண்ணும் புரியவேயில்லை,என்னாச்சுன்னு தெரியலை"என்றாள்.

சிவஞானம்."நீ கொஞ்ச நேரம் முன்னாலே செஞ்ச சப்தம் காட்டுல இருக்கற ஏதோ ஒரு வினோத விலங்கு சப்தம் மாதிரி இருந்தது"என்றார்.

"என்ன சார் எல்லாம் சேர்ந்து என்னை மனுஷியே இல்லேன்னு சொல்லிடுவீங்க போலிருக்கு"என்றாள் ரம்யா.

அப்படி சொல்லும் போது அவள் முகம் கொஞ்சம் கோபமாகவே மாறி போயிருந்தது.

எம்.டி."அவங்க சும்மா ஓட்டறாங்க,விடுங்க,அதைப் போய் பெரிசா எடுத்துக்காதீங்க"என்றார்.

அவர் சொன்னதும் அவள் கொஞ்சம் சமாதானம் அடைந்தது போலிருந்தது.

நான் அவள் பேசுவதினை உற்றுப் பார்த்து கொண்டேயிருந்தேன்.

அப்பொழுதுதான் அதை கவனித்தேன்.

அதுவும் அவளுக்கு மிக அருகில் நின்றதால் எனக்கு தெரிந்தது.

அவளின் கழுத்தில் கொஞ்சம் கொத்தாக முடி அவளின் சுடிதார் தாண்டி தெரிந்தது.

நான் போட்ட கணக்கு சரிதான் போல் இருக்கிறது.

கிளம்பும் முன் சில உண்மைகளை தெரிந்து கொள்ள வேண்டும்.

ரம்யா யாரை இருக்கும் என்கிற என்னுடைய கணிப்பு கொஞ்சமும் தவறவில்லை என்பது எனக்கு உறுதியாகப் புரிந்தது.

யாருடைய முகத்திலும் ஒரு தெம்பு இல்லை என்பது எனக்குப் புரிந்தது.

சசிதரண் அந்தம்மாளைப் பார்த்து கேட்டார்.

"என்னம்மா எப்படி இருக்கு?"

"பரவாயில்லே ஐயா?'

"எல்லோருக்கும் டீ போட முடியுமா?"
"அவங்க கொஞ்சம் ஓய்வு எடுக்கட்டும்"என்றார் எம்.டி.
"இல்லேய்ய எனக்கு சரியாயிடுச்சு,நார்ம்ல ஆயிட்டேன்"
எம்.டி.வாசுகியைப் பார்த்தார்.
"நீங்க கொஞ்சம் அவங்ககூட கிச்சனுக்குப் போங்க"என்றார்.
"பரவாயில்லைங்க?"
"இல்லே அவங்களும் இருக்கட்டும் உங்ககூட"
வாசுகியும் அந்தம்மாளும் உள்ளே சென்ற வேளையில் எம்.டி.யின் கைப்பேசி உயிர் பெற்றது.
அவர் அதை எடுத்து 'ஹலோ'என்றார்.
நான் அறைக்குள் சென்று கட்டிலில் மீது போட்டிருந்த கைப்பேசியை எடுத்து வந்தேன்.
அதிலும் சிக்னல் முழுக்க இருந்தது.
சசிதரண் சொன்னார்.
"நாங்க கூரியர் செய்ய போன போது டவரில் மழையும் பார்க்காமல் வேலைப் பார்த்து கொண்டிருந்தார்கள்" என்று.
ஆளாளுக்கு கைப்பேசியை எடுத்துக் கொண்டு ஒரு புறம் சென்றார்கள்.
நானும் அறைக்குள் சென்று அம்மாவுக்கு போன் செய்தேன்.
மறுமுனையில் ஒரு முறை கூட அடிக்கவில்லை.
அம்மா எடுத்த உடனேயே ,"என்னடி போனதுலேந்து போனே கானோம்,என்னாச்சு உனக்கு நல்லா இருக்கியா?"
"நல்லா இருக்கேம்மா சிக்னல் தான் கிடைக்கவில்லை"என்றேன் மொட்டையாக.
பாலக்காட்டில் நாங்கள் தங்கியிருப்பதையும் அடுத்த நாள் காட்டிற்குள் செல்ல போவதையும் சொன்னேன்.
"பார்த்தும்மா உன் கூட அத்தனை பேர் இருக்காங்க எனக்கு பயம் இல்லே,இருந்தாலும் நான் உனக்கு சொல்ல வேண்டியதை சொல்றேன்"என்றாள்.
அம்மா அதீத தைரியசாலிதான்.

ஆனாலும் தாய்மை மேலோங்கும் போது சொல்வாள் தானே.

"அம்மா நான் ரொம்பவே ஜாக்கிரதையா இருப்பேன் நீ பயப்பட வேண்டாம்,நாளைக்கு காட்டுக்குள்ளே போக ஆரம்பிச்சதும் சிக்னல் எவ்வளவு தூரம் இருக்கும்ன்னு சொல்ல முடியாது,அதனால தான் இப்பவே போன் பண்ணேன்""

'சரிம்மா போன் கிடைக்கும் போதேல்லாம் போன் பண்ணு"

"சரிம்மா"

"இப்பத்தான் உங்க சேனல்ல பார்த்தேன்,நீ தங்கியிருக்கற இடத்துல ஒன்னும் ப்ராப்ளம் இல்லேங்கறே,அப்புறம் நீ ஒண்ணும் ப்ரச்னை இல்லேங்கறே"

"அதெல்லாம் பெரிய விஷயம் இல்லேம்மா,நீ பயப்பட வேண்டாம்"

"என்னமோம்மா,பார்த்துக்கோ"

"சரிம்மா நான் வச்சுடறேன்,சிக்னல் கிடைக்கும் போதெல்லாம் நான் போன் பண்றேன்,நீ பயந்துட்டே இருக்காதே என்னைப் பத்தி,எனக்கு ஒண்ணும் ஆகாது"என்று அழுத்தமாய் சொன்னேன்.

"சரிம்மா"என்று தொடர்பை துண்டித்து விட்டு வெளியில் வந்தேன்.

அவரவர் ஒரு மூலையில் கைப்பேசியுடன் ஆழ்ந்திருந்தார்கள்.

எம்.டி.,"திரும்ப சேனல்லேந்து போன் பயங்கர எதிர்ப்பார்ப்பு நம்ம புதிய சீரியல் ஃப்ரோமோவுக்கு,விளம்பர புக்கிங் எக்ஸ்டார்டணரியா இருக்காம்"என்றார்.

கார்த்தியாயிணி அம்மாளும் வாசுகியும் டீ கொண்டு வந்தார்கள்.

எல்லோரும் எடுத்து கொண்டோம்.

அமைதி.

அப்படியொரு அமைதி.

சசிதரண் திடீர் என்று பேச ஆரம்பித்தார்.

"எனக்கு காடு அத்துப்படி,ஆனாலும் நம்ம கூட அந்த காடு பற்றி அதிகம் தெரிந்த ஒருத்தர் நம்ம கூட வரப்போறார்,நாளைக்கு காலையில் இங்கே வருவார்,தமிழ் நல்லாவே அவருக்குத் தெரியும்"என்றார்.

"பேரு?"

"சங்குண்ணி"என்றார் சசிதரண்.

டீயை உறிந்து குடித்தேன்.

நான் வாசுகியைப் பார்த்து கொண்டே இருந்தேன்.

அவளிடம் ஏதோ ஒரு மாற்றம் தெரிந்தது.

எனக்கு 'சட்'டென்று என்னவென்று புரியவில்லை.

டீயை குடித்து மேலே 'கப்'பை வைத்தவள் மெல்ல எல்லோரையும் பார்த்தாள்.

மெல்ல நகர்ந்து மாடிப் படியேறி சென்றாள்.

அவள் அறை கீழேதான்.

எதற்கு மாடிக்குப் போகிறாள் என்று எனக்குப் புரியவில்லை.

இப்பொழுதே பின்னால் போனால் எல்லோர் கண்களையும் உறுத்தும்.

அதனால் பேசாமல் இருந்தேன்.

அவரவர் முதுகில் மாட்டிக் கொண்டு போகும் பையை நடு அறைக்கு கொண்டு வந்து ஒரு முறை உள்ளே அனைத்தும் சரி பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

நான் அறைக்கு சென்று விளக்கைப் போட்டேன்.

என்னுடைய பையைத் திறந்து எனது உடமைகளைப் பார்த்தேன்.

எல்லாம் சரியாக இருந்தது.

என்னையும் அறியாமல் நான் பைக்கு அடியில் பத்திரப் படுத்தியிருந்ததைப் பார்த்தேன்.

அது மிக பத்திரமாக இருந்தது.

இரவு எல்லோருமே சீக்கிரம் படுக்கப் போய் விட்டோம்.

படுத்த கொஞ்ச நேரத்தில் ரம்யா தூங்கி விட்டது எனக்குப் புரிந்தது.

மெல்ல பக்கத்தில் பார்த்தேன்.

அவள் போர்வையை நன்றாக இழுத்து மூடி படுத்திருந்தாள்.

அந்த இருளிலும் சீராக மார்பு போர்வையையும் மீறி விம்மித் தணிவது எனக்கு தெரிந்தது.

நான் மெல்ல ஓசைப் படுத்தாமல் படுக்கையை விட்டு எழுந்தேன்.

அறையின் கதவினைத் திறந்து கொண்டு வெளியில் வந்தேன்.

வெளியில் கும்மிருட்டு.

சோபாவில் கார்த்தாயாயிணி அம்மாள் படுத்திருந்தாள்.

நான் மெல்ல படியை நோக்கி நடந்தேன்.

படிகளில் ஓசைப் படுத்தாமல் ஏறினேன்.

நொடிக்கு ஒரு தடவை யாரும் பின் தொடர்கிறார்களா என்று பார்த்துக் கொண்டே நடந்தேன்.

மாடியில் ஏறியதும் இடது புறம் தான் வாசுகியின் அறை.

இரண்டாவது அறை.

மெல்ல அறையை அடைந்ததும் கதவினைத் தொட்டேன்.

திறந்து கொண்டது.

அவளை படுக்கையில் கானோம்.

ஒரு வேளை பாத்ரூமில் இருப்பாளோ?

அங்கும் எந்த சப்தமும் இல்லை.

மெல்ல தாழ்வாரம் கடந்து மேல் மாடிக்கு செல்லும் படியில் சப்தம் இல்லாமல் ஏறினேன்.

மெல்லிய பேச்சுக் குரல் கேட்டது.

அது வாசுகியில் குரல் தான்.

யாருடன் பேசிக் கொண்டிருக்கிறாள்.

எனக்கு மெல்ல உறைத்தது.

அவள் கைப்பேசியில் யாருடனோ பேசிக் கொண்டிருக்கிறாள்.

நான் மெல்ல மொட்டை மாடியை அடைந்துப் பார்த்தேன்.

அவள் மறு மூலையில் நின்று பேசிக் கொண்டிருந்தாள் வெளிப் புறம் பார்த்தவாறு.

நான் மெல்ல முன்னேறினேன்.

எனக்குப் புரிய ஆரம்பித்தது.

அவள் பேசுவது அந்த அமைதியான இரவில் துல்லியமாக கேட்டது.

அவள் இரண்டாம் நபருக்குத் தெரியாமல் பேசிக் கொண்டிருந்தாலும் எனக்கு அவள் பேசியது மிகச் சரியாய் ஒவ்வொரு எழுத்தும் புரிந்தது.

என்னுள் ஆத்திரம் பொங்கி எழ ஆரம்பித்தது.

அத்தியாயம் இருபத்து மூன்று

நான் துல்லியமாய் காது கொடுத்து கேட்க ஆரம்பித்தேன்.

"ஜி நீங்க கவலைப் படாதீங்க,எப்படியும் அந்த கோவில் கிட்ட போனது உங்களுக்கு தகவல் தந்துடுவேன்,அந்த பல கோடி மதிப்புள்ள கல்லை அந்த பாம்பு கக்கினதுமே நீங்க சொன்னா மாதிரி பண்ணிடறேன்,நான் கைக்கு வந்ததும் தகவல் சொல்றேன்,அப்ப நீங்க வந்தா போதும்,ஹெலிகாப்டர்ல்ல நாம பறக்கறது சுலபம் தானே,நீங்க கொடுத்த ஃப்ளேமர் பத்திரமா இருக்கு,நீங்க உங்க இடத்துல தயாரா இருங்க"என்றாள்.

எனக்கு அவளின் சுயரூபம் கொஞ்சமாய் பிடிபட ஆரம்பித்தது.

விலைப் போய் விட்டாள் என்பது மட்டும் புரிந்தது.

அவள் பேசி முடித்து திரும்பினாள்.

என்னைப் பார்த்தும் அவள் முகம் அந்த இருளிலும் மேலும் இருண்டது.

"யாரிடம் பேரம்?"என்று கேட்டேன்.

அவள் வேகமாய என்னை நோக்கிப் பாய்ந்தாள்.

அவள் என்னை மூர்க்கமாக தாக்க வருகிறாள் என்பது எனக்கு புரிந்தது.

அவள் என் மீது விழும் முன் 'சட்'டென்று விலகினேன்.

அவள் 'போதெரென்று'தரையில் விழுந்தாள்.

நான் 'பட்'டென்று அவள் மேல் அமர்ந்தேன்.

அவள் அதை கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை.

"சொல்லு வாசுகி நீ யாருக்காக வேலை செய்யறே?"அவள் கைகளை இறுகப் பற்றியிருந்தேன்.

அவள் கைகளை விடுவிக்க போராடினாள்.

நான் எதிர்பாராத வேளையில் அவளின் முகத்தினைத் தூக்கி என் முகத்தில் முட்டினாள்.

முழு பலத்துடன் முட்டியதால் எனது மூக்கு பலமாக தாக்கப் பட்டது.

நான் சரிந்து விழுந்தேன்.

நான் மூக்கைப் பிடித்துக் கொண்டு எழுந்த போது வாசுகியை காணவில்லை.

எனக்கு அதுவே பயங்கர அதிர்ச்சியாய் இருந்தது.

இரண்டு பேரும் தரையில் விழுந்த சப்தம் கீழ் வரை கேட்டிருக்க வேண்டும்.

யார் யாரோ ஓடி வரும் சப்தம்.

பார்த்தேன்.

சசிதரண்,எம்.டி.தேவன்,கண்ணன் எல்லோரும் வந்தார்கள்.

சசிதரண் கையில் பெரிய டார்ச்.

"என்னாச்சு?'என்றார் பதட்டத்துடன் எம்.டி.

விளக்கமாய் சொன்னேன்.

முதலில் அதிர்ந்து போனது எம்.டி.தான்.

"என்ன சொல்றீங்க லதா?"

"ஆமாம் சார்,நான் அவ பேசினதைப் பார்த்தேன்னு சொன்னதும் என் மேலே பாய்ஞ்சா,நான் நகர்ந்துட்டேன்,அவ கீழே விழுந்தா,நான் மேலே ஏறி உட்கார்ந்து அவ கிட்ட உண்மையை வரவழைக்கலாம்ன்னு நினைச்சப்ப எகிறி முகத்தாலே என்னோட மூக்குல மோதினா,நான் கலங்கி விழுந்தேன்,எழுந்து சுதாரிச்சுப்பார்த்தா அவளை காணோம்"

"ஐயோ"என்ற சசிதரண் தொடர்ந்து,"ஒரு வேளை மேலேயிருந்து கீழே குதிச்சிருப்பாங்களோ"என்றவர்

'வாங்க தேவன்,பங்களா பின்னாடி போய் பார்க்கலாம்"என்று அவர் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஓடினார்.

எம்.டி.என்னைப் பார்த்தார்.

"லதா நாம கூப்பிட்டப்ப வர மாட்டேன்,இப்படி ஒண்ணு இருக்கான்னு நக்கல் பண்ண வாசுகி இப்படி ஒரு ஆள் கூட ஏதோ பேரம் பேசினாங்கறது ஆச்சர்யமாய் இருக்கு"என்றார்.

"எனக்கும் அதுதான் சார் புரியலை,யார் எந்த நேரத்துல எப்படி மாறுவாங்கன்னு எப்படி நாம கணிக்க முடியும்,எதுவா இருந்தாலும் நாம் பின்னேற கூடாது"என்றேன்.

"நிச்சயமா?"என்றார் எம்.டி.

அவர் சொன்ன விதமே எனக்கு கொஞ்சம் தைரியம் வரவழைத்தது.

நாங்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே மற்றவர்களும் மாடிக்கு வந்து விட்டார்கள்.

மீண்டும் அவர்களிடம் நடந்ததை சொன்னேன்.

ராமச்சந்தர்,"நானும் கீழே போய் பார்க்கிறேன்"என்று ஓடினார்.

நாங்கள் கீழே வந்தோம்.

முன்னறையில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

அனைவரும் உட்கார்ந்தோம்.

நிமிடங்கள் கரைய கரைய காத்திருந்தோம்.

சசிதரணும் தேவனும் வந்தார்கள்.

"பின்னாலே யாருமே இல்லை,பெரிய மர்மமா இருக்கே,எங்க போயிருப்பாங்க வாசுகி"

ரம்யா மாடி அறைகள்ல எங்காவது போய் ஒளிஞ்சுட்டு இருக்க வாய்ப்பு இருக்கா?"

"அதையும் பார்த்துடுவோம்"

இரண்டு பேராக பிரிந்து பங்களா முழுவதும் அலசிப் பார்த்து விட்டோம்.

எங்கும் வாசுகி இல்லை.

"இப்ப என்ன பண்ணலாம்?"என்றார் சசிதரண்.

எம்.டி.,"சிம்பிள் காலையில போலீஸ் ஸ்டேஷன்ல்ல போய் ஒரு கம்ப்ளெயிண்ட் கொடுப்போம்,விடியற்காலையில் தான் நாம் கவனிச்சோம்ன்னு சொல்வோம்,கூடிய மட்டும் வாசுகி கிடைக்கறவரைக்கும் நாம செய்தியை வெளியிட வேண்டாம்ன்னு பர்சனலா கோரிக்கை வைக்கலாம்"

"பயப்பட வேண்டாம்,இன்ஸ்பெக்டரில் இருந்து உயர் அதிகாரிகள் வரைக்கும் எனக்கு தெரிஞ்சவங்கதான் பார்த்துக்கலாம் ஸ்பெஷல் ரிக்வஸ்ட் கொடுத்துடறேன்"

அவர் எளிதில் சொல்லி விட்டாலும் எனக்குள் சின்ன பயம்.

அது எப்படி அவள் மாயமாய் மறைந்திருப்பாள்.

"சசிதரண் சார் பின்னாடி கிணத்துல பார்த்தீங்களா?"

நான் கேட்டதும் எல்லோரும் என்னை அதிர்ந்து போய் என்னைப் பார்த்தார்கள்.

"அதையும் பார்த்துடறது நல்லதுதானே போலீசுக்கு போறதுக்கு முன்னாடி"

"அதுவும் சரிதான்"என்ற சசிதரண் நகர உடன் தேவனும் கண்ணனும் சென்றார்கள்.

ரம்யா கை விரல் நகங்களை கடித்துக் கொண்டிருந்தாள்.

ராம்சந்தர் உறைந்த முகத்துடன் இருந்தார்.

கொஞ்ச நேரத்தில் சசிதரணும்,கண்ணன்,தேவன் மூவரும் திரும்பி வந்தார்கள்.

"கிணற்றில் எந்த சலனமும் இல்லை"என்றார்கள்.

நான் எம்.டி.யைப் பார்த்தேன்.

கார்த்தியாயிணி அம்மாள்,"சப்பாத்தி ரெடியா இருக்கு,சாப்பிட வாருங்கள்"என்றழைத்தார்.

யாருக்கும் சாப்பிட மூடு இல்லை.

ஆனாலும் சாப்பிட உட்கார்ந்தோம்.

மௌனமாய் சாப்பிட்டு முடித்தோம்.

சசிதரண் சாப்பிட்டு அறையில் குறுக்கும் நெடுக்கும் நடக்க ஆரம்பித்தார்.

பின் தன்னுடைய கைப்பேசியில் யாரையோ அழைத்தார்.

அவர் பேசிய தொணியில் இருந்து அவர் முக்கியஸ்தர் என்று மட்டும் புரிந்தது.

'யெஸ் சார்,யெஸ் சார்,காலையில் வந்துடறேன்,ஆமாம் சார் அவரையும் அழைச்சுட்டு வந்துடறேன்"என்றார்.

பின் கைப்பேசி இணைப்பைத் துண்டித்தவர் எம்.டி.பக்கம் பேசினார்.

"ஐ.ஜி கிட்டே பேசிட்டேன,அவர் காலையில் நேர ஸ்டேஷனுக்கு போய் பார்க்க சொல்லிட்டார்,தேவைப்பட்டா தன்னை போனில் அழைக்க சொன்னார்"என்றார்.

"அப்ப நாம நாளைக்கு மாலையிலதான் இங்கேயிருந்து கிளம்ப முடியும் போல இருக்கே,இந்த வாசுகி ப்ராப்ளம் முடியணும் இல்லே"என்றேன் நான்.

"பார்ப்போம் மதியத்துக்குள்ளே எல்லாம் முடிஞ்சுடும்,உடனே கிளம்பிடுவோம்"என்றார் சசிதரண்.

"ஆமாம்,நாம் தள்ளிப் போட வேண்டாம்"என்றார் ராமச்சந்தர்.

நாங்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே வாசலில் சப்தம் கேட்டது.

எல்லோருமே பார்த்தோம் அனிச்சையாய்.

தேவன் போய் கதவினைத் திறந்தார்.

அங்கே நின்றிருந்தார் அவர்.

அவரைப் பார்த்ததும் சசிதரண் முகம் கொஞ்சம் மலர்ந்தது.

"நான் சொன்னேன் இல்லே,அவர்தான் காட்டுக்குள்ளே நம்ம கூட வரப் போற சங்குண்ணி"என்றார்.

அவரின் தோற்றம் எங்களை வியப்பில் ஆழ்த்தியது.

அகத்தியரைப் போல இருந்தார்.

நீண்ட ஜடாமுடியை தூக்கி கட்டியிருந்தார்.

கண்களில் ஒரு அசாத்திய ஒளி.

மூன்றடிக்கும் குறைவான உயரத்தில் இருந்தார்.

"வரு"என்றார்.

அவர் உள்ளே வந்து எங்களையெல்லாம் பார்த்து மெல்லியப் புன்னகையை முகத்தில் படர விட்டார்.

"இவருக்கு காடு அத்துப்படி,எல்லாத்துக்கும் மேலே காட்டுல இருக்கற அத்தனை மரங்கள்,செடிகள்,கொடிகள் எல்லாம் அத்துப்படி,மிருக வசியமும் தெரியும்,இவரோட வயசு என்ன இருக்கும்ன்னு நினைக்கறீங்க?"

"தெரியலையே"என்றோம்.

சசிதரன் சிரித்தபடியே சொன்னார்.

"தொன்னுத்து நாலு"என்றார்.

முறுக்கேறிய தேகத்துடன் இருந்த அவரைப் பார்த்து அதிர்ந்து தான் போனோம்.

அவரை"உட்காருங்க சாமி"என்றார் எம்.டி.

"அப்படியெல்லாம் கூப்பிட வேண்டாம்,என் கிட்ட இருக்கற சக்தியை உங்களுக்கு உள்ளேயும் வரவழைக்க முடியும்,அதுக்கு கொஞ்சம் மெனக்கடனும்"என்றார்.

"உட்காருங்க"என்றார் சசிதரண்.

உட்கார்ந்தவர் மோப்பம் பிடிப்பது போல் அறையை பார்த்தார்.

மூக்கு விரிந்து அடங்கியது.

"என்ன எல்லோருக்கும் கவலை வாசுகியைப் பத்தியா?"என்று சாதரணமாய் கேட்டார்.

நாங்கள் அதிர்ந்து போய் பார்த்தோம்.

"ஆமாம்'என்றேன்.

என்னைப் பார்த்து சிரித்த அவர்,"அவ சாகலை,இப்ப இங்கேயிருந்து தப்பிச்சு போயிருக்கா,வருவா திரும்பி,வர வேண்டிய நேரத்துல"என்றார் சிரித்துக் கொண்டே.

மற்றவர்களுக்கு அதிர்ச்சியோ,இல்லையோ எனக்கு பயங்கர அதிர்ச்சி.

அவரையே பார்த்தேன்.

## அத்தியாயம் இருபத்தி நாலு

நா ன் திகைப்புடன் பார்ப்பதை கவனித்த அவர்,"என்னம்மா அதிர்ச்சியா இருக்கா,அவ வருவா திரும்பி வருவா,நிச்சயம்,அப்ப நடக்க வேண்டியது நடந்தே தீரும்,அதைப் பத்தி யாரும் கவலைப் பட வேண்டாம்,நாளைக்கு நாம எல்லாம் கிளம்பற வழியைப் பார்ப்போம்"என்றார்.

அவரது இடையில் பச்சைத்துணி ஒன்றை பட்டையாய் கட்டியிருந்தார்.அதன் முன்பக்கம் ஒரு முடிச்சு இருந்தது.

நான் அவர் முகத்தையே உற்றுப் பார்த்து கொண்டிருந்தேன்.

அவர் முகத்தில் ஒரு வித அதீத சாந்தம் இருந்தது.

அவர் தனது இடுப்பில் இருந்த பச்சைப்பட்டைத் துணியின் முடிச்சை அவழ்த்து கையில் அவற்றை எடுத்தார்.

பச்சை நிறத்தில் கயிறுகள் மணிக்கட்டில் கட்டிக் கொள்ளும் சைசில்.

அதை எல்லோரிடமும் கொடுத்தார்.

"எல்லோரும் இதை கையில கட்டிகங்க,இது சாதாரண முடி கயிறு இல்லே,உங்களுக்கும் எனக்கும் உள்ள தொடர்பு,இந்த நொடியிலிருந்து உங்களை என்னோட வட்டத்துக்குள்ள கொண்டு வந்திருக்கேன்,நீங்க என்னை விட்டு காட்டுல பிரிஞ்சு வழி தடுமாறி தள்ளிப் போனாலும் என்னால நீங்க இருக்கற இடத்தை நொடித்துகள்ல உணர முடியும்"என்றார்.

அனைவருமே ஒன்றும் சொல்லாமல் வாங்கிய வேகத்தில் கட்டிக் கொண்டார்கள்.

அதிலும் சிவஞானம் சாருக்கு எதிலும் 'சட்'டென்று பிடிப்பும் நம்பிக்கையும் வராது.

அவரே வாங்கி உடனே கட்டிக் கொண்டார்.

"எந்த காரணம் கொண்டும் இதை கழட்டிடாதீங்க,இது சக்தி வாய்ந்தது,என்னோட சக்திகளை அது உள்ளடக்கினது,நீங்களே காட்டுல அதை உணர்வீங்க"என்றார்.

நாங்கள் எல்லோரும் பேசிக் கொண்டிருப்பதை பார்த்தபடியே நின்றிருந்த கார்த்தியாயினியை

அப்பொழுதுதான் பார்த்தேன்.
அவள் சிவந்த கண்களுடன் அவரையே பார்த்து கொண்டிருந்தாள்.
சடாரென்று அவளைப் பார்த்தவர்,"எந்தானு கார்த்தியாயிணி"என்றாள்.
தள்ளி நின்றிருந்தவள் அங்கிருந்து வேகமாய் அவரை நோக்கி ஓடி வந்தாள்.
ஒரு பசு மாடு வெறி பிடித்து அவர் மீது பாய ஓடி வந்தது போல் இருந்தது.
நான் பயந்து போனேன்.
அவள் பாய்ந்த வேகம் என்னைத் திடுக்கிட வைத்தது.
அவருக்கு இரண்டடி முன்னால் யாரோ பிடித்து நிறுத்தியது போல் நின்றாள்.
தலைமுடியை விரித்துக் கொண்டு புரியாத பாஷையில் கத்தினாள்.
நாங்கள் அனைவரும் திகைத்துப் போனோம்.
கத்தி முடித்தவளாய் கீழே விழுந்தாள்.
சங்குண்ணி சிரித்த படியே அவள் நெற்றிப் பொட்டில் தன் கட்டை விரலை வைத்து அழுத்தினார்.
அவள் கண்களைத் தெளிந்தாள்.
சங்குண்ணி சசிதரணைப் பார்த்தார்.
அவர்,"சொல்லுங்க சாமி"என்றார்.
"இந்தம்மா சம்பளத்தை கொடுத்து அனுப்பிடு,இனிமே இந்தம்மா இங்கே இருக்க கூடாது"
அந்தம்மாள் கண்களில் நீர் பொங்கியது.
"சாமி தப்பு பண்ணிட்டேன்,என்னை மன்னிச்சுடுங்க"என்று கதறி அழுதாள்.
"வேண்டாம் உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்தவள் நீ,உன்னை மன்னிக்க இங்கே யாருக்கும் மனம் வராது"என்றவர்,"சசிதரணைப் பார்த்து மீண்டும்,"இந்தம்மாளை உடனே சம்பளம் கொடுத்து அனுப்பு"என்றார்.
சசிதரண் உள்ளே ஓடிப் போய் பணத்தை எடுத்து வந்தார்.
அந்தம்மாளிடம் கொடுத்தார்.

எழுந்தவள் வேகமாய் வெளியேறினார்.

யாருமே ஒன்றும் புரியாமல் அவரைப் பார்த்தனர்.

"அவங்க இருக்கும் போது ஒண்ணும் சொல்ல வேண்டாம்ன்னு சொல்லலை,யாரு ஏய்த அம்புன்னு தெரியலை,அவ இன்னும் ரெண்டு மணி நேரம் தான் உயிரோட இருப்பா,அது அவளுக்கே தெரியாது,இன்னைக்கு ராத்திரி உங்க எல்லோருக்கும் கடுமையான விஷம் கலந்த சாம்பார் செஞ்சு வச்சிருக்கா,முதல்ல அதை போய் கொட்டுங்க"என்றார்.

எல்லோர் முகத்திலும் பயம் தொற்றிக் கொண்டது.

"சாமி என்ன சொல்றீங்க,அவளை போலீஸ்ல பிடிச்சு கொடுத்திருக்கலாமே?"என்றார் எம்.டி.

சங்குண்ணி சிரித்தார்.

"நான் தான சொன்னேனே அவள் விதியே இன்னும் இரண்டு மணி நேரத்தில் முடியப் போகிறது,உங்களை சர்ப்பக்காவுக்கும் செல்ல விடாமல் தடுக்க ஒரு சக்தி தனியாய் இயங்கி வருகிறது,அதில் உள்ளவர்கள் யாராய் இருந்தாலும் அவர்களுக்கு மரணம் உறுதி"என்றார்.

நான் ரம்யாவை அழைத்துக் கொண்டு போய் முதலில் சாம்பாரை பாத்ரூமில் கொட்டினேன்.

பின் மீண்டும் முன்னறைக்கு வந்தேன்.

சங்குண்ணி அமைதியாய் உட்கார்ந்திருந்தார்.

அவர் என்னைப் பார்த்து,"மகளே எனக்கு கொஞ்சம் சுக்கு கஷாயம் மட்டும் போட்டுக்கொடு,நீங்கள் சாப்பிடுங்கள்,எனக்கு மாடியில் கொஞ்சம் வேலை இருக்கிறது,துர் சக்தியின் நடமாடலை நிறுத்த வேண்டும்"என்றார்.

நான் சமையல் அறைக்கு ஓடி சுக்கு டப்பாவைத் தேடி கஷாயம் போட்டு எடுத்து வந்தேன்.

வாங்கியவர் அந்த சூட்டுடன் ஒரு மடக்கில் குடித்து விட்டு சிரித்தபடியே காலி தம்ப்ளரை என்னிடம் தந்து விட்டு படிகளை நோக்கி நடந்தார்.

சசிதரண்,"நான் வரட்டுமா சாமி"என்றார்.

திரும்பிப் பார்த்து சிரித்தவர்,"வேண்டாம் நான் பார்த்துக் கொள்கிறேன்'என்றார்.

பின் எனக்கு ஒரு பாட்டிலில் வெறும் தண்ணீரை அடைத்து தாருங்கள்"என்றார்.

நான் ஒரு பாட்டிலை தேடி எடுத்து அதில் தண்ணீரை ஊற்றி கொண்டு வந்தேன்.

மூடியை ஒரு முறை இருக்கமாக மூடியவர் வேகமாய் படியேறி சென்றார்.

சசிதரண் அவர் பின்னாலேயே செல்ல படியில் கால் வைத்தார்.

'சட்'டென்று நடுப்படியில் நின்ற படியே திரும்பிப் பார்த்தா,"வேண்டா"என்றார்.

சசிதரண் வேகமாய் கீழே இறங்கி விட்டார்.

மேலே போனதும் கொஞ்ச நேரம் எந்த சப்தமும் கானோம்.

'தட தட'வென்று மேலே ஓடும் சப்தம்.

பின்னால் இன்னொரு காலடி சப்தம் துல்லியமாய் எனக்கு கேட்டது.

மற்றவர்களும் ஒரு வித திகிலுடன் மேலே பார்த்து கொண்டிருந்தனர்.

'பொதேர்'என்று எதுவோ விழும் சப்தம்.

கொஞ்ச நேரம் மரண அமைதி.

அவர் படியிறங்கி வந்தார்.

எல்லோரும் அவரையே ஆவலுடன் பார்த்தோம்.

தன் கையில் இருந்த பாட்டிலை தூக்கி எல்லோர் கண்ணிலும் படும் படி காண்பித்தார்.

நான் உள்பட அனைவரும் அதிர்ந்து போனோம்.

உள்ளே கருப்பாக கொத்தாக ஏதோ வெளி வர துடித்துக் கொண்டிருந்தது.

அவர் சிரித்துக் கொண்டே சொன்னார்.

"கொஞ்சம் பயந்திருந்தா மாடியில தங்கின யாரையாவது அடிச்சிருக்கும்,நான் அதை ஆவாகணம் பண்ணி இதுல அடக்கிட்டேன்,சசி இன்னொரு தகர டப்பாவில போட்டு நான் கொடுக்கற வேரோட சேர்த்து

உன்னோட தோட்ட கிணறுக்கு பினனாடி புதைச்சுடு"என்றார்.

சொன்னவர் தன்னுடன் கொண்டு வந்திருந்த சிறு பையில் இருந்து வேர் துண்டை எடுத்து கையில் வைத்து கொண்டு,"முதல்ல ஒரு காலி டின் கொண்டா"என்றார்.

உள்ளே ஓடிய சசிதரண் ஒரு தகர டப்பாவுடன் வந்தார்.

சங்குண்ணி அதை திறந்து பாட்டிலை பத்திரமாக அதனுள் வைத்து கையில் இருந்த வேரை போட்டார்.

மூடியதும் டப்பா ஆட ஆரம்பித்தது.

"இதை உடனே நல்ல ஆழமா புதைச்சுட்டு வா,கூட யாரையாவது கூட்டிட்டு போ"என்றவர் தேவனைப் பார்த்தார்.

"தம்பி நீ சுவாதி நட்சத்திரமா?"என்று கேட்டார்.

"நீ அவர்கூட போ"என்றார்.

அவர்கள் இருவரும் போனதும் எங்களுக்கு ஆச்சர்யம்.

எங்களுக்கு தேவனின் நட்சத்திரம் தெரியாது.

அவர் எங்கள் மனதை படம் பிடித்தவர் போல்,"இதெல்லாம் சாதாரணம்,உங்க அத்தனை பேரோட விஷயங்களும் தெரியும்"என்றார்.

எம்.டி."நீங்க எங்க கூட வரப் போறதையே ரொம்ப பாதுகாப்பா நினைக்கிறோம்"என்றார்.

அவர்,"எல்லாம் அவள் செயல்,பகவதி உங்ககூட போக சொல்றா,இன்னொரு விஷயம் எந்த தருணத்திலயும் என்னோட உருவத்தை கேமிராவில படம் பிடிச்சுடாதீங்க,பிடிக்கவும் கூடாது"என்று கறாரான குரலில் சொன்னார்.

அப்பொழுது-

## **அத்தியாயம் இருபத்தி** ஐந்து

நா ன் திகைப்புடன் பார்ப்பதை கவனித்த அவர்,"என்னம்மா அதிர்ச்சியா இருக்கா,அவ வருவா திரும்பி வருவா,நிச்சயம்,அப்ப நடக்க வேண்டியது நடந்தே தீரும்,அதைப் பத்தி யாரும் கவலைப் பட

வேண்டாம்,நாளைக்கு நாம எல்லாம் கிளம்பற வழியைப் பார்ப்போம்"என்றார்.

அவரது இடையில் பச்சைத்துணி ஒன்றை பட்டையாய் கட்டியிருந்தார்.அதன் முன்பக்கம் ஒரு முடிச்சு இருந்தது.

நான் அவர் முகத்தையே உற்றுப் பார்த்து கொண்டிருந்தேன்.

அவர் முகத்தில் ஒரு வித அதீத சாந்தம் இருந்தது.

அவர் தனது இடுப்பில் இருந்த பச்சைப்பட்டைத் துணியின் முடிச்சை அவழ்த்து கையில் அவற்றை எடுத்தார்.

பச்சை நிறத்தில் கயிறுகள் மணிக்கட்டில் கட்டிக் கொள்ளும் சைசில்.

அதை எல்லோரிடமும் கொடுத்தார்.

"எல்லோரும் இதை கையில கட்டிகங்க,இது சாதாரண முடி கயிறு இல்லே,உங்களுக்கும் எனக்கும் உள்ள தொடர்பு,இந்த நொடியிலிருந்து உங்களை என்னோட வட்டத்துக்குள்ள கொண்டு வந்திருக்கேன்,நீங்க என்னை விட்டு காட்டுல பிரிஞ்சு வழி தடுமாறி தள்ளிப் போனாலும் என்னால நீங்க இருக்கற இடத்தை நொடித்துகள்ல உணர முடியும்"என்றார்.

அனைவருமே ஒன்றும் சொல்லாமல் வாங்கிய வேகத்தில் கட்டிக் கொண்டார்கள்.

அதிலும் சிவஞானம் சாருக்கு எதிலும் 'சட்'டென்று பிடிப்பும் நம்பிக்கையும் வராது.

அவரே வாங்கி உடனே கட்டிக் கொண்டார்.

"எந்த காரணம் கொண்டும் இதை கழட்டிடாதீங்க,இது சக்தி வாய்ந்தது,என்னோட சக்திகளை அது உள்ளடக்கினது,நீங்களே காட்டுல அதை உணர்வீங்க"என்றார்.

நாங்கள் எல்லோரும் பேசிக் கொண்டிருப்பதை பார்த்தபடியே நின்றிருந்த கார்த்தியாயிணியை அப்பொழுதுதான் பார்த்தேன்.

அவள் சிவந்த கண்களுடன் அவரையே பார்த்து கொண்டிருந்தாள்.

சடாரென்று அவளைப் பார்த்தவர்,"எந்தானு கார்த்தியாயிணி"என்றாள்.
தள்ளி நின்றிருந்தவள் அங்கிருந்து வேகமாய் அவரை நோக்கி ஓடி வந்தாள்.
ஒரு பசு மாடு வெறி பிடித்து அவர் மீது பாய ஓடி வந்தது போல் இருந்தது.
நான் பயந்து போனேன்.
அவள் பாய்ந்த வேகம் என்னைத் திடுக்கிட வைத்தது.
அவருக்கு இரண்டடி முன்னால் யாரோ பிடித்து நிறுத்தியது போல் நின்றாள்.
தலைமுடியை விரித்துக் கொண்டு புரியாத பாஷையில் கத்தினாள்.
நாங்கள் அனைவரும் திகைத்துப் போனோம்.
கத்தி முடித்தவளாய் கீழே விழுந்தாள்.
சங்குண்ணி சிரித்த படியே அவள் நெற்றிப் பொட்டில் தன் கட்டை விரலை வைத்து அழுத்தினார்.
அவள் கண்களைத் தெளிந்தாள்.
சங்குண்ணி சசிதரணைப் பார்த்தார்.
அவர்,"சொல்லுங்க சாமி"என்றார்.
"இந்தம்மா சம்பளத்தை கொடுத்து அனுப்பிடு,இனிமே இந்தம்மா இங்கே இருக்க கூடாது"
அந்தம்மாள் கண்களில் நீர் பொங்கியது.
"சாமி தப்பு பண்ணிட்டேன்,என்னை மன்னிச்சுடுங்க"என்று கதறி அழுதாள்.
"வேண்டாம் உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்தவள் நீ,உன்னை மன்னிக்க இங்கே யாருக்கும் மனம் வராது"என்றவர்,"சசிதரணைப் பார்த்து மீண்டும்,"இந்தம்மாளை உடனே சம்பளம் கொடுத்து அனுப்பு"என்றார்.
சசிதரண் உள்ளே ஓடிப் போய் பணத்தை எடுத்து வந்தார்.
அந்தம்மாளிடம் கொடுத்தார்.
எழுந்தவள் வேகமாய் வெளியேறினார்.
யாருமே ஒன்றும் புரியாமல் அவரைப் பார்த்தனர்.

"அவங்க இருக்கும் போது ஒண்ணும் சொல்ல வேண்டாம்ன்னு சொல்லலை,யாரு ஏய்த அம்புன்னு தெரியலை,அவ இன்னும் ரெண்டு மணி நேரம் தான் உயிரோட இருப்பா,அது அவளுக்கே தெரியாது,இன்னைக்கு ராத்திரி உங்க எல்லோருக்கும் கடுமையான விஷம் கலந்த சாம்பார் செஞ்சு வச்சிருக்கா,முதல்ல அதை போய் கொட்டுங்க"என்றார்.

எல்லோர் முகத்திலும் பயம் தொற்றிக் கொண்டது.

"சாமி என்ன சொல்றீங்க,அவளை போலீஸ்ல பிடிச்சு கொடுத்திருக்கலாமே?"என்றார் எம்.டி.

சங்குண்ணி சிரித்தார்.

"நான் தான சொன்னேனே அவள் விதியே இன்னும் இரண்டு மணி நேரத்தில் முடியப் போகிறது,உங்களை சர்ப்பக்காவுக்கும் செல்ல விடாமல் தடுக்க ஒரு சக்தி தனியாய் இயங்கி வருகிறது,அதில் உள்ளவர்கள் யாராய் இருந்தாலும் அவர்களுக்கு மரணம் உறுதி"என்றார்.

நான் ரம்யாவை அழைத்துக் கொண்டு போய் முதலில் சாம்பாரை பாத்ரூமில் கொட்டினேன்.

பின் மீண்டும் முன்னறைக்கு வந்தேன்.

சங்குண்ணி அமைதியாய் உட்கார்ந்திருந்தார்.

அவர் என்னைப் பார்த்து,"மகளே எனக்கு கொஞ்சம் சுக்கு கஷாயம் மட்டும் போட்டுக்கொடு,நீங்கள் சாப்பிடுங்கள்,எனக்கு மாடியில் கொஞ்சம் வேலை இருக்கிறது,துர் சக்தியின் நடமாடலை நிறுத்த வேண்டும்"என்றார்.

நான் சமையல் அறைக்கு ஓடி சுக்கு டப்பாவைத் தேடி கஷாயம் போட்டு எடுத்து வந்தேன்.

வாங்கியவர் அந்த சூட்டுடன் ஒரு மடக்கில் குடித்து விட்டு சிரித்தபடியே காலி தம்ப்ளரை என்னிடம் தந்து விட்டு படிகளை நோக்கி நடந்தார்.

சசிதரண்,"நான் வரட்டுமா சாமி"என்றார்.

திரும்பிப் பார்த்து சிரித்தவர்,"வேண்டாம் நான் பார்த்துக் கொள்கிறேன்'என்றார்.

பின் எனக்கு ஒரு பாட்டிலில் வெறும் தண்ணீரை அடைத்து தாருங்கள்"என்றார்.

நான் ஒரு பாட்டிலை தேடி எடுத்து அதில் தண்ணீரை ஊற்றி கொண்டு வந்தேன்.

மூடியை ஒரு முறை இருக்கமாக மூடியவர் வேகமாய் படியேறி சென்றார்.

சசிதரண் அவர் பின்னாலேயே செல்ல படியில் கால் வைத்தார்.

'சட்'டென்று நடுப்படியில் நின்ற படியே திரும்பிப் பார்த்தா,"வேண்டா"என்றார்.

சசிதரண் வேகமாய் கீழே இறங்கி விட்டார்.

மேலே போனதும் கொஞ்ச நேரம் எந்த சப்தமும் காணோம்.

'தட தட'வென்று மேலே ஓடும் சப்தம்.

பின்னால் இன்னொரு காலடி சப்தம் துல்லியமாய் எனக்கு கேட்டது.

மற்றவர்களும் ஒரு வித திகிலுடன் மேலே பார்த்து கொண்டிருந்தனர்.

'பொதேர்'என்று எதுவோ விழும் சப்தம்.

கொஞ்ச நேரம் மரண அமைதி.

அவர் படியிறங்கி வந்தார்.

எல்லோரும் அவரையே ஆவலுடன் பார்த்தோம்.

தன் கையில் இருந்த பாட்டிலை தூக்கி எல்லோர் கண்ணிலும் படும் படி காண்பித்தார்.

நான் உள்பட அனைவரும் அதிர்ந்து போனோம்.

உள்ளே கருப்பாக கொத்தாக ஏதோ வெளி வர துடித்துக் கொண்டிருந்தது.

அவர் சிரித்துக் கொண்டே சொன்னார்.

"கொஞ்சம் பயந்திருந்தா மாடியில தங்கின யாரையாவது அடிச்சிருக்கும்,நான் அதை ஆவாகணம் பண்ணி இதுல அடக்கிட்டேன்,சசி இன்னொரு தகர டப்பாவில போட்டு நான் கொடுக்கற வேரோட சேர்த்து உன்னோட தோட்ட கிணறுக்கு பினனாடி புதைச்சுடு"என்றார்.

சொன்னவர் தன்னுடன் கொண்டு வந்திருந்த சிறு பையில் இருந்து வேர் துண்டை எடுத்து கையில் வைத்து கொண்டு,"முதல்ல ஒரு காலி டின் கொண்டா"என்றார்.

உள்ளே ஓடிய சசிதரண் ஒரு தகர டப்பாவுடன் வந்தார்.

சங்குண்ணி அதை திறந்து பாட்டிலை பத்திரமாக அதனுள் வைத்து கையில் இருந்த வேரை போட்டார்.

மூடியதும் டப்பா ஆட ஆரம்பித்தது.

"இதை உடனே நல்ல ஆழமா புதைச்சுட்டு வா,கூட யாரையாவது கூட்டிட்டு போ"என்றவர் தேவனைப் பார்த்தார்.

"தம்பி நீ சுவாதி நட்சத்திரமா?"என்று கேட்டார்.

"நீ அவர்கூட போ"என்றார்.

அவர்கள் இருவரும் போனதும் எங்களுக்கு ஆச்சர்யம்.

எங்களுக்கு தேவனின் நட்சத்திரம் தெரியாது.

அவர் எங்கள் மனதை படம் பிடித்தவர் போல்,"இதெல்லாம் சாதாரணம்,உங்க அத்தனை பேரோட விஷயங்களும் தெரியும்"என்றார்.

எம்.டி."நீங்க எங்க கூட வரப் போறதையே ரொம்ப பாதுகாப்பா நினைக்கிறோம்"என்றார்.

அவர்,"எல்லாம் அவள் செயல்,பகவதி உங்ககூட போக சொல்றா,இன்னொரு விஷயம் எந்த தருணத்திலயும் என்னோட உருவத்தை கேமிராவில படம் பிடிச்சுடாதீங்க,பிடிக்கவும் கூடாது"என்று கறாரான குரலில் சொன்னார்.

அப்பொழுது-

## அத்தியாயம் இருபத்தி ஆறு

தேவன் வேகமாய் ஓடி வந்தான்.

"என்ன ஆயிற்று தடையா?"

"ஆமாம் சுவாமி,அங்கே கொட்டற மழையில குழி தோண்டிட்டு இருக்கும் போது ஒரு பெரிய பாம்பு படமெடுத்து எங்க முன்னாடி நிக்குது,அவரு அப்படியே உறைஞ்சு போய் ஆடமா அசையாம

உட்கார்ந்துட்டாரு,நான் தான் பட்டுன்னு ஓடி வந்துட்டேன்"

அவர் சிரித்தார்.

தேவன் அவரை சுவாமி என்று கூப்பிட்டதே மிக இயல்பாய் இருந்தது.

அவர் வேகமாய் வெளியில் சென்றார்.

மழை இருந்தாலும் அவரின் பின்னால் நாங்களும் ஆவலாய் ஓடினோம்.

எங்கள் கண்ணுக்கு முன்னால் அது நிகழ்ந்தது.

கிணற்றின் பின் பக்கம் சசிதரன் கொட்டும் மழையில் கையில் சின்ன குத்து கடப்பாரை மற்றும் தகர டப்பாவுடன் ஆடாமல் அசையாமல் நின்று இருக்க எதிரே கொஞ்சம் தள்ளி படமெடுத்து நின்று கொண்டிருந்தது அந்த பெரிய நல்ல பாம்பு.

அவர்,"சசி இது உங்கள் வீட்டில் பல வருடங்களாக இருக்கும் பாம்புதான்,உன்னையோ இங்கு இருப்பவரையோ ஒன்றும் செய்யாது,நீ பயப்படாமல் உன்னிடம் கொடுத்த வேலையினை தொடர்"என்றார்.

பின் அவர் பாம்பைப் பார்த்து மெல்லிய ஓசை ஒன்றை எழுப்பினார்.

'சட்'டென்று அது பின் வாங்கி 'சரசர'கொத்தாய் இருந்த செடிகளுக்குள் மறைந்தது.

சசிதரண் தகர டப்பாவை குழித்தோண்டி புதைக்கும் வரை எல்லோருமே சொட்ட சொட்ட மழையில் நனைந்தவாறே அங்கேயே நின்றிருந்தோம்.

முன்னறைக்கு திரும்பியதும் அவர் சிரித்துக் கொண்டே சொன்னார்.

"சசி உன்னுடைய பாட்டி நாக பூஜை தினமும் செய்தவர்,இந்த வீட்டில் இறந்த பாம்புகளின் ஆத்மாக்கள் சுற்றுகின்றன.அவற்றால் எந்த ஆபத்தும் வராது"

"ஆமாம்,நானே கண்களால் பார்த்தேன்,சிலருக்கும் காண்பித்தேன்"என்றேன் நான்.

அவர் என்னைப் பார்த்து சிரித்தார்.

"உன்னைப் பற்றியும் அனைத்தும் நான் அறிவேன்"என்றார்.

பின்,"எனக்குப் பழக்கம் மழை,வெயில் என்று பாராமல் இருந்து,நீங்கள் ஏன் சொட்ட சொட்ட நிற்கிறீர்கள்,தலையைத் துவட்டிக் கொள்ளுங்கள்"என்றார்.

நாங்கள் தலையை துவட்டிக் கொண்டு இருக்கும் போது வெளியில் சப்தம்.

"யாரது"என்றார் சசிதரண்.

அனைவர் கண்களும் வாசலைப் பார்த்தன.

ஒரு ஆண் நின்றிருந்தார்.

"ஐயா,உங்க வீட்டுல வேலைப் பார்த்துச்சே,ஒரு அம்மா?"

"அதுக்கு என்ன?"

"பஸ் ஸ்டாண்டுகிட்ட ஒரு லாரி மோதி ஸ்பாட்லயே இறந்துட்டாங்க"

"ஐயோ"என்றார் சசிதரண்.

"நீ யாருப்பா?"என்றார் சங்குண்ணி.

"நான் அவங்க பக்கத்து வீடுதான்,எஸ்டேட்டல வேலை செய்யறே,ரெண்டு மூணு நாளாவே ஒரு மாதிரி இருந்துச்சு,யாரோ வெளி ஆளுங்க வந்துப் பார்த்துட்டு போனாங்க"என்றார்.

'ஒரு நிமிஷம்'என்ற சசிதரண் உள்ளே போய் கையில் கொஞ்சம் பணத்துடன் வந்தார்.

அந்த ஆணிடம் அதை கொடுத்து 'இந்த பணத்தை வச்சு அந்தம்மாவோட கடைசி காரியங்களை முடிங்க"என்றார்.

அவர் தலையாட்டி அதை வாங்கி சென்றதும்,சங்குண்ணி,"நல்ல காரியம் செய்தாய் சசி,இறுதிச் சடங்குக்கு பணம் தந்தது நல்லதுதான்,ஆனாலும் அந்தம்மாவை யாரோ சந்தித்ததாக சொன்னார் அல்லவா,அது யார் என்று விரைவில் தெரிய வரும்"என்றார்.

ராமச்சந்தர்,"இரவு உணவுக்கு என்ன செய்ய,இரவு உணவை தவிர்த்து விடலாமா?"என்றார்.

"சரிதான் எனக்கு பசிக்குதுப்பா,நானே அனைவருக்கும் சப்பாத்தி செய்கிறேன்"என்று சமையலறை நோக்கிப் போனேன்.

ரம்யாவும் என்னுடன் வந்தாள்.

நாங்கள் அரை மணி நேரத்தில் செய்து முடித்து விட்டோம்.

சிம்பிளாய் சப்பாத்தியும்,பாசிப்பறுப்பும்.

எல்லோரும் டேபிளில் அமர்ந்து சாப்பிட ஆரம்பித்தோம்.

சங்குண்ணி சாப்பிட ஒன்றும் வேண்டாம் என்று சொல்லி விட்டு சோபாவில் உட்கார்ந்திருந்தார்.

எம்.டி."நாளை காலை டிபன் முடிந்ததும் கிளம்பி விடுவோம்"என்றார்.

உடனே சோபாவில் உட்கார்ந்திருந்த சங்குண்ணி,"காலையில் சீக்கிரமே கிளம்பி விடுவோம்,தள்ளிப் போட வேண்டாம்,நாளை காலை நீங்கள் இங்கிருந்து கிளம்பா விட்டால் மேலும் தள்ளிப் போக வாய்ப்பு இருக்கிறது"என்றார்.

"அப்படியே செய்து விடலாம்"என்றார் சசிதரண்.

எல்லோரும் சாப்பிட்டு முடித்ததும் நானும் ரம்யாவும் சாப்பாட்டு மேஜையை சுத்தம் செய்து விட்டு முன்னறைக்கு அனைவரும் இருந்த முன்னறைக்கு வந்தோம்.

சங்குண்ணி பேசுவதை எல்லோரும் கேட்டு கொண்டிருந்தார்கள்.

காட்டில் எப்படியெல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்று தெளிவாய் சொல்லிக் கொண்டிருந்தார்.

"நாம் நுழையும் பகுதியில் சென்னாய்கள் அதிகம்,அதை விரட்ட என்னிடம் பொருள் உள்ளது,யாராவது தனியாய் தவறிப் போய் விட நேர்ந்தால் மிகவும் ஜாக்கிரதையாய் இருங்கள்,ஒற்றையாய் சென்னாயைப் பார்த்தால் மிகவும் கவனம் கொள்ள வேண்டும்,தனியாய் கவனத்தினைத் திருப்பி வெவ்வெறு திசைகளில் இருந்து வந்து பல சென்னாய்கள் பாய்ந்து சிதிலமாக்கிவிடும்"அவர் சொன்ன விதமே அதிக பயத்தை உண்டு பண்ணியது.

"என்ன மாதிரியான முன்னெச்சிரிக்கைகளை வைத்து இருக்கிறீர்கள்?"என்று கேட்டார்.

சசிதரண் ரிப்பன் சமாச்சாரங்களை சொல்லி விட்டு,"நீங்கள் இருக்கும் போது எங்களுக்கு வேறு எந்த பயமும்,கவலையும் கிடையாது"என்றார்.

மாடியில் மீண்டும் ஏதோ சப்தம்.

சாதரணமாய் பேசிக் கொண்டிருந்த சங்குண்ணியின் முகம் மாறியது.

'திரும்ப ஆட்டம் போட வந்திருக்கிறது யாரு?'என்று சப்தமாக குரல் கொடுத்தார்.

இந்த முறை அவர் குரலே வித்தியாசமான முறையில் இருந்தது.

எனக்குள் மெல்லிய நடுக்கம் எட்டிப் பார்த்தது.

"கிளம்புவதற்குள் இவ்வளவு தடை வருகிறதே?"

"இதையெல்லாம் கடந்து தான் செல்ல வேண்டும்"என்றார் சங்குண்ணி.

கொஞ்ச நேரம் கடந்திருக்கும்.

மீண்டும் மேலே சப்தம்.

சிரித்தவாறே எழுந்தார்.

சசிதரணைப் பார்த்தார்.

"ஏழு வருஷம் முன்னாடி இந்த பங்களாவிலே ஒரு துர்மரணம் நடந்திருக்கு,என் கிட்ட சொல்லவேயில்லையே,அந்த பொண்ணோட ஆவி சுத்துது மேலே"என்றார்.

நான் அதிர்ச்சியுடன் சசிதரணைப் பார்த்தேன்.

என்னைப் போலவே மற்றவர்களும் சசிதரணைப் பார்த்தார்கள்.

"ஐயோ நாங்க இரண்டு பேரும் மாடியில இல்லே படுத்திருக்கோம்"என்றார் தேவன் கண்ணனை பார்த்தவாறே.

சங்குண்ணி சிரித்துக் கொண்டே,"நீங்கள் சினிமாவில் பார்ப்பது போல் எந்த ஆவியும் யாரையும் துன்புறுத்தாது,பழி வாங்காது,இந்த உலகத்துல அலையறதை விட்டு மேல் உலகத்துக்கு செல்லதான் பார்க்கும்,அதுக்கு யாராவது உதவ மாட்டாங்களான்னு வர்றவங்களை தொந்தரவு பண்ணும்,அவங்க கண்ணுல ஏதாவது ரூபத்துல படும்,அதை சாந்தப்

படுத்தி வழியை காண்பிச்சுட்டா அது பாட்டுக்கு போயிடும்,அதுக்கு அது எப்படி துர்மரணத்தினை சந்திச்சதுன்னு தெரிஞ்சாதான் நாம அனுப்பி வைக்க முடியும்"என்றார்.

எங்களைப் பார்த்த சசிதரண் சங்குண்ணியைப் பார்த்தார்.

லேசான கலக்க குரலில்,"முதல்ல இங்கே வீட்டு வேலைக்கு வந்த பெண்தான் பாரு,அவ கொஞ்சம் மன நிலை சரியில்லாதவன்னு தெரியாதவன்னு எனக்கு முதல்ல தெரியாது,எப்ப பார்த்தாலும் கிணத்து மேலேயே போய் உட்கார்ந்திருப்பா,ஒரு நா சமைக்கும் போது அவளே தீ வச்சு கொளுத்திட்டா,போலீஸ் கேஸ் கூட ஆச்சு,அவ குடிகார தகப்பன் காசு வாங்கிட்டு போலீஸ் ஸ்டேஷன்ல்ல இருந்து உடம்பை வாங்கிட்டு போயிட்டேன்.பல நாள் நான் தூங்கிட்டு இருக்கும் போது என் காதுக்கிட்ட அவ வந்து கூப்பிடறா மாதிரி இருக்கும்.நான் சோட்டானிகரை பகவதி பேரை சொல்லிட்டே தூங்கிடுவேன்"என்றார்.

"சரியான பங்களாவில கொண்டு வந்து தான் எங்களை தங்க வச்சீங்க"என்றாள் ரம்யா.

எம்.டி.அவள் பேசியதை ரசிக்கவில்லை என்பது அவர் முகம் போன போக்கிலேயே தெரிந்தது.

ஆனாலும் அவர் உடனே பதில் சொல்லி விட்டார்.

"சாமிக்கு எப்படி இப்ப தெரியுமோ அதே மாதிரி எனக்கும் இப்பத்தான் தெரியும்"என்றார்.

நான் சங்குண்ணியையேப் பார்த்து கொண்டிருந்தேன்.

"எங்கிட்ட பொய் சொல்லாதே சசி"என்றார் சிவந்த கண்களுடன்.

அத்தியாயம் இருபத்தி ஏழு

அவர் அப்படி சொன்னது சசிதரணைப் பார்த்து.

எங்களுக்கு ஆச்சர்யமாய் போனது.

எதற்காக அவர் அப்படி சொல்கிறார் என்பது யாருக்கும் புரியவில்லை.ஆனாலும் சசிதரண் ஏதோ தப்பு செய்திருக்கிறார் என்பது மட்டும் புரிந்தது.

எங்கள் முன் அவரை வெளிப்படையாக கடுமையாக பேசியது மெல்லிய பயத்தை எங்களுக்குள் அது ஏற்படுத்தியது.

"போ,உள்ளே போய் எண்ணெயில் தோய்த்து எடுத்து வா"என்றார்.

சசிதரண் வேகமாய் உள்ளே ஓடினார்.

வந்தவர் கையில் கொண்டு வந்திருந்த எண்ணெய் தோய்த்த திரியை சங்குண்ணியிடம் தந்தார்.

அவர் தன் இடுப்பில் இருந்து ஒரு சாக்பீஸ் துண்டை எடுத்து நடுத்தரையில் ஒரு சிறிய வட்டத்தைப் போட்டார்.

பின் திரியைக் கொளுத்தி நடுவில் போட்டார்.

விட்டத்தைப் பார்த்தார்.

பின் வலது,இடது,மேற்கு,கிழக்கு என தலையைத் திருப்பிப் பார்த்தார்.

சாதாரணமாய் இருந்த அவர் குரல் திடீர் என்று கடினமாக மாறியது.

அவர் வாயிலிருந்து மந்திரங்கள் தெறித்து விழுந்தன.

உக்ரமான முகத்துடன் அவர் குரலின் உச்சம் எகிற எகிற உத்திரத்திலிருந்து 'பொத்'தென்று விழுந்தது அது.

அது ஒரு சின்ன எலி.

வட்டத்துக்குள் விழுந்த எலி மயங்கியது.

தனது இடுப்பில் இருந்து சிறிய துணிப் பையை எடுத்து அதன் பக்கத்தில் கொண்டு சென்றார்.

எங்களின் கண்களால் நம்ப முடியாத செயல் அப்பொழுதுதான் நிகழ்ந்தது.

அந்த மயங்கிய எலி பைக்குள் ஏதோ பிடித்து இழுத்தது போல் சென்றது.

அந்த சிறிய பையை கட்டிய அவர் அதை சசிதரணிடம் கொடுத்தார்.

"இதை கொண்டு போய் தோட்டத்துல ஏதாவது மூலையில போய் போடு,இனிமேலாவது ஒழுங்கா இருந்துக்கோ"என்றார்.

அவன் கலங்கிய கண்களுடன் எழுந்து போனான்.

சங்குண்ணி எங்களைப் பார்த்தார்.

"எல்லோருக்கும் தெரிந்த கொள்ள வேண்டும் என்று தான் தோன்றும்,எனக்கும் சசிதரணுக்கும் மட்டுமே தெரிந்த விஷயம் அது,அதனால் அது என்னவென்று யாரிடமும் சொல்ல முடியாத நிலை"என்றார்.

திரும்ப வந்த சசிதரண் கைகள் இரண்டையும் கட்டிக் கொண்டு அவர் முன்னால் பவ்யமாக இருந்தான்.

"எந்த விஷயத்துல வேணும்ன்னாலும் நாம தப்பு பண்ணலாம்,ஆனா பெண்களோட வாழ்க்கையில மட்டும் விளையாடக் கூடாது,பெண்ணுங்கறவ வெறும் உடல் சுகம் தரும் இயந்திரம் இல்ல,அவ ஒரு அம்பாள்,நம்ம வீட்டுக்கு எந்த பெண் வந்தாலும் அவளை அம்பாளா பாரு,உன்னோட வாழ்க்கை மாறிடும்,அம்பாள் மாத்திடுவா,இது நான் எல்லோருக்கும் சொல்றதுதான்"என்றார்.

அவர் பேசும் வரை சசிதரண் வாயைத் திறக்கவேயில்லை.

அவர்களுக்குள் ஏதோ ஒரு விஷயம்.

அதை பற்றி நாம் கவலைப் பட வேண்டியதில்லை என்றே எனக்குத் தோன்றியது.

பின்னர் அவர்,"இன்னைக்கு ராத்திரி யாரும் எதுவும் சாப்பிட வேண்டாம்,வெறும் பழம் இருந்தா சாப்பிடுங்கோ,இல்லே பால் இருந்தா கொஞ்சம் மஞ்சள் தூள் கலந்து சாப்பிட்டு படுங்கோ,காலையில ஒரு சின்ன பூஜை முடிச்சுட்டு கிளம்பிடுவோ,ஏதாவது சிம்பிளா காலையில சாப்பிட பண்ணிக்கோங்க,பூஜை முடிஞ்சதும் நைவேத்யம் பண்ண கொஞ்சம் சர்க்கரைப் பொங்கல் பண்ணிடுங்க"என்றார்.

சொன்னவர் தொடர்ந்து,"நாளைக்கு நடக்கற பூஜையை படம் எடுக்க வேண்டாம்,இது என் உத்தரவு"என்றார் கணீரென்ற குரலில்.

சசிதரணும்,எம்.டி.யும் தலையாட்டினார்கள்.

சசிதரணும் நாங்களும் தலையாட்டினோம்.

நானே போய் எல்லோருக்கும் மஞ்சள் தூள் போட்டு பால் காய்ச்சி எடுத்து வந்தேன்.

சாப்பிட்டு கொஞ்ச நேரம் தான் ஆகியிருக்கும்.

தூக்கம் சொல்லி வைத்தாற் போல் சொக்கியது.

நாங்கள் ஒவ்வொருவராக தூங்கப் போக சங்குண்ணி முன்னறை சோபாவிலேயே படுத்துக் கொண்டார்.

நான் அறைக்குள் நுழையும் முன் ஏதோ சொல்ல முடியாத நல்ல வாசனை ஒன்று வீசியது.

ரம்யா,"லதா"என்று கூப்பிட்டாள்.

என்ன நினைத்தாளோ,"ஒண்ணுமில்லே எனக்கு முன்னாடி எழுந்துட்டா என்னை எழுப்பிடு,நானும் உனக்கு சமையல்ல உதவி செய்யறேன்"என்றாள்.

"நிச்சயமா"என்றேன்.

மறு நாள் காலையில் -

நாங்கள் எல்லோரும் எழுந்திருக்கும் முன்னரே சங்குண்ணி எழுந்து வந்து எல்லோரையும் எழுப்பி விட்டார்.

"எல்லோரும் முதல்ல குளிச்சுட்டு வாங்க,அப்புறம் லதா நீ குளிச்சுட்டு நைவேத்யத்திற்கு பொங்கலும்,எல்லோரும் சாப்பிட ஏதாவது பண்ணு,எல்லோரும் வந்ததும் பூஜை ஆரம்பிப்பேன்,நான் கூப்பிடும் போது நீ வந்தா போதும்"என்றார்.

எல்லோருமே ஏதோ மந்திர சக்திக்கு கட்டுப் பட்டது போல 'சரி'என்று தலையாட்டி நகர்ந்தோம்.

திரும்பி வரும் போது முன்னறையில் நடுவில் பெரிய கோணச் சக்கரம் போட்டிருந்தார் வண்ணப் பொடியில்.

"நூற்று அறுபத்து நாலு கட்டங்கள்,இதுக்குள்ளே பஞ்ச பூதமும் அடங்கிப் போச்சு,முறையா பூஜை பண்ணா பல சக்திகளை பெறலாம்,தவறான நோக்கத்தோட சிந்திச்சா புத்திப் பேதலிச்சு போகும்"என்றார்.

நட்ட நடுவில் சிறியதாய் ஒரு வட்டம் இருந்தது.

என்னைப் பார்த்தவர்,"ஒரு சின்ன கற்பூரத்துண்டை கொண்டு வந்து கொளுத்திப் போடு நீ போய் நைவேத்யம்,சிற்றுண்டி வேலைகளை கவனி,முக்கியமான நேரத்தில கூப்பிடறேன்"என்றார்.

நான் அவர் சொன்னது போலவே சின்ன கற்பூரத் துண்டை கொண்டு வந்து கொளுத்திப் போட்டு விட்டு உள்ளே சமையல் அறைக்கு சென்றேன்.

என் பணிகளை உள்ளே தொடர்ந்தாலும் வெளியில் அவரின் உரத்த குரலில் மந்திரங்கள் ஓங்கி ஒலிக்க ஆரம்பித்தன.

நான் நைவேத்யத்திற்கு ஒரு பக்கம் வைத்து விட்டு இன்னொரு பக்கம் சிம்பிளாக உப்புமா கிண்ட ஆரம்பித்தேன்.

இரண்டுமே முடிந்த வேளையில் அவர் என்னை அழைத்தார்.

"லதா அந்த நைவேத்ய பொங்கலை எடுத்துண்டு உடனே வா"என்றார்.

நான் அதை எடுத்துக் கொண்டு அங்கே முன்னறைக்கு சென்ற போது திகைத்துப் போனேன்.

அந்த வட்டத்தை சுற்றி எல்லோரும் நின்று கொண்டிருந்தார்கள்.

சங்குண்ணி உச்சக்குரலில் மந்திரங்களை சொல்லிக்கொண்டிருந்தார்( சித்த மந்திரங்கள் சில மறை பொருள் என்பதால் நீக்கப் பட்டிருக்கின்றன).

கோலத்தின் நடுவில் அந்த ஐந்து தலை நாகம் படமெடுத்து சீறிக் கொண்டு அவரையே பார்த்து கொண்டிருந்தது.

எனக்கு மயக்கம் வராத குறை.

ஒரு வித பயத்துடனே பார்த்துக் கொண்டிருந்தேன்.

அவர் 'இங்கே அதை கொண்டா'என்றார்.

அவர் அப்படி சொன்னதும் அது என்னைத் திரும்பிப் பார்த்தது.

எனக்கு குலை நடுங்கிப் போனது.

அவரிடம் பாத்திரத்தை நீட்டினேன்.

அதை வாங்கியவர் அதன் முன்னே கொண்டு செல்ல விஞ்ஞானத்தால் விவரிக்க முடியாத விஷயங்களை அனைவரும் பார்த்தோம்.

அதன் ஐந்து தலையின் வாய்களும் திறந்தன.

நீண்ட நாக்குகள் வெளிவந்து பாத்திரத்திலிருந்த பொங்கலை வழித்து உள்ளே தள்ளின.

இரண்டு நொடிகள் தான் பாத்திரம் எங்கோ போய் விழுந்தது.

சங்குண்ணியையைப் பார்த்து தலையை தரையில் அடித்த அது அப்படியே ஒரு நீண்ட கழியாய் மாறிப் போனது.

கழியின் முனையில் ஐந்து முக நாகத் தோற்றம்.

அதை எடுத்து தன் கையில் வைத்துக் கொண்டவர்,"இனிமேல் தாமதிக்க வேண்டாம்,சீக்கிரம் சாப்பிடுங்கள்,கிளம்பி விடுவோம்"என்றார்.

நடப்பது எல்லாமே ஏதோ விட்டலாச்சாரியர் படத்தில் நடப்பது போல் தோன்றியது.

அவர் என்னைப் பார்த்து,"எனக்கு ஒரு தம்ப்ளரில் பால் மட்டும் குடிக்க கொடு"என்றார்.

நான் பால் கொடுத்து விட்டு வரும் முன் ரம்யா முன்னறையில் சாப்பாட்டு மேஜையில் உப்புமா பாத்திரத்தையும் தட்டுகளையும் கொண்டு வந்து வைத்திருந்தாள்.

நான் உப்புமா சாப்பிட ஆரம்பித்தாலும் சங்குண்ணியின் கையில் இருந்த வளைந்து நெளிந்து உச்சியில் ஐந்து தலையுடன் இருந்த கழியை பார்த்துக் கொண்டேயிருந்தேன்.

## அத்தியாயம் இருபத்தி எட்டு

என்னயும் அறியாமல் அவர் மீது ஒரு பயமும் பக்தியும் ஒரு சேர தோன்ற ஆரம்பித்து விட்டது.எங்களுக்கு ஆச்சர்யமாய் போனது.நான் தான் மிகவும் மௌனமாய் இருப்பது போல் முதலில் எனக்கு தோன்றியது.அனைவருமே எந்த வித சலனமும் பேச்சும் இல்லாமல் சாப்பிடுவதில் மும்முரமாய் இருந்தார்கள்.

அதீதமான நிசப்தம் அங்கே இருந்தது.

மழை பெய்து கொண்டுதான் இருந்தது.

சாப்பிட்டு முடித்த வேகத்தில் எல்லோரும் அவரவர் தோள் பையை மாட்டிக் கொண்டு வண்டியில் ஏற ஆரம்பித்தோம்.

எம்.டி.சங்குண்ணி எந்த வண்டியில் ஏறப் போகிறார் என்று காத்திருந்தார்.

அவர் நானும் ரம்யாவும் தேவனும் ஏறிக் கொண்ட வண்டியிலேயே ஏறி விட்டார்.

எம்.டி.அதில் ஏற வர-

சங்குண்ணி,"கண்ணா நீ சங்குண்ணி வண்டியில வா"என்றார்.

அவர்'சரி சாமி'என்று நகர்ந்தார்.

சங்குண்ணி பங்களாவின் கதவை மூடி பெரிய பூட்டைத் தொங்க விட்டார்.

அவர் வண்டியில் எம்.டி.ஏறிக்கொண்டார்.

காமிரா வேன் உட்பட அனைத்து வண்டிகளும் கிளம்ப -

எனக்கு நிம்மதியாக தோன்றியது.

கைப்பேசியில் சிக்னல் இருந்தது.

சொல்லி வைத்தாற் போல் அம்மா அழைத்தாள்.

"என்னடி போனே காணோம்,தினமும் போன் பண்றேன்னு சொன்னியே?"

"சிக்னலே இப்பத்தாம்மா கிடைச்சது,நாங்க இப்பத்தான் காட்டுக்கு கிளம்பிட்டு இருக்கோம்"என்றேன்.

"உங்க தொலைக்காட்சியில தினமும் பல தடவை போடறாங்க,உங்க புது நிகழ்ச்சி பத்தி,பார்க்கவே பயமா இருக்கு"

"அது எடிட் பண்ணி போட்டதும்மா அப்படித்தான் இருக்கும்"

"அது சரி உங்க கான்ஃப்ரன்ஸ் ரூம்ல நடந்தது எல்லாம் நீ சொல்லவேயில்லையே"

"அதுதான் பார்த்துட்டேயில்லே"

"என்னமோ,அடிக்கடி போன் பண்ணு"

"அம்மா பயப்படாதே போனை கட் பண்ணி என்னை சுத்தி பல பேர் இருக்காங்க,பயப்பட ஒண்ணும் இல்லே"

"நீ எப்பவும் அப்படித்தான் சொல்வே"

"சரிம்மா சரி,நான் வைக்கறேன்"என்று கத்தரித்தேன்.

சங்குண்ணி என்னைப் பார்த்து சிரித்தார்.

"அம்மாவா,அம்மான்னா பயம் இருக்கத்தானே செய்யும்,அதுவும் நாக தோஷம் உள்ள பொண்ணு நீ"

அவர் சாதாரணமாய் சொன்னதும் நானும் வண்டியில் இருந்த மற்றவர்களும் அதிர்ந்து போனோம்.

"நான் யாரிடமும் இந்த தகவலை சொன்னதேயில்லையே சாமி"

"அவசியமா என்ன,அதெல்லாம் எனக்கு தேவையில்லை,நம்ம கூட வர அத்தனை பேரோட விஷயமும் எனக்கு தெரியும்,நடக்க போற சில விஷயங்களும் தெரியும்"என்று சிரித்தார்.

எல்லோரும் திகைத்துத்தான் போனார்கள்.

"பயப்படாதீங்க,நான் இருக்கற வரைக்கும் யாருக்கும் எந்த வித சிறு காயம் கூட ஏற்படாது,எல்லாம் ஜாக்கிரதையா இருக்கு"கையில் இருந்த பாம்புத் தண்டத்தினை தூக்கி காண்பித்தார்.

"இவன் நமக்கு துணை இருக்கான்,நாகலோகத்துல இருந்து நாகேந்திரனே இறங்கி வந்தாலும் ஒண்ணும் ஆபத்து வராது,அப்படி அவன் வந்தாலும் நமக்கு உதவி பண்ணத்தான் வருவான்,நாம இப்ப போறோமே பயணம் இது நீயோ இல்லே உங்க எம்.டி.யோ திட்டமிட்டதுன்னு நினைச்சுட்டு இருக்கீங்க,எல்லாமே திட்டமிடப் பட்டது,நடக்க வேண்டியது எல்லாம் நடந்தே தீரும்"என்றார்.

சொன்னவர் கொஞ்சம் நேரம் மௌனமாய் இருந்து விட்டு ரம்யாவைத் திரும்பிப் பார்த்து மெல்லியதாக புன்னகைத்தார்.

அவளும் பதிலுக்கு புன்னகைத்தாள்.

அவளை மட்டும் பார்த்து ஏன் அவர் தனியாய் புன்னகைக்க வேண்டும் என்று எனக்கு தோன்ற 'சட்'டென்று அவர் என்னைப் பார்த்தார்.

"என்ன லதா சிந்தனையை சிதற விடாதே,எல்லாத்துக்கும் ஒரு காரண காரியம் இருக்கு"என்றார்.

என் மன ஓட்டத்தினை படம் பிடித்து அவர் பேசியது எனக்கு வியப்பாய் இருந்தது.

நான் ஒன்றும் பேசவில்லை.

வண்டிகள் வேகமாய் ஓடிக் கொண்டிருந்தன.

வெளியில் மழை இன்னமும் பெய்து கொண்டு தான் இருந்தது.

எனக்கு சங்குண்ணி அந்த வண்டியில் இருப்பது அசாதாரண தைரியத்தை உண்டு பண்ணியது.

எம்.டி.ஏறியிருந்த வண்டியின் மைக் ஸ்ப்தம் எங்கள் வண்டிக்குள் ஒலித்தது.

அணைத்து வண்டிகளிலும் யார் பேசினாலும் அனைத்து வண்டிகளிலும் ஒலிக்கும் படி ஏற்பாடு செய்திருந்தார்கள் பாதுகாப்பு கருதி.

எம்.டி.யின் கைப்பேசி தொடர்ந்து ஒலித்துக் கொண்டேயிருந்தது எங்கள் காதுகளில் விழுந்தஹ்டு.

பேசிக் கொண்டேயிருந்தார்.

"யெஸ் இன்னைக்கு ராத்திரியே ஃபார்ஸ்ட் ரேஞ்சுக்குள்ளே நுழைஞ்சுடுவோம்,ஃபுட்டேஜ் வர ஆரம்பிச்சுடும்,ஒரு நாலு நாள் கேப் விட்டு டெலிகாஸ்ட் ஆரம்பிச்சுடலாம்"என்றார்.

சொல்லி கைப்பேசியைத் துண்டித்தவர் சங்குண்ணியைப் பார்த்தார்.

"என்ன சாமி நான் சொன்னது சரிதானே"என்று பவ்யமாய் கேட்டார்.

"நல்லதே நடக்கும்,உன்னோட மனம் படி"என்றார்.

எனக்கு 'திக்'கென்று இருந்தது.

நல்லதே நடக்கும் என்று சொன்னதோடு நிறுத்திக் கொண்டிருக்கலாமே,அது என்ன 'உன்னோட மனம் படி'என்று சேர்த்து சொல்லியிருக்காறே என்று யோசிக்க ஆரம்பித்தேன்.

நான் நினைத்தது போலவே நடந்தது.

இப்பொழுதும் சங்குண்ணி என்னைப் பார்த்து சிரித்தார்.

"குழந்தாய் எல்லாம் புரிய வேண்டிய நேரத்தில் புரியும்"என்றார்.

அவர் என்னிடம் அப்படி சொன்னது மற்றவர்கள் மனதில் என்னவித எண்ணத்தை தோற்றுவித்திருக்குமோ என்று என் எண்ன ஓட்டம் ஓடியது.

சசிதரண்,"நாம பாலக்காடு எல்லையை கடக்கப் போகிறோம்,ஒரு டீ சாப்பிடலாமே" என்று சொல்ல,சங்குண்ணி,"அப்படியே செய்யலாமே"என்றார்.

வண்டிகள் ஒரு டீ கடை ஓரமாய் நின்றன.

"எல்லோரும் இறங்க வேண்டாம்,ஒருத்தர் போய் சொல்லி விட்டு வந்தால் போதும்"என்றார் சங்குண்ணி.

தேவன் இறங்கிப் போனான்.

சங்குண்ணி என்னைப் பார்த்தார்.

என் பக்கம் குனிந்தவர் என் காதுகளில் மட்டும் விழும் படி,"உனக்கு மனசு ரொம்ப குழப்பமா இருக்கு,யார் மேலே உனக்கு சந்தேகம்,என் கிட்டே நீ தைரியமா சொல்லலாம்"என்றார்.

நான் திகைத்துத் தான் போனேன்.

ரம்யா பற்றி அவரிடம் பேச வேண்டும் என்று நானே நினைத்திருந்தேன்.

"கீழே இறங்கலாமா?"என்று கேட்டேன்.

"ம்,இறங்கலாமே"என்றார்.

இருவரும் இறங்கினோம்.

வேறு யாரும் இறங்க வேண்டாம் என்று அவர் அப்பொழுது சொன்னதன் அர்த்தம் எனக்கு அப்பொழுதுதான் புரிந்தது.

கடைசி வண்டி எங்கள் வண்டி என்பதால் பின்னால் தள்ளி நின்றோம்.

கொஞ்ச நேரத்தில் தேவன் இரண்டு க்ளாஸ்களில் எங்களிடம் தேனீர் தந்து விட்டு சென்று விட்டான்.

நான் மெல்ல ஆரம்பித்தேன்.

"டீயை குடித்துக் கொண்டே பேசு"என்றார்.

நான் ஆரம்பித்திலிருந்து ரம்யாவின் போக்கு பற்றியும் அவள் மீது பாம்பு வாசம் வீசுவதையும் சொன்னேன்.

சங்குண்ணி சிரித்தார்.

"நீ நினைத்தது சரிதான்,ரம்யா சாதாரண பெண் அல்ல,சரியான நேரத்தில் நான் கவனித்துக் கொள்கிறேன்,நீ எதற்கும் பயப்படவேண்டாம்,எதற்கும் தயாராய் இரு"என்றார்.

"நான் ஆரம்பித்திலிருந்தே சந்தேகப் பட்டேன்,மேலும் அவள் ஒரு நாள் சட்டை உரித்தாள்,என் அறையில் தங்கியதே அவள் என்னை கண்காணிக்கத்தான் என்று தோன்றியது"என்றேன்.

"எதுவாக இருந்தாலும் நீ பயப்பட வேண்டாம்"என்றார்.

தொடர்ந்து,"நான் இருக்கிறேன்"என்றார்.

நானும் அவரும் பேசிக் கொண்டே டீயை முடித்திருந்தோம்.

தேவன் வந்தான்.

காலி தம்பளர்களை வாங்கிச் சென்றான்.

மீண்டும் வண்டிகள் கிளம்பத் தொடங்கி ஃபாரஸ்ட் ரேஞ்ச் ஆரம்பிக்கும் முன் முன்னால் சென்ற வேன் 'சடா'ரென்று ப்ரேக் போட மற்ற வண்டிகளும் ஃப்ரேக் போட்டன.

நான் சின்னத் திகிலுடன் சங்குண்ணியைப் பார்த்தேன்.

"ஒண்ணும் பயப்பட வேண்டாம்,இது சாதாரணமாய் காட்டில் நடப்பதுதான்"என்றார்.

"என்ன?"என்றேன்.

"கடக்கும் போது தெரியும்,இப்பொழுதே ஏன் மண்டையை போட்டு உடைத்து கொள்ள வேண்டாம்"என்றார்.

அத்தியாயம் இருபத்தி ஒன்பது

நாங்கள் பார்த்து கொண்டிருக்க காட்டெருமை ஒன்று தேவனை நோக்கி எங்கிருந்தோ நாலு கால் பாய்ச்சலில் பாய்ந்து வந்தது.

அவன் பதறிப் போய் திகைத்து எந்த வித அசைவும் இன்றி கேமிராவை அப்பொழுதும் விடாமல் அதை படமெடுத்தபடி நின்று கொண்டிருந்தான்.

சங்குண்ணி 'சீ,தூ'என்ற படியே தன் கையில் இருந்த ஐந்து தலை பாம்புத் தண்டத்தை அதனை நோக்கி எறிந்தார்.

எறிந்த மாத்திரத்தில் அது பருந்தாக மாற் எரிந்து சாம்பலாகி தரையில் விழந்தது.

தண்டம் போன வேகத்தில் திரும்பி பறந்து வந்து சங்குண்ணி கையில் அமர்வது போல் உட்கார்ந்தது.

அனைத்தையும் பார்த்துக் கொண்டு பயத்தில் உறைந்து நின்றோம்.

சங்குண்ணி மெல்ல சிரித்தார்.

"இன்னும் இருக்கு,வரு வரு"என்று விடு விடு வென்று முன்னே நடந்தார்.

சிவஞானம்,"காட்டெருமை உன்னை நோக்கி ஓடி வந்ததை ஷூட் பண்ணியா?"என்று கேட்டார்.

அவர் கவலை அவருக்கு.

அதையும் எடுத்தேன்.

"அந்த எருமை பருந்தாக மாறி சாமி தண்டம் எரிந்ததும் சாம்பலாகி தண்டம் திரும்ப சாமி கையில் உட்கார்ந்ததையும் ஷூட் செய்துள்ளேன்'என்றான்.

நான் எதேச்சையாக ரம்யாவின் முகத்தினைப் பார்த்தேன்.

ஏனோ இருண்டிருந்தது.

காரணம் தெரியவில்லை.

முதல் வேனில் இருந்த தகவல்கள் தொடர்ந்த வண்ணம் இருந்தன.

எம்.டி.யின் முகத்தில் சந்தோஷம் அதிகரித்துக் கொண்டிருந்ததை கவனித்தேன்.

எனக்குதான் தெரியும் அவரின் உண்மையான நோக்கம்.

எதுவாக இருந்தாலும் நடக்க வேண்டிய நேரத்தில் நடக்கும் என்கிற நம்பிக்கை எனக்கு இருந்தது.

இந்த ஐடியாவை நான் யோசிக்கும் போதே அனைத்தையும் முடிவு செய்து விட்டேன்.

எங்கே யாருக்கு முடிவு என்பது காட்டின் உள்ளே போகப் போக தெரியும்.

திடீர் என என் மனக்கண்ணின் முன் அந்த காட்சி வந்தது.

முகத்தில் பல நூறு வருடங்களுக்கான் தோற்றத்துடன் ஒரு முகம்.வரண்டு தொங்கிய ஸ்தனங்கள்.கையில்

ஒரு லாந்தர் விளக்கு.ஆனாலும் பற்கள் அப்படியே இளம் பெண்ணின் பற்கள் போன்று இருந்தன.

என் முகத்தருகில் இளித்தாள்.

'பட்'டென்று மயக்கம் போட்டு விழுந்தேன்.

என் முகத்தில் தண்ணீர் தெளிக்கப் பட்டதை உணர்ந்தேன்.

எல்லோரும் சுற்றி நின்று,"என்னாச்சு என்னாச்சு?"என்றார்கள்.

சங்குண்ணி சிரித்துக் கொண்டே,"அம்மைக்கு எல்லாம் ஆரம்பிச்சாச்சு,கொஞ்சம் காத்தை விடுங்கோ சுவாசிக்கட்டே"என்றார்.

நான் எழுந்து உட்கார்ந்தேன்.

யாரோ என் கையில் சிறிய வாட்டர் பாட்டிலை நீட்டினார்கள்.

வாங்கி 'மடக் மடக்'கென்று குடித்தேன்.

பக்கத்தில் முழந்தாள் இட்டு அமர்ந்த சங்குண்ணி,"எல்லாம் சரியாக்கும்,மோளே யான் அறியும் நிங்கள் ஆரானு"என்றார்.

எனக்குள் ஒரு புதுவித தெம்பு பிறந்தது.

சங்குண்ணியை எனக்காகவே சர்ப்பக்காவு அம்மன் அனுப்பியிருப்பது போல் தோன்றியது.

ஆனாலும் நிகழ்ச்சி சிறப்பாய் வர வேண்டும்.

கொஞ்சம் நேரம் ஓய்வுக்குப் பின் மீண்டும் நடக்க ஆரம்பித்தோம்.

களைப்பே தெரியாமல் நடந்து கொண்டிருந்தோம்.

எவ்வளவு தூரம் உள்ளே சென்று இருப்போம் என்று தெரியாது.

ஆனால் கண்ணன் போகிற வழித்தடங்களை முன்னமே திட்டமிட்டு இருந்தது போல் வண்ண ரிப்பன்களை கடக்கும் மரங்களில் கட்டி வந்தான் அடையாளத்திற்கு.

"கொஞ்சம் நேரம் உட்காரலாமே?"என்றார் சங்குண்ணி.

மழை இல்லை.

ஆனாலும் முன்னால் தொடர்ந்து பெய்த மழையால் தரை ஈரமாகவும் சேறாகவும் இருந்தது.

மர ஓரம் உட்காரப் போனேன்.

சங்குண்ணி 'சட்'டென்று,"மரத்தை ஒட்டி யாரும் உட்காராதீர்கள்"என்றார்.

காரணம் இல்லாமல் இருக்குமா என்ன?

சிவஞானம் 'இயற்கை அன்னை என்னை அழைக்கிறாள்'என்றபடியே கொஞ்சம் பக்கவாட்டில் தெரிந்த பாதையில் போனார்.

அவர் போய் ஐந்து நிமிடத்துக்கு மேல் ஆகியிருக்கும். திரும்பி வரவில்லை.

நான் ஏதோ உறுத்த சங்குண்ணியைப் பார்த்தேன்.

சங்குண்ணி மெல்ல எழுந்தார்.

தேவன் காமிராவுடன் அவரை தொடர்ந்தான்.

"என்னை எடுக்காதே நடப்பதை மட்டும் எடு"என்றார்.

அவர் அப்படி சொன்னது எல்லோருக்கும் ஆவலைத் தூண்டினாலும்,"யாரும் வர வேண்டாம் பின்னால்"என்றார்.

அவருக்கு முன்னால் கேமிராவை ஆன் செய்து மெல்ல நடந்து சென்றான் தேவன்.

சிறிது நேரம் கடந்திருக்கும்.

'ஐயோ'என்று சிவஞானம் அலறியது எங்கள் காதுகளில் ஒலித்தது.

பக்கத்தில் பந்து பந்தாய் நெருப்பு மேல் நோக்கி சென்றது.

நாங்கள் சங்குண்ணியின் வார்த்தைக்கு கட்டுப் பட்டு திகிலுடன் அங்கேயே நின்று இருந்தோம்..

கொஞ்ச நேரம் கடந்திருக்கும்.

சங்குண்ணியும்,தேவனும் சிவஞானத்தினை தூக்கி வந்து கிடத்தினார்கள்.

உடல் முழுக்க ரத்த காயங்கள்,கீறல்கள்.

தேவன் தான் பதிவு செய்திருந்ததை எங்களுக்கு காட்டினான்.

எங்களுக்கு ரத்தமே உறைந்தது போல் இருந்தது.

கொஞ்சம் பள்ளத்தாக்கில் புதர்களைத் தாண்டி நின்று கொண்டிருக்கிறார். கொஞ்சம் தள்ளி செந்நாய் குட்டி ஒன்று தனியாய் நிற்கிறது.அதைப் பார்த்த படியே நிற்கிறார்.சிறு குட்டித் தானே என்கிற ஆவலில் அதை நோக்கி போகிறார்.

அடுத்த கணமே அவர் மீது புதரின் பல பக்கங்களில் இருந்து செந்நாய்கள் பாய்கின்றன.

பிராண்டி கீறுகின்றன.

'ஐயோ'என்று கத்துகிறார்.

அவர் மீது செந்நாய்கள் பாய்வதிலிருந்து தேவன் ஷூட் செய்திருக்கிறார்.

சங்குண்ணி தன் கையில் இருந்த ஐந்துதலை நாகாஸ்தரத்தை எறிய ஒவ்வொரு செந்நாயும் பற்றி எரிந்து கோலப் பந்துகளாய் மேலே சென்று 'பொத்'பொத்' என்று பல திசைகளில் விழுந்தன.

ரம்யா அவருக்கு முதலுதவி பெட்டியில் இருந்து பஞ்சு எடுத்து காயங்களை டிஞ்சர் போட்டு சுத்தம் செய்து ஒரு ஏ.டி.எஸ்.ஊசி போடும் போது சிவஞானம் எங்களிடம் விவரித்தார்.

"அந்த சிறு நாய்தான் செந்நாய் குட்டி,அதன் கண்கள் மிகவும் கவர்ச்சியாய் இருந்தன,மிக அருகில் போனேன் தூக்க,அப்பொழுதுதான் நாலா திசையில் இருந்தும் மற்ற நாய்கள் பாய்ந்தன"என்று சொல்லும் போது அவர் தேகம் இன்னமும் பயத்தில் உதறுவதைப் பார்த்தேன்.

இருட்ட ஆரம்பித்து விட்டது.

"நேரம் என்ன இருக்கும்"

"ஏழு தாண்டியிருக்கும்,முதல் நாளே ரொம்ப நடக்க வேண்டாம்,ரெண்டாவது சிவஞானத்துக்கு இப்ப ஓய்வு தேவை"என்ற சங்குண்ணி ஒரு பெரிய வட்டம் ஒன்றை தனது கையில் இருந்த நாக தண்டத்தால் போட்டார்.

"இது உள்ளே எல்லோரும் ஆகாரம் சாப்பிட்டு ஓய்வு எடுங்க,நான் எழுப்பறேன்,உங்களுக்கு எந்த ஆபத்தும் வராது,எந்த பயமும் இன்றி நிம்மதியாய் தூங்குங்க"என்றார்.

நாங்கள் அவரவர் ஷோல்டர் பேக்கை இறக்கி வைத்து உள்ளிருந்த உணவுகளில் சிலதை எடுத்து சாப்பிட ஆரம்பித்தோம்.

கொஞ்சம் நேரம் சிவஞானம் முனகிக் கொண்டேயிருந்தார்.

சங்குண்ணி எழுந்து அவர் நெற்றிப் பொட்டில் தனது கட்டை விரலை வைத்து அழுத்த அவர் அப்படியே உறங்கிப் போனார்.

அவரிடம் இருந்து மெல்லிய குறட்டை ஒலி வந்தது.

ஒவ்வொருவராக உறங்கி விட்டார்கள்.

நான் நெடு நேரம் விழித்திருந்தேன்.

வட்டத்துக்கு வெளியே ஒரு மரத்தடிக்கு கொஞ்சம் முன்னே சம்மணம் இட்டு அமர்ந்திருந்த சங்குண்ணியின் கைகள் இரண்டும் மடியில் நாக தண்டத்தை அழுத்தி பிடித்த படி இருந்தன.

அவர் கண்களை மூடி நிஷ்டையில் இருந்தார்.

நான் அவரையே பார்த்து கொண்டிருந்தேன்.

அவரது மூச்சுக்காற்று பெரிய சப்தத்துடன் வெளியில் வந்து உள்ளே சென்று கொண்டிருந்தது.

நான் மெல்ல கண்களை மூடினேன்.

உறக்கம் என்னை உள்ளே இழுத்தது.

அத்தியாயம் முப்பது

ரம்யாதான் என்னை தட்டி எழுப்பினாள்.

எல்லோரும் எழுந்தாச்சு,எழுந்திரு என்று சொல்லிக் கொண்டே அவள் எழுப்புவது என் காதுகளில் ஒலித்தது.

மெல்ல எழுந்தேன்.

எனக்கு முன்னால் தயாராய் இருந்தார்கள்.

சங்குண்ணி,"போய்க்குள்ளு ஈ இடத்தில் ஒரு ஓடையுண்டு"என்றார்.

ரம்யா என்னைப் பார்த்து சிரித்தாள்.

"இப்படி ஒரு தெளிந்த நீரோடை நான் எந்த காட்டுலயும் பார்த்தது கிடையாது,காலைக் கடன்களை முடிக்க சிறந்த இடம்,இளம் குளிரில் ஒரு சிறு குளியில் போடுவோம்,மற்றவர்கள் எல்லோரும் முடித்து

விட்டார்கள்,நான் உனக்காக
காத்திருக்கிறேன்"என்றாள்.

நான் சிவஞானத்தைப் பார்த்தேன்.

அவர்,"இதை விட்டா அப்புறம் எங்கே குளிப்போன்னு தெரியாதுன்னு குருஜி சொல்லிட்டார்,போயிட்டு சீக்கிரம் வாங்க,காலை உணவை முடிச்சுட்டு உடனே இங்கிருந்து கிளம்பிடுவோம்'என்றார்.

நான் சங்குண்ணியைப் பார்த்தேன்.

"அவர் பயப்பட வேண்டாம்,இப்ப எந்த விலங்குகள் நடமாட்டமும் இருக்காது"என்றார்.

ரம்யாவுடன் நடக்க ஆரம்பித்தேன்.

காட்டின் வினோதப் பறவைகளின் ஓசைகளும் சப்தங்களும் காதுகளில் ரீங்காரம் இட்டுக் கொண்டிருந்தன.

கொஞ்ச நேரத்தில் அந்த ஓடை இருந்தது.

மெல்ல நெருங்கி அதன் முன்னால் இருந்த மரத்தருகில் உடைகளை கழற்றி வைத்து விட்டு துண்டை கட்டுக் கொண்டு இறங்கினோம்.

நான் தலையில் குளிக்கும் போது போட்டுக் கொள்ளும் ஹெட் கேப் கொண்டு வந்திருந்தேன்.

ரம்யா அப்படியே இறங்கி விட்டாள்.

இடுப்பு வரை தண்ணீர் வரை ஓடிக் கொண்டிருந்தது.
நல்ல ஜில்லிப்பு.

ரசிப்பாய் உடலை வருடிக் கொடுத்தது ஓடிக் கொண்டிருந்த நீரோடை.

ஐந்து நிமிஷம் முங்கி முங்கி எழுந்தேன்.

இது போன்ற இயற்கை சூழலில் ஒரு நீரோடையில் நான் குளிப்பது இதுவே முதல் தடவை.

குளியலை முடிக்க மனசில்லை.

உள்ளே முங்கினேன்.

திடீரென்று என்னை தண்ணீரில் யாரோ முக்கினார்கள்.

மூச்சு முட்டியது.

எம்பி வெளி வந்தேன்.

கொஞ்சம் தள்ளி ரம்யா வேறு பக்கம் பார்த்து கைகளை தேய்த்து கொண்டிருந்தாள்.

எனக்கு அவள் மீது சந்தேகம் இருந்தது.

ஆனாலும் தள்ளி அல்லவா நிற்கிறாள்.

அப்படியென்றால் வேறு யார்.

நாலு பக்கமும் திரும்ப திரும்ப பார்த்தேன்.

யாரும் இல்லை.

ரம்யா என் பக்கம் திரும்பினாள்.

"என்ன?"என்றாள்.

"இல்லை என்னை நான் தண்ணீரில் முங்கிய போது யாரோ பிடித்து அமுத்தியது போல் இருந்தது"என்றேன்.

அவள் சிரித்தாள்.

"லதா நேற்று ராத்திரி சரியாக தூங்கியிருக்க மாட்டாய்,ஏதாவது கனவு கண்டு இருப்பாய்,அதனால் தான் இப்படி சிந்திக்கிறாய்"என்றாள்.

"இருக்கலாம்"என்றாள்.

நான் மீண்டும் முங்கி எழுந்த போது ரம்யாவை கானோம்.

எனக்கு பயங்கர அதிர்ச்சியாய் இருந்தது.

என் காலடியில் ஏதோ ஊர்வது போல் இருந்தது.

அதிர்ந்து கீழே பார்த்தேன்.

ரம்யா தான்.

அவள் முகத்தில் பயங்கர கோபக்கனல் கொழுந்து விட்டு எரிந்தது.

"யார் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய் என்னை?'"என்றால் கோபத்தோடு.

நான் கொஞ்சமும் சளைக்காமல்,"ஆராய்ச்சி என்கிற பெயரிலும் பாதுகாப்புக்கு என்கிற பெயரிலும் எங்களுடன் வந்திருக்கும் நீ நாக வம்சத்தை சேர்ந்தவள்,உன்னுடன் வந்திருக்கும் ராம்பிரசாத்துக்கு அது தெரியாது,அந்த பல லட்ச கோடியுள்ள வைரத்தை அடித்து செல்லவே நீ வந்திருக்கிறாய்"என்றேன்.

அவள் அதிர்ந்து போனாள்.

"நான் யார் என்று தெரியுமா,என்று கேட்ட நீ என்னைத் தெரிந்து கொள்ளாமல் போனாயே"என்றேன் சிரித்துக் கொண்டே.

அவள் 'சடா'ரென்று பெரிய பாம்பாக மாறினாள்.

என் மீது பாய்ந்தாள்.

அவளின் வால் பக்கம் மூலம் என்னை சுற்ற ஆரம்பித்தாள்.

நான் கண்களை மூடிக் கொண்டு சங்குண்ணியை நினைத்துக் கொண்டேன்.

மீண்டும் கண்களைத் திறக்க என்னை பாம்பாய் சுற்றி இறுக்கிக் கொண்டிருந்தாள்.

நீரோடை அருகில் வந்த சங்குண்ணி தன் கையில் இருந்த நாக தண்டத்தை எங்களை நோக்கி எறிந்தார்.

ரம்யா 'சட்'டென விட்டு தண்ணீருக்குள் வேகமாய் மறைந்தாள்.

நான் பார்க்கும் போதே அந்த அதிசயம் நடந்தது.

தண்ணீரில் மிதந்து கொண்டிருந்த நாக தண்டம் மீண்டும் பறந்து சங்குண்ணி கைக்கே சென்றது.

கரையில் இருந்து அதைப் பிடித்துக் கொண்டே,"வா மோளே"என்றாள்.

நான் கரைக்கு ஏறியதும்,"நான் முன்னால் போகிறேன்,சீக்கிரம் உடை மாற்றி வா"என்று விரைந்து நடக்க ஆரம்பித்தார்.

நான் உடைகளை மாற்றிக் கொண்டு எல்லோரும் இருந்த இடத்துக்கு செல்லும் போது அவர்கள் ஒரு வித அதிர்ச்சியுடன் என்னைப் பார்த்து கொண்டிருந்தார்கள்.

ரம்யா பாம்பாய் மாறி என்னை கொல்ல முயன்றதையும்,சங்குண்ணி தடுத்து காத்ததையும் சொல்லியிருப்பார் போல.

அவர்கள் என்னை பார்க்க எம்.டி.தேவன் பக்கம் திரும்பினார்.

"லதா நடந்ததை அப்படியே சொல்லட்டும்,ஜஸ்ட் ஷூட்"என்றார்.

நான் சொல்ல தேவன் ஷூட் செய்ய-

அடுத்த வினாடி அது 'லைவ்'விற்கு சென்று விட்டது.

எனக்கு அம்மா பார்ப்பாளே என்று யோசனை வர சங்குண்ணியை பார்த்தேன்.

அவர் மெல்ல என் பக்கத்தில் வந்து "மோளே எனக்கு எல்லாம் தெரியும்,உன்னோட நோக்கம் நிறைவேறும்,நாம் கடைசிக் கட்டத்தை நெருங்கும் போது ரம்யா திரும்பி வருவாள் பார்த்துக் கொள்ளலாம்"என்றார் மிக மெல்லிய குரலில் எனக்கு மட்டும் கேட்கும் குரலில்.

எம்.டி.கொஞ்சம் குழப்பத்தில் இருப்பதை அவர் முகமே சொன்னது.

எல்லோரும் உட்கார்ந்து கொண்டு வந்திருந்த ஃப்ரட்டில் ஜாமைத்தடவி சாப்பிட ஆரம்பித்தோம்.

சிவஞானம்,"இன்னும் நாலு நாள் தான் இந்த ஃப்ரட் கெடாமல் இருக்கும்,அதுக்கப்புறம் டின் உணவுதான்,இன்னும் எவ்வளவு தூரம் போக வேண்டியிருக்கும்?"என்று கேட்டார் சங்குண்ணியைப் பார்த்து.

"இப்பத்தான் ஆரம்பிச்சிருக்கு,சொல்ல முடியாது,காட்டுக்கு இருக்கற ஆன்மா முடிவு பண்ண வேண்டிய விஷயம் அது,நாம தேடிப் போறதை நமக்கு காட்டணுமா வேண்டாமான்னு அதுதான் தீர்மானிக்கும்,எதுவும் நம்ம கையில இல்லை"என்றவர் தேவன் பக்கம் திரும்பினார்.

"ஸ்டாண்ட போட்டு கேமிராவை இங்கே கோணம் பார்த்து வச்சிருக்கே,என்னை ரிகார்ட் ஆகுதுன்னு போய் பார்த்துட்டு வா"என்றார்.

அவர் சொன்னதும் அவன் எழுந்து வேகமாய் கேமிரா வைத்திருந்த இடத்தை நோக்கி ஓடினான்.

நான் அவனையேப் பார்த்து கொண்டிருந்தேன்.

கேமிராவில் பார்த்தவன் 'தடா'ரென்று மயங்கி விழுந்தான்.

சங்குண்ணி சிரித்துக் கொண்டே,அவன் முகத்துல தண்ணி தெளிச்சு எழுப்பிட்டு வா"என்றார் கண்ணனைப் பார்த்து.

கண்ணனும் ஓடிப் போய் தேவன் முகத்தில் தண்ணீர் தெளித்து எழுப்பினான்.

அவன் எழுந்த நின்றான்.

அங்கிருந்தே சங்குண்ணியைப் பார்த்து ஒரு பெரிய கும்பிடு போட்டான்.

"என்னாச்சு?"என்று சங்குண்ணியை கேட்டார்.

"வருவான்,அவனையே கேளுங்கோ?"என்றார்.

எழுந்து வந்தவன் வந்த வேகத்தில் அவர் காலில் விழுந்தான்.

பின் அமைதியாய் தன் இடத்தில் உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்தான்.

அவன் முகம் கொஞ்சம் பீதியாய் தான் இருந்தது.

"என்னாச்சு"

நான் தேவனைப் பார்த்து கேட்டேன்.

"கொஞ்சம் பொறுப்பா,நான் முதல்ல ஆசுவாச படுத்திக்கிறேன்"என்றான்.

சங்குன்ணி,"ரொம்ப ஷாக்காயிட்டியா தேவன்"என்று மீண்டும் சிரித்து கொண்டே கேட்டார்.

"சாமி ஷாக்கா,ஹார்ட் அட்டாக்கே வந்திருக்கும்,இப்பவே உடம்பெல்லாம் நடுங்கிட்டுத்தான் இருக்கு"என்றான்.

அவர்கள் பேசிக் கொண்டது ஏதும் எங்களுக்கு புரியவில்லை.

"என்னாச்சு?"என்றார் மீண்டும் எம்.டி.
சங்குண்ணியைப் பார்த்து

"அவனையே கேளுங்கோ சொல்வான்"என்றார் அவர்.

நாங்கள் அவனேயே பார்த்தோம்.

## அத்தியாயம் முப்பத்தியொன்று

தேவன் பயக்குரலோடு,"நான் சுவாமியயையும் சேர்த்துதான் ஷூட் பண்ணேன்,ஆனா அதுல அவர் விழவேயில்லை,ஆனா இங்கே நம்ம முன்னாடி குண்டு கல்லா நிக்கிறார்"என்றான்.

சங்குண்ணி சிரித்துக் கொண்டே,"நான் ஏற்கனவே சொல்லியாச்சு,என்னை ஷூட் பண்ணக் கூடாதுன்னு,நீ கேட்கலை,அப்படித்தான் நான் கேமிராவுக்குள்ளேல்லாம் சிக்க மாட்டேன்"என்றார்.

எம்.டி.சிரித்தார்.

"அவர்தான் முதல்லேயே சொன்னாரு இல்லே,இப்ப பாரு ,சரி சரி சீக்கிரம் சாப்பிடு,நாம் இங்கிருந்து நகரணும்"என்றார்.

தேவன் அவசரம் அவசரமாக ஃப்ரட்டில் ஜாமைத் தடவி சாப்பிட ஆரம்பித்தான்.

நானும் சாப்பிட்டு முடித்திருந்தேன்.

மனம் அமைதியாய இருந்தாலும் ஓடையில் நடந்தது இன்னமும் மனதில் ஒரு திகிலாகவே இருந்தது.

என்னைப் பார்த்த சங்குண்ணி,"நடந்ததையெல்லாம் மனசுல போட்டு குழப்பிக்காதே,உனக்கு ஜெயமே நிச்சயம்"என்றார்.

நாங்கள் எல்லோரும் சாப்பிட்டு ஷோல்டர் பேக்கை மாட்டிக் கொண்டு கிளம்பும் போது மெல்ல தூறல் போட ஆரம்பித்தது.

ஒரு நிமிடம் மேலே பார்த்த சங்குண்ணி,"பெரிய மழை வராது நடந்துட்டே இருப்போம்"என்றார்.

பகல் தான் என்றாலும் அடர்ந்த காடு என்பதால் கொஞ்சம் இருட்டாய்தான் தெரிந்தது.

மெல்ல முன்னேறினோம்.

எங்களுக்கு முன்னால் சங்குண்ணியின் பக்கத்தில் ராம்பிரசாத் நடந்து கொண்டிருந்தார்.

இருவரும் பேசிக் கொண்டே நடந்தார்கள்.

அவர்கள் பேசுவது என் காதுகளில் விழ ஆரம்பித்தது.

"போன வருஷம் மார்ச்ல்லதான் நான் ரம்யாவை சந்திச்சேன்,என்னோட மலேசிய நண்பர் மூலமா இங்கே இந்தியாவில அறிமுகம் ஆனாங்க,அவங்களைப் பத்தி வெப்சைட்டுல வந்ததை அவங்களோட லேப் டாப்ல்ல பார்த்து தெரிஞ்சுகிட்டேன்,அப்பத்தான் ஐ.ஜி.இந்த சேனல் எம்.டி.கூட போக ரெகமெண்ட் பண்ணாரு"

நான் நடந்து முன்னால் சென்றேன்.

"அது கூட அவங்க டெமோக்கு ரெடிபண்ண சைட் டா இருக்கும்,ரெடி பண்ணி வச்சிருந்த சைட் பக்கங்களை நீங்க பார்த்து ஏமாந்துட்டீங்க போல"என்றார்.

மறு கணம் என்னைப் பார்த்தார் சங்குண்ணி.

அதற்கான அர்த்தம் எனக்குப் புரிந்தது.

"யார் அவ ஏன் நம்ம லதாவை கொல்லப் பார்க்கணும்?"என்று கேட்டார் எங்களுக்கு அருகில் வந்த எம்.டி.

"அதுதான் தெரியலை,ஒரு வேளை அந்த குறிப்பிட்ட இடத்துக்கு நாம போனதும் ஒன்றரை லட்சம் கோடி மதிப்புள்ள வைரக்கல்லை தட்டிட்டு போக முயற்சி பண்ணி நம்ம கூட வந்திருக்கலாம்,முதலிலேயே லதாவை அப்புறப் படுத்திட்டா தான் ஈசியா செயல் படலாம்ன்னு நினைச்சிருப்பா,நம்ப கூட வந்தது ரம்யா இல்லே,அது பாதாள லோகத்தை சேர்ந்தை வகை பாம்பு,அது அந்த வைரத்தை பறிச்சு பாதாள லோகத்துக்கு கொண்டு போக வந்த கடல் நாக வம்சம்"என்றார்.

எனக்கு 'திக்'கென்றிருந்தது.

சங்குண்ணி அத்தனை விஷயத்தையும் எனக்கே சொன்னது போல் இருந்தது.

நான் யார் என்று உங்களுக்கும் போக போக புரியும்.

எங்களுக்கு முன்னால் பாதையை கடந்தது மெல்ல நடந்து ஒரு புலி.

முன்னால் சென்று கொண்டிருந்த சங்குண்ணி நின்றார்.

நாங்களும் அவர் பின்னாலேயே நின்றோம்.

அது ஒரு முறை அவரைப் பார்த்தது.

பின் வேகமாய் கடந்த வேகத்தில் புதரின் உள் ஓடியது.

எனக்கு சங்குண்ணியின் மீது மிகுந்த மரியாதை ஏற்பட்டது.

ஏதோ ஒரு காரணத்துக்காகத்தான் அவர் எங்களுடன் வர சம்மதித்திருக்கிறார் என்று உணர்ந்தேன்.

நாங்கள் நகர முயல அவர் மீண்டும் தடுத்தார்.

கொஞ்ச நேரத்தில் அவர் தடுத்ததற்கான காரணம் புரிந்தது.
முதல் புலி வந்த பாதையிலேயே வந்த இன்னொரு புலி வேகமாய் அதே இடம் நோக்கி ஓடியது.
"வாருங்கள்"என்று முன்னால் செல்லத் தொடங்கினார்.
மெல்லியதாய் ஊசி போல் மழை நீர் எங்கள் மேல் விழுந்து கொண்டிருந்தது.
அது ஒரு வித சுகமாக இருந்தது.
எவ்வளவு தூரம் நடந்திருப்போம் என்று தெரியாது.

நடந்து கொண்டேயிருந்தோம்.

காட்டு வண்டுகளின் ரீங்காரம் இசையாக காதுகளில் நுழைந்தது/

'சட்'டென்று நின்றார் சங்குண்ணி.

எங்களுக்கு முன்னால் நாக தண்டத்தை நீட்டி தடுத்தார்.

கொஞ்ச நேரத்தில் வானிலிருந்து அந்த சப்தம் கேட்டது.

'டுபுடுபு'வென.

வினாடிகள் நகர நகர தட தட வேகத்தில் எங்கள் மேலே அந்த ஹெலிகாப்டரைப் பார்த்தோம்.

அது ராணுவம் ஹெலிகாப்டர் போல தெரியவில்லை.

மரங்களின் இடுக்குகள் வழியே பார்த்தோம்.

அந்த ஹெலிகாப்டர் அப்படியே அந்தரத்தில் நிற்க அதிலிருந்து ஒரு கயிறு தொங்கியது.

முதலில் ஒருவர்,அடுத்து இன்னொருவர்.

அவர்கள் யார் என்று யோசிக்கும் முன்பே சங்குண்ணி சிரித்துக் கொண்டே சொன்னார்.

"அவர்கள் ஜெர்மனியை சேர்ந்தவர்கள்,நாம் சர்ப்பக் காவை அடைந்தவுடன் நம்மை பணயம் வைத்து அந்த வைரக் கல்லை கவர்ந்து செல்ல வருகிறார்கள்,நம் தொலைக்காட்சி தொடரைப் பார்த்திருப்பார்கள்,அவர்களுக்கு பின்னால் உதவ உள்ளூர் தொழிலதிபர் தனியார் ஹெலிகாப்டரை ஏற்பாடு செய்துள்ளார்,ஏற்கனவே காடுகளில் பழக்கப் பட்டவர்கள்"என்றார்.

எம்.டி.,"அவர்களால் நமக்கு தொந்தரவு வருமா?"என்று கேட்டார்.

"நிச்சயம் வரும்,ஆனால் அவர்களின் விதி இங்கேயே முடியப் போகிறது என்பது அவர்களுக்கே தெரியாது"என்றார் சங்குண்ணி.

அவர் அப்படி சொன்னதும் எங்கள் எல்லோருக்கும் அதிர்ச்சி ஏற்பட்டது.

உடனே தேவன்,"எங்களில் யாருக்காவது உயிருக்கு சேதம் இருக்கிறதா சுவாமி"என்று கலங்கிய குரலுடன் கேட்டான்.

அவர் சிரித்துக் கொண்டே,"உங்களுக்கு துணையாக நான் இருக்கிறேன்,ஆனால் அவர்களுக்கு இங்குதான் மரணம்"என்றார்.

தொடர்ந்து,"அவர்களுக்கு துணை போக நினைக்கறவர்களுக்கும் மரணம் நிச்சயம்"என்றார்.

நாங்கள் அதிர்ச்சியுடன் அவரைப் பார்த்தோம்.

அவர் சிரித்தார்.

"ஏன் இந்த திகைப்பு யார் மனதில் என்ன ஓடுகிறது என்று யாருக்குத் தெரியும்,இலக்கை அடைந்து கைக்கு வந்ததும் கூட மனம் மாறலாம்,அந்த நேரத்தில்

அவர்கள் விதியின் கோரப் பிடியில் இருந்து தப்பிக்க முடியாது,நானும் தடுக்க முடியாது"என்றார்.

அவர் சொன்னதில் எனக்கு ஆச்சர்யம் ஏற்படவில்லை.

வரிசையாய் பார்த்து கொண்டே வருகிறேனே,ரம்யா வரை யோசித்த படியே பக்கவாட்டில் பார்த்துக் கொண்டே நடந்தேன்.

பல மரங்களைத் தாண்டி அவர் நடந்து கொண்டிருந்தார்.

ஆரம்பத்திலிருந்தே எங்களைத் தொடர்ந்த முதியவர்.

திடுக்கிடலுடன்,"சுவாமி அங்கே பாருங்கள்,முன்னால் உங்களிடம் நான் சொன்ன பெரியவர் அங்கே செல்கிறார்"என்றேன்.

எல்லோரும் நின்று விட்டார்கள்.

சங்குண்ணியும் பார்த்தார்.

நாங்கள் பார்த்த மாத்திரத்தில் அவர் காற்றில் கற்பூரம் கரைவது போல் கரைந்து போனார்.

"ஓ அவனா,அவன் இந்த கானகத்தில் வசிக்கும் சித்தன்,அவன் வயதே நூறுக்கு மேல்,இந்த காட்டைப் பற்றி அதிகம் அறிந்தவன்,ககண மார்க்கத்தில் வல்லவன்,அவன் நீங்கள் வரப் போகிறீர்கள் என்று முன் கூட்டி அறிந்தே உங்களை பார்க்க வந்திருப்பான்,அவனால் நமக்கு நன்மையே தவிற தீமை விளையாது"

"ககண மார்க்கமா அப்படியென்றால்?"

"பஞ்சப்பூதத்தினால் ஆன உடம்பை சக்தியானல் பிரித்து நினைத்த இடத்திற்கு சென்று அங்கே மீண்டும் வடிவெடுப்பதுதான் ககண மார்க்கம்,ஆசைகள் உள்ளவர்களுக்கு அந்த மார்க்கம் கிட்டாது"என்றார்.

"அட உங்களுக்கு தெரியுமா?"தேவன் கேட்டதுதான் தாமதம்.

அவர் மறைந்தார்.

எங்களுக்கு முன்னால் இருபது அடி தள்ளி நின்று கொண்டிருந்தார்.

எங்கள் அனைவருக்கு அதிர்ச்சி.

சசிதரண் முகத்தில் ஒரு சந்தோஷம்.

'பார்த்தீங்களா,நான் கொண்டு வந்த குருஜி எப்படி?'என்பது போல் இருந்தது அவர் பார்வை.

நாங்கள் அவரை நோக்கி விரைந்தோம்.

அப்பொழுது-

அத்தியாயம் முப்பத்தியிரண்டு

பின் பக்கம் ஏதோ மெல்லிய கர்ஜனையுடன் நடந்து வரும் சப்தம்.
நான் பயத்துடன் திரும்பிப் பார்த்தேன்.
மற்றவர்களுக்கும் அந்த பயம் தோன்றியிருக்க வேண்டும்.
எல்லோருமே திரும்பிப் பார்த்தார்கள்.
யாரும் இல்லை.
எங்களை கடந்து ஏதோ சென்றது போலிருந்தது.
நாங்கள் பயத்துடன் குருஜி அவர்கள் சென்றார்.
"பயப்பட ஒன்றும் இல்லை,இது வேட்டையாடி கொல்லப் பட்ட புலி,புலியை கொன்றவர்கள் தோலை மட்டும் எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள்,மனிதர்களை போலவே இயற்கையாக மரணம் அடையாமல் இறந்த புலியின் ஆன்மா இங்கே அலைகிறது,அது நம்மை ஒன்றும் செய்ய

இயலாது,பயம் உள்ளவர்கள் ஓடி எங்காவது பாதாளத்தில் விழுந்தால் தான் உண்டு"என்றார்.

"நான் சொல்றது அத்தனையும் சத்தியம்,இப்ப நாம போற சர்ப்பக் காவுல கூட இறந்து போன பாம்புகள்,அதுவும் பறக்கும் பாம்புகளோட ஆன்மா சுத்திட்டு மேலே குறுக்கும் நெடுக்கும் பறந்துட்டு இருக்கும்,நம்ம மேலே ஏதோ உரசிட்டு போறாப் போல கூட தோணும்,அதை மூளைக்கு கொண்டு போகாம நாம அதை தாண்டி போயிட்டே இருக்கணும்"என்றார்.

திடீர் என்று வானம் இன்னமும் இருட்டியது.

'படபட' மழை கொட்ட ஆரம்பித்தது.

ஒருவர் முகம் மற்றவருக்கு தெரியாதவாறு இருள் சூழ்ந்ததது.

குருஜி எங்களை ஓரிடத்தில் ஒதுங்கி நிற்க வைத்தார்.

பின் புறம் வகையறியா பெரிய மரம்.

தலை மீது கொண்டு வந்திருந்த 'லெதர் கேப்'அணிந்து கொண்டோம்.

நாங்கள் நின்று கொண்டிருந்த இடம் நீரோட்டம் உள்ள பகுதி போல.

கொட்டிய மழை எங்கள் கால் வழியே கீழே ஓடத் தொடங்கியது.

அப்படியென்றால் ஏற்றத்தில் இருக்கிறோம்.

எங்கள் முன்னால் நின்றிருந்த குருஜி திரும்புவது ஒரு மின்னல் வெட்டியதில் தெரிந்தது.

"இந்த ஏற்றம் ஏறி இறங்கினா,மதி கெட்டான் காடு,இந்தியாவில ரெண்டு மூணு இடத்துல இருக்கற மதி கெட்டான் காடுல இது ஒண்ணு,உள்ளே புகுந்து அடுத்த மலைக்குப் போகணும்,யாரும் தனியா பிரிஞ்சுடாதீங்க,எந்த அடையாளம் அங்கே செல்லாது,ஒரு ஆழ்ந்த தியான நிலைக்கு அந்த அடர்த்தியான மரங்கள் நம்பளை கொண்டு போகும்,அதையும் மீறி ஸ்மரனையோட நாம ஒரு தொடர் வண்டி போல ஒருத்தர் பின்னாடி ஒருத்தர் கையை பிடிச்சுட்டு நடக்கணும்,என்ன நடந்தாலும் கையை விட்டுட கூடாது,நான் உங்க கூட இருக்கேன்,எந்த பயமும் வேண்டாம்"என்றார்.

மழை நின்ற பாடில்லை.

"இப்போது நிக்கிறா மாதிரி தெரியலை,நாம மெல்ல நடக்க ஆரம்பிப்போம்,மெல்ல மேலே ஏறுங்க,காலை நல்லா அழுத்தி தரையில் வைக்கணும்,முழு காலும் தரையில் பதிய மாதிரி ஒவ்வொரு அடியா வச்சு போங்க,நான் பின்னாடியே தொடர்ந்து வர்றேன்"என்றார்.

நாங்கள் அந்த மழையிலும் நடக்க ஆரம்பித்தான்.

தேவன் தான் கேமிரா பாரத்தை லெதர் ஜாக்கெட் மூடி நடந்து கொண்டிருந்தான்..

பெரிய மின்னல் ஒன்று வெட்டியது.

முன்னால் குருஜி முதலில் சென்று கொண்டிருந்தார்.

பின்னாலும் அவர் எங்களைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்தார்.

என் கண்ணுக்கு மட்டும் தான் அப்படி தெரிகிறதா,இல்லை பிரமையா என்று எனக்கு புரியாமல் குழப்பத்துடன் நடையைத் தொடர்ந்தேன்.

திடீர் என்று முன்னால் சென்று கொண்டிருந்த குருஜி நின்றார்.

எல்லோரும் நின்றார்.

மெல்லிய குரலில்,"அசையாமல் அப்படியே நில்லுங்கள்,வலது பக்கம் ஆறு யானைகள் கூட்டமாக குட்டிகளுடன் நின்று கொண்டிருக்கின்றன.மழை நிற்க காத்திருக்கின்றன.மழை நின்றதும் அவை கீழ் திசை நோக்கி நடக்கும்,அதன் பின் நாம் தொடரலாம்,யாரும் துளியும் அசைய வேண்டா?"

சிவஞானம்,"அடுத்த மின்னலில் அவை நம்மை பார்த்து விட்டால்"என்று கொஞ்சம் பயம் கலந்த குரலில் கேட்டார்.

"பயம் வேண்டாம்,நம்மை சுற்றி ஒரு மூடு திரை ஏற்பாடு செய்துள்ளேன்.அவற்றின் கண்ணில் நாம் பட மாட்டோம்,ஆனால் கொஞ்சம் தரை அதிர்ந்தாலும் நாம் இருக்கும் திசைக்கு அவை திரும்பி விடும்,அதனால் ஆடாமல் அசையாமல் அப்படியே நில்லுங்கள்'என்றார்.

விஞ்ஞானம் வளர்ந்து விட்ட நாளில் இது போன்ற வித்தைகளை ஒரு குருஜி செய்து கொண்டிருப்பது எல்லோருக்குமே ஆச்சர்யத்தை தந்து கொண்டிருக்கும் என்று மட்டும் என்னால் உணர முடிந்தது.

அரை மணி நேரம் அசையாமல் நின்றிருப்போம்.

மழை மெல்ல குறைய ஆரம்பித்தது.

எனக்கு கால்கள் நடுங்க ஆரம்பித்தன.

எனது காதுகள் வலது பக்கம் என்ன ஓசை வருகிறது என்பதை கேட்பதில் கவனமாய் இருந்தது.

இலைகள் அசைய ஆரம்பித்தன.

அவை கீழ் நோக்கி நடக்க ஆரம்பித்தன.

சப்தம் நன்றாகவே கேட்டது.

ஒரு குட்டி யானை பிளிறியது காதுகளில் வந்து விழுந்தது.

அவை இறங்கி விட்டன.

மழை சுத்தமாய் நின்று விட்டது.

நேரம் என்னவென்று கண்டு பிடிக்க முடியாத இருட்டு.

மெல்ல முன்னேற ஆரம்பித்தோம்.

ஒரு ஏற்றம் வந்தது.

வேர்களைப் பிடித்துக் கொண்டு ஏற வேண்டியிருந்தது.

கொஞ்சம் தவறினால் மீண்டும் கீழே போய் விடுவோம்.

முக்கி முனகி ஏறி சம தளத்துக்கு வந்தோம்.

லேசாய் வானம் தெரிந்தது.

இருட்டி விட்டிருந்தது.

இவ்வளவு நேரமா கடந்து விட்டது.

"இங்கே தங்க வேண்டியதுதான்"என்றார் குருஜி.

அனைவரும் தோள் பார லெதர் பேக்கை முதலில் இறக்கினோம்.

கண்ணன் அவன் பையில் இருந்து பேட்டரியில் இயங்கும் சிறிய தொங்கு விளக்கை எடுத்தான்.

அதன் ஸ்விட்சைத் தட்ட கொஞ்சம் வெளிச்சம் நாலா புறமும் பரவியது.

குருஜி சுற்றிலும் பார்வையை விட்டார்.

எந்த சலனமும் இல்லை.

ஒரு வித அமைதி இருந்தது.
ஆனால் அந்த அமைதிக்குப் பின்னால் ஏதோ ஒரு விபரீதம் இருப்பது போல் எனக்கு தோன்றியது.
கொஞ்சம் தள்ளி ஒரு ஐம்பது தூரத்தில் நூறுக்கும் மேற்பட்ட நெருப்புக் கண்கள்.
நாங்கள் அரண்டே போனோம்.
குருஜி மிக அமைதியாக இருந்தார்.
பின் மெல்ல,"ரொம்ப நேரமாக நம்மை தொடர்ந்து வருகின்றன,அதனால் தான் நான் பின்னால் வந்தேன், இந்த செந்நாய்கள்"என்றவர் அவை நின்ற பக்கம் பார்த்து கண்களை மூடி மந்திரங்களை முணுமுணுத்தார்.
பின் அவரின் கையில் இருந்த நாக தண்டத்தை ஒரு உக்ர வேகத்தோடு அவற்றை நோக்கி வீசினார்.
அது பெரிய நெருப்பு கோளமாக மாறி அவற்றை நோக்கிப் போனது.
சிறிது நேரம் தான் என்ன நடந்தது என்று தெரியவில்லை.
பெரிய ஊளையிடல் சப்தத்துடன் அவை கத்தின.
நின்றிருந்த அத்தனையும் சுருண்டு விழுந்தன.
மீண்டும் தண்டம் அவர் கைக்கு திரும்பி வந்தது.
அதன் மீது ரத்த வாடை வீசியது.
ஒரு நிமிடம் தான்.
அதன் மீது தனது சுண்டு விரலால் தடவினார்.
கொஞ்ச நேரத்தில் நாக தண்டம் முதலில் எப்படியிருந்ததோ அப்படியே மாறியது.
எங்களைப் பார்த்து சிரித்தார்.
"எல்லாம் சேர்ந்து உங்க மேலே பாய்ஞ்சா பத்து நிமிஷத்துல கதம் கதம்"என்றார்.
கண்ணன் கண்கள் திகிலடைந்தன.
"எத்தனை பேர் சர்ப்பக் காவு வரைக்கும் போய் சேர்வோம் குருஜி"-இப்படி கேட்டது சசிதரண்.
"என்ன சந்தேகம் சசி,எல்லோரும் இங்க இருக்கற எல்லோரும் போய் சேர்வோம்,எத்தனை பேர் திரும்பி வரோம்ங்கறதுல தான் விதி ஊசலாடுது"என்றார்.

அத்தனை பேருக்கும் ஒரு திடுக்கிடலும் பயமும் ஒரு சேர எழுந்தது.

அத்தியாயம் முப்பத்தி மூன்று

"என்ன குருஜி என்ன சொல்றீங்க?'

"என்ன இருக்கோ அதை சொல்றேன்,அதுக்காக பயப்பட வேண்டாம்,நடக்க வேண்டியது நடந்தே தீரும்,எல்லோரோட மனசுலயும் என்ன எண்ணம் ஓடுதுன்னு எனக்குப் புரியவில்லை,அவரவர் வினைப் படி நடக்கும்,நான் துணையிருக்கற வரைக்கும் நம்ப நோக்கத்தோட ஒட்டி வரவங்களுக்கு ஒரு சோதனையும் வராது"

"அப்படின்னா என்ன அர்த்தம் குருஜி,இந்த டீம்ல்ல மாற்றுச் சிந்தனை உள்ளவங்க இருக்காங்கன்னு சொல்றீங்களா?"எம்.டி.கேட்டார்.

அவர் குரலில் ஏதோ ஒரு வித பயம் கலந்திருந்தது எனக்குப் புரிந்தது.

"நல்ல எண்ணம் இருந்தால் எல்லாம் நல்ல படியாக நடக்கும்,நம்முடைய எல்லைகளை நாம் உணர வேண்டும்,தேவன் இப்பொழுது நாம் பேசுவதை அப்படியே எடு,அந்த செந்நாய்கள் எரிந்து ஓடுவதை நீ எடுத்தது எனக்கு தெரியும்,இப்பொழுது இந்த உரையாடலை அப்படியே எடு,இதையும் ஒளிபரப்புக்கு விடிந்ததும் அனுப்பு,என் குரல் மட்டும் பதிவாகும்,நான் இருக்கும் இடத்தில் வெற்று பனிப்படலம் மட்டும் தோன்றும்"என்றார்.

தேவன் கொஞ்சம் தள்ளி நின்று மினி ஸ்டாண்ட் போட்டு நாங்கள் பேசுவதை எடுக்க ஆரம்பித்தான்.

குருஜி மீண்டும் எம்.டி.பக்கம் திரும்பினார்.

"பணம் என்பது மட்டும் குறிக்கோள் என்று வாழ்பவர்கள் வாழ்க்கை எப்படி முடிகிறது என்பதையும்,இறப்பிற்கு பின் அவர்கள் நாயாக நரியாக பரியாக எப்படி எல்லாம் மாறி அவஸ்த்தை படுகிறார்கள் என்பதை நான் அறிவேன்,பணம் மட்டும் வாழ்க்கையாக கூடாது"

"இதை ஏன் இப்போ சொல்றீங்க குருஜி?"

"ஒருத்தர் மனசுல என்ன எண்ண ஓட்டம் ஓடுதுன்னு எனக்கு படிக்க முடியும்,விடிஞ்சதும் மதி கெட்டான் உள்ளே நுழைஞ்சுடுவோம்,மனசுல மாற்று கருத்து இருக்கறவங்க இப்படியே இங்கேயே தங்கிடலாம்,மேலே பாருங்க"என்றார்.

நாங்கள் மேலே பார்த்தோம்.

அந்த நெடுந்துயர்ந்து,இருந்த மரத்தின் மேலே ஒரு சிறிய மர வீடு இருந்தது.

நாங்கள் அசந்து போனோம்.

"இங்கே இது இருப்பது அதிசயமாய் இருக்கிறது."

"இது வனத்துறையினர் கட்டி வைத்தது.மேலே தொலை நோக்கி கூட இருக்கிறது,நீங்கள் எல்லோரும் கையெழுத்து போட்டு கொடுத்தீர்களே ஆளுக்கொரு பத்திரம்,அதன் எல்லை இதோடு முடிகிறது,இனிமேல் மேலே சல்வதும் திரும்புவதும் அவரவர் கையில் தான் இருக்கிறது,நான் துணை வருகிறேன் என்கிற நம்பிக்கை உள்ளவர்கள் மட்டும் தொடரலாம்,மனதில் பயம் இருப்பவர் இரண்டாம் சிந்தனை உள்ளவர்கள் மர வீட்டில் ஏறி படுத்துக் கொள்ளலாம்,திரும்பி வரும் போது சேர்ந்து கொள்ளலாம்' என்றார்.

"எல்லோர் சார்பிலும் சொல்கிறேன்,எல்லாவற்றையும் தீர பேசிவிட்டு தான் இதை எடுக்கவே நான் சம்மதித்து இவர்களோடு வந்தேன்,எனக்கு பயம் என்றால் படப்பிடிப்பு குழுவினரை மட்டும் அனுப்பி விட்டு அங்கேயே இருந்திருப்பேன்,என்ன நடந்தாலும் இந்த குழுவில் இருந்து யாரும் தனித்து எங்கும் தங்கப் போவதில்லை,என்ன நான் சொல்வது சரிதானே?"என்று எங்களைப் பார்த்து கேட்டார் எம்.டி.

நாங்களும்,"ஆமாம்"என்றோம்.

"அப்ப சரி பசிப்பவர்கள் சாப்பிடுங்கள்,பசிக்காதவர்கள் அப்படியே கண்ணை மூடி எந்த வித பயமும் இல்லாமல் தூங்குங்கள்"என்றார்.

"நமக்குப் பின்னால் இரண்டு பேர் தொடர்ந்து வருகிறார்கள்,அவர்கள் நோக்கம் நம்மை பின் தொடர்ந்து வந்து நாம் சர்ப்பக்காவை எட்டியதும்

நம்மை தீர்த்து விட்டு அந்த வைரக்கல்லை கொண்டு செல்வது"என்று சொல்லி நிறுத்தினார்.

எம்.டி.யின் முகம் மாறியது.

சசிதரணும் கலவரம் ஆனார்.

குருஜி தொடர்ந்தார்.

"அதில் ஒருவர் தமிழர்,இன்னொருவர் ஜெர்மானியர்,இருவராலும் நமக்கு எந்த ஆபத்தும் எல்லை,மதிகெட்டான் கானகத்தினுள் அவர்கள் சிக்கிக் கொள்வார்கள்,அப்படியே மீறி வந்தாலும் அவர்கள் இந்த நாக தண்டத்திடம் இருந்து தப்ப முடியாது"என்றார்.

எல்லோரும் அமைதியானோம்.

ஒரு கலவரமான விஷயத்தை சொல்லி விட்டு தைரியமும் கொடுத்த குருஜியை பார்த்தவாறு இருந்தேன்.

மனிதனின் ஆசைகள் எல்லையற்றது.

எம்.டி.யையும் சிவஞானத்தையும் மாறி மாறி பார்த்துக் கொண்டிருந்தார் குருஜி.

இருவரின் மன ஓட்டமும் என்ன என்று அறிந்து கொள்ளும் ஆர்வம் எனக்கு ஏற்ப்பட்டது.

என்னை 'சட்'டென திரும்பிப் பார்த்தார்.

"எந்த நேரத்தில் எது நடக்க வேண்டுமோ அது நடக்கும்,யாரும் தடுக்க முடியாது,உன்னுடைய மனதில் உள்ளது அப்படியே நிறைவேறும்,வேறென்ன வேண்டும் உனக்கு"என்று தன்னுடைய வலது கரத்தை எனது தலையில் வைத்து அழுத்தினார்.

'சுர்'ரென்று உள்ளே ஏதோ இறங்கியது போலிருந்தது.

நான் என்ன எண்ணத்தில் உள்ளேன்.

அவர் என்ன சொல்ல வருகிறார் என்பது எல்லாம் அவருக்கும் எனக்கும் மட்டுமே புரிந்தது.

நான் கண்களை மூடி தியானித்தேன் சில நொடிகள்.

அவர் கரத்தினை எடுத்து விட்டார்.

நான் சுய நிலைக்கு திரும்பினேன்.

நான் கண்களைத் திறந்ததும் எல்லோரும் என்னையே பார்த்து கொண்டிருப்பது தெரிந்தது.

என்னைப் பற்றி அவர்கள் என்ன சிந்தித்து கொண்டிருப்பார்கள் என்பது எனக்கு புரிந்தது.

எப்படியும் இந்த சீரியல் செம ஓட்டம் ஓடப்போகிறது.

முடிவில் என்ன நடக்கப் போகிறது என்பது எனக்குத் தானே தெரியும்.

நான் அப்படி நினைத்த போது கூட குருஜி என்னைப் பார்த்து மெல்லிய புன்னகையை வீசினார்.

நான் ஒன்றும் சொல்லவில்லை.

குருஜி என்கிற சங்குண்ணி டின்னில் இருந்து ஆர்வமாய் உணவினை எடுத்து தின்று கொண்டிருந்த கண்ணனைப் பார்த்தார்.

"கண்ணன் இங்கே மொத்தம் எத்தனை பேர் இருக்கிறோம் என்பதை சொல்"என்றார்.

அவன் உடனே டின்னை வைத்து விட்டு உங்களையும் சேர்த்துதானே குருஜி"என்றான்.

அவர் சிரித்துக் கொண்டே,"ஆமாம் என்னையும் சேர்த்து தான்"என்றார்.

"நீங்க ஒண்ணு,புவனேஸ்வரி இரண்டு,நான் நாலு,எம்.டி.அஞ்சு,சிவஞானம் சார் ஆறு,சசி சார் ஏழு,தேவன் எட்டு,மகேஷ் ஒன்பது"என்று நிறுத்தினான்.

"சரி"என்றார் குருஜி.

கண்ணன் சாப்பிட்டு முடித்து விட்டு மெல்ல எழுந்தான்.

டெண்ட் ஒன்றை தேவனுடன் சேர்த்துப் போட்டான்.

குருஜி பக்கத்தில் இருந்த மரத்தின் வேரில் மடியில் நாக தண்டத்தை வைத்துப் பிடித்தபடியே இருந்தார்.

நான் டெண்ட் அடித்து முடித்ததுமே உள்ளே பாயாத குறையாக நுழைந்து ஒரு ஓரத்தில் என் தோள் பையிலிருந்து விரிப்பை எடுத்து விரித்துப் படுத்தேன்.

உள்ளே எனக்குப் பின்னால் நுழைந்த புவனேஸ்வரி எனக்குப் பக்கத்தில் படுத்துக் கொண்டாள்.

காட்டின் உள்ளே நுழைந்ததில் இருந்தே அவள் ரொம்பவும் பேசவில்லை.

அலுவலகத்திலேயே அப்படித்தான்.

அவள் தொகுத்து வழங்கும் நிகழ்ச்சியின் போது பேசுவாள்.

மற்ற நேரத்தில் எல்லாம் பேசா மடந்தை அவள்.

அவள் என்னிடம்,"எனக்கு முதல்ல பயமாத்தான் இருந்தது,ஆனா இந்த குருஜி சங்குண்ணி நம்மை கூட இருக்கறதும்,அவர் செயல்களும் எனக்கு பயங்கர தைரியத்தை உருவாக்கிடுச்சு"என்றாள்.

"ஆமாம் எனக்கும் தான்"என்றேன்.

"அடிக்கடி உன்னைப் பார்த்தே அவர் பேசறாரே,உனக்கு அவரை முன்னாலேயே தெரியுமா?"என்றாள் திடீரென்று.

"தெரியாது"

"இல்ல உங்க ரெண்டு பேருக்குள்ளேயும் ஏதோ ஒரு பிணைப்பு இருக்குன்னு எனக்கு தோணுது"என்றாள் என் பக்கம் ஒருக்களித்துப் படுத்த படி.

"நான் இந்த ஐடியா கொடுத்தேன்,அதனால எங்கிட எக்ஸ்ட்ரா அட்டென்ஷன் கொடுக்கறாரோன்னு நினைக்கறேன்"என்றேன்.

"எனக்குத்தான் வித்தியாசமா தோணுதோ என்னமோ,நான் தூங்கறேன்,ரொம்ப டயர்டா இருக்கு"என்று கண்களை மூடிக்கொண்டாள்.

நானும் அயர்ச்சியில் கண்களை மூடிக் கொண்டதுமே உறக்கம் இழுத்தது.

எங்கிருந்தோ ஒரு மனித அலறல் என்னை திடுக்கிட்டு எழ வைத்தது.

புவனேஸ்வரியும் எழுந்து என்னை ஒட்டிக்கொண்டு அமர்ந்திருந்தாள்.

"யாருடைய குரல் அது?"

அத்தியாயம் முப்பத்தி நாலு

குருஜி அந்த திசையில் பார்த்தார்.

பின் தேவனைப் பார்த்து,"என்னுடன் வா"என்று கூறி விட்டு வேகமாய் நடந்தார்.

அவர் நடந்ததே தரையில் ஒரு அரை அடி விட்டு பறப்பது போல் மனதுக்கு தோன்றியது.

அவர் பின்னால் வேகமாய ஓடினான் தேவன்.

கண்ணன் கேமிராவை தூக்கி கொண்டு பின்னால் விரைந்தான்.

அவர்கள் போன பின் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தனர்.

நான் குருஜி சென்ற திசையையே பார்த்து கொண்டிருந்தான்.

கொஞ்ச நேரத்தில் ஜெர்மனி காரரை தாங்கிப் பிடித்து கொண்டு கண்ணனும் தேவனும் முன்னால் வந்தார்கள்.

பின்னால் நாக தண்டத்தை தூக்கிப் பிடித்த படி வந்து கொண்டிருந்தார்.

எங்களுக்கு ஆச்சர்யம்.

"ஹெலிகாப்டரில் வந்து இறங்கிய ஜெர்மனி ஆசாமியா?"-என்று குருஜியிடம் கேட்டேன்.

அவர் மெல்ல சிரித்தார்.

ஜெர்மனி ஆசாமி எங்களைப் பார்த்து,"என் பெயர் பிட்ச்னர்,நானும் நீங்கள் போகும் இடத்தினை நோக்கி தான் போக வந்தேன்,இந்த காட்டை அதிகம் அறிந்தவர் ஒருவரும் என்னுடன் வந்தார்,கொஞ்ச நேரம் முன்னால் அவரை நாங்கள் சற்றும் எதிர்ப்பார்க்காத வகையில் புலி தாக்கியது,நான் சுதாரித்து கொண்டேன்,அவரை புலி அடித்து இழுத்து சென்று விட்டது,நான் அதிர்ந்து போய் நின்ற போது குருஜி என்னை காப்பாற்ற வந்து விட்டார்"என்றார் சுத்த தமிழில்.

எல்லோரும் அவரை ஆர்வத்துடன் பார்த்தார்கள்.

"எனக்கு தமிழ் நன்றாக தெரியும்,இந்த சர்ப்பக் காவு பற்றி நானும் பதினேழு வருடம் ஆராய்ச்சி செய்து வருகிறேன்,மேலும் உங்களது பயணம் பற்றிய விவரத்தையும் உங்கள் தொலைக்காட்சியின் நேரலை மூலம் அறிந்தேன்,உடனே கிளம்பி விட்டேன்"என்றார்.

ஆனால் என் மனதில் அவரைப் பற்றிய நேர்மறை எண்ணங்கள் எதுவும் தோன்றவில்லை.

நான் குருஜியைப் பார்த்தேன்.

அவர்,"எல்லாம் நான் பார்த்து கொள்கிறேன்,யாரும் எதைப் பற்றியும் கவலைப் பட வேண்டாம்"என்றார்.

அவர் சொன்னதில் எல்லாம் என்னுடைய மனதில் தோன்றிய சந்தேகத்திற்கும் தான் என்பதும் புரிந்தது.

கொஞ்ச நேரம் முன்புதான் 'நம்மை தொடர்ந்து இரண்டு பேர் வருகிறார்கள்"என்று சொன்ன குருஜி அதில் ஒருவரை இப்பொழுது காப்பாற்றி எங்களுடனே சேர்த்து விட்டது நல்லது தான் எனக்கு தோன்றியது.

எதிரியை வெளியில் செல்ல விடாமல் எல்லோருக்கும் மத்தியில் விட்டு ஜாக்கிரதையாய் இருப்பதுதான் நல்லது என்றும் தோன்றியது.

எல்லாவற்றுக்கும் மேல் குருஜி இருக்கும் தைரியம் மனதில் அமைதியை ஏற்படுத்தியது.

"எல்லோரும் ஓய்வுக்கு செல்லுங்கள்,நாளை காலை நாம கிளம்புவோம்"என்றார்.

"நான் அந்த மரவீட்டில் தங்குகிறேன்"என்று தொங்கிக் கொண்டிருந்த கயிறு பிடித்து 'சர'சர'வென்று ஏறினார் ஜெர்மனிக்காரர்.

'அட நமக்கு இந்த யோசனை வரவில்லையே?'என்றார் சிவஞானம்.

கொஞ்ச நேரம் தான் 'சர்'ரென்று போன வேகத்தில் கயிறில் இறங்கினார் ஜெர்மனிக்காரர்.

எம்.டி.,"என்னாச்சு?"என்றார்.

"தெரியலை,யாரோ மேலே ஏறப்போன என்னை நெஞ்சுல கை வச்சு தள்ளுனா மாதிரி இருந்தது"என்றார்.

"மேலே யாரும் கிடையாது,உங்களுக்கு கற்பனையில ஏதோ தோணியிருக்கு"என்றார் சசிதரண்.

கண்ணன்,"நான் மேலே போய் பார்க்கிறேன்"என்று 'சர'சர'வென்று ஏறினான்.

மேலே போனவன்,"இங்கே ஒண்ணும் இல்லே,நான் இங்கேயே ஓய்வு எடுக்கறேன்"என்றான் மேலிருந்த படியே.

"நீ எதுவும் சாப்பிட போறது இல்லையா?"

"ஒண்ணும் வேண்டாம்,தூங்கினா போதும்,காலையில பார்த்துக்கலாம்"என்றான்.

நாங்கள் எங்கள் டெண்டின் உள் சென்றோம்.

புவனேஸ்வரியும் என்னுடன் நுழைந்தாள்.

எங்கள் விரிப்பில் படுத்தோம்.

வெளியில் குருஜியுடன் எம்.டி.ஏதோ பேசிக் கொண்டிருப்பது மட்டும் காதில் விழுந்தது.
என்ன பேசுகிறார்கள் என்று தெரியவில்லை.
எனக்கு கண்களை சொக்கியிழுத்தது.
எப்பொழுது தூங்கினேன் என்று தெரியாத ஒரு உறக்கம்.
காலில் ஈரமாய் ஏதோ பட 'சடா'ரென்று எழுந்து உட்கார்ந்தேன்.
காலருகில் தண்ணீர் ஓடி வர ஆரம்பித்திருந்தது.
புவனேஸ்வரியும் எழுந்து விட்டாள்.
டெண்டின் மேல் மழை 'தபதப'வென விழ ஆரம்பித்திருந்தது.
நான் வெளியில் எட்டிப் பார்த்தேன்
எல்லோரும் இன்னொரு டெண்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தார்கள்.
நான் கையசைத்து,"நாங்க எழுந்துட்டோம்,இங்கேயும் வாங்க"என்று அழைத்தேன்.
எம்.டியும் சசிதரணும் முன்னால் வர பின்னால் குருஜி வந்தார்.
எல்லோரும் நின்று கொண்டிருந்தோம்.
மழை எப்பொழுது விடும் என்று தெரியவில்லை.
நின்றிருந்த போதிலும் கண்களை மூடியிருந்தார் குருஜி.
அவரின் முகத்தில் அந்த இருளிலும் ஒரு சாந்தம் குடி கொண்டிருப்பது தெரிந்தது.
எம்.டி.யின் பக்கத்தில் இருந்த சசிதரண் மௌனமாக நின்றிருந்தார்.
அவர் முகத்தில் எண்ண கோடுகளின் பிரதிபலிப்பு.
எனக்கு அவர் மனதில் என்ன ஓடிக் கொண்டிருக்கிறது என்பது புரியாமல் இல்லை.
நாளை மதிகெட்டான் காட்டில் நடக்கப் போகும் விஷயங்கள் என்னவாக இருக்கும் என்று கற்பனையில் ஆழ்ந்தேன்.
விடியும் வரை மழை நிற்கவில்லை.

திடீர் என்று வானம் மலர்ந்து மரங்களின் ஊடே சூரிய ஒளிக் கீற்றுகள் வந்து எங்கள் மேல் விழ ஆரம்பித்தன.

"அவரவர் காலை கடன் களை முடித்து விட்டு வாருங்கள்,நம்மை சுற்றி ஒன்றரை கிலோ மீட்டர் தூரத்திற்கு எந்த மிருகமும் இல்லை,சீக்கிரம் வந்தீர்கள் என்றால் நம் பயணத்தை தொடர்ந்து விடலாம்"என்றார் குருஜி சங்குண்ணி.

நான் மேலே பார்த்தேன்.

கண்ணன் இறங்கி கொண்டிருந்தான்.

"நல்ல உறக்கம்,நீங்கள் கூப்பிடுவது கூட கேட்கவில்லை,யாரோ வந்து என்னை தட்டுவது போல் இருந்தது"என்றான் குருஜியைப் பார்த்து.

எல்லோரும் கிளம்பும் போது கேட்டார் எம்.டி.,"ரிப்பன் இருக்கிறது இல்லவா?"என்று கேட்டார்.

தேவன்,"இருக்கிறது"என்றார்.

நாங்கள் கிளம்பும் முன் டின் உணவுகளை கொஞ்சம் தின்று தீர்த்தோம்.

குருஜி முன்னால் நடக்க தொடர்ந்தோம்.

ஒரு இடம் வந்தவுடன் குருஜி எல்லோரையும் ஒரு முறை பார்த்தார்.

"சில நேரங்களில் நான் உங்கள் கண்ணில் படமாட்டேன்,கவலைப் படாதீர்கள்,யாருக்கும் எந்த ஆபத்தும் வராது,நடங்கள்"என்றார்.

முன்னால் தேவன் நடந்து கொண்டிருந்தார் கேமிராவை ஆன் செய்த படி.

திடீர் என்று ஒரு வித ஜில்லிப்பு தோன்றியது.

கண்கள் சொக்கி சொருகுவது போல் இருந்தது எனக்கு.

மெல்ல நடக்க ஆரம்பித்தேன்.

எனக்கு முன்னால் சென்றவர்கள் திப்பி திப்பியாய் தெரிந்தார்கள்.

கண்களை கசக்கிக் கொண்டேன்.

எனக்கு பக்கத்தில் என் கையை பிடித்த படியே வந்து கொண்டிருந்தாள் புவனேஸ்வரி.

அவளை திரும்பி பார்த்தேன்.

அவளும் பனிப்படலம் போல தெரிந்தாள்.

எங்கிருந்தோ அந்த வினோத ஒலி வந்தது.

மரங்களுக்குள்ளே காற்று புகுந்து செல்வதுதான் அந்த வினோத ஒலி என்று புரிந்தது.

என் கையைப் பிடித்திருந்த புவனேஸ்வரி நின்று விட்டாள்.

"என்னாச்சு?"என்று கேட்டேன்.

"பயமா இருக்கு?"என்றாள்.

அவள் கரங்கள் கூட 'சில்'லென்று இருந்தது.

எனக்கு முன்னால் ஒருவர் நடப்பது மட்டுமே தெரிந்தது.

யார் என்று மனது குழம்ப ஆரம்பித்தது.

புவனேஸ்வரி திடீர் என்று என் கைகளை விட்டு விட்டாள்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை.

கண்களில் மீண்டும் ஒரு சொக்கல்.

நான் நடக்கிறேனா,மிதக்கிறேனா?

எதுவுமே புரியவில்லை.

திடீர் குழப்பம்.

எங்கோ இருக்கிறோம்?

'என்ன என்ன?' என்று எனக்கு நானே கேட்டுக் கொண்டே நடந்தேன்.

நடந்தேனா?

முன்னே பார்த்தேன்.

எதுவுமே தெரியவில்லை.

மெல்ல மெல்ல அடிகளை எடுத்து வைத்தேன்.

ஏதோ ஒரு மயக்கம்.

கொஞ்சம் பின்னால் யாரோ என்னைத் தொடுவது போல் ஒரு உணர்வு.

அத்தியாயம் முப்பத்தி ஐந்து

'சட்'டென்று திரும்பி பார்த்தேன்.

யாரது?

குழப்பம் என் கால்கள் என்னை எங்கோ இழுத்து சென்றன.

யாரையாவது கூப்பிட வேண்டும் என்று தோன்றியது.

ஆனால் வாயிலிருந்து ஒரு வார்த்தைகளை கூட வெளியேற்ற முடியாமல் தொண்டை வறண்டது போலிருந்தது.
என் தோள் பையில் இருந்து தண்ணீர் எடுத்து குடிக்க வேண்டும் என்று தோன்றியது.
தோள் பையை கழட்டிய போது அது பொத்தென்று கீழே விழுந்தது.
அதன் அருகிலேயே உட்கார்ந்தேன்.
என் பக்கத்தில் யாரோ நிற்பது போல் ஒரு உணர்வு.
நிற்கிறார்களா,இல்லையா?
மனது கலங்கி இருப்பது எனக்கு புரிந்தது.
தண்ணீரை எடுத்து குடிக்க முயன்றேனா,இல்லை அது கீழே விழுந்ததா,
யாரோ என்னைத் தாங்கிப் பிடித்தது போல தோன்றியது.
எனது தொண்டைக்குள் நீர் இறங்கியது.
யார் ஊற்றுகிறார்கள்.
ஒன்றும் புரியவில்லை.
எழுந்தேனா,நின்றேனா,குழப்பம்.
தோள் பையை எடுத்து என் கைகளை தூக்கி மாட்டியது யார்?
மெல்ல நடந்தேன்.
கண்களை மீண்டும் சொக்கியது.
'தடால்'என்று விழுந்தேன்.
ஏதோ ஒரு உஷ்ண காற்று என் மேல் படுவது போல் இருந்தது.
மெல்ல கண்களை திறந்தேன்.
எதிரில் பனிப்படலமாக தெரிந்தது அது.

நீண்டு இருந்த கீரிப்பிள்ளை.

அதன் தோற்றமே கொடூரமாயிருந்தது.

நான் திடுக்கிட்டு எழுந்தேன்.

அசையாமல் நின்றேன்.

கொஞ்சம் நகர்ந்தாலும் சீறியது.

நான் முடிவையெடுக்கும் முன் எங்களுக்கு நடுவே அந்த நாக தண்டம் வந்து விழுந்தது.

விழுந்த மாத்திரத்தில் நாகமாய் மாறியது.

நின்றிருந்த கீரிப்பிள்ளை இரண்டடி பின்னால் போனது.

பின் உக்கிரமாய் நாகத்தின் மீது பாய்ந்தது.

கடுமையான சண்டை.

என் கண் எதிரே.

கீரி நாகத்தை கடிக்க முயன்று முயன்று எம்பி விழுந்தது.

நாகத்தின் சீற்றம் என்னை அதிரச் செய்தது.

எவ்வளவு நேரம் என்று தெரியவில்லை.

சிறு வயதில் தெருவோரம் மோடி மஸ்தான் வித்தைகளை பயத்துடன் தூரத்தில் இருந்து பார்த்தது உண்டு.

கீரிக்கும் பாம்புக்கும் சண்டை விடப் போகிறேன் என்று கூட்டத்தை சேர்ப்பவன் ஒரு நாளும் சண்டை விட்டது இல்லை.

ஆனால் இப்பொழுது இரண்டும் மோதிக் கொள்வதைப் பார்க்கவே பயங்கரமாய் இருந்தது.

நான் எந்த இடத்தில் இருக்கிறேன் என்பதே மறந்து போனது.

சுற்றி சுற்றி வந்து தன்னை கடிக்க வந்த கீரியிடம் சீறி சீறி கொத்திய பாம்பு உக்ரமாய இருந்தது.

ஒரு கட்டத்தில் பாம்பு கொத்தியது.

கீரி துள்ளி தரையில் விழுந்தது.

அதன் வாயிலிருந்து ரத்தமும் நுரையும் வந்தது.

பாம்பு என்னைப் பார்த்தது.

'பட்'டென்று தண்டமாக மாறிப் பறந்தது.

நான் எழுந்தேன்.

மெல்ல நடந்தேன்.

என் பின் புறம் யாரோ நடந்து வருவது போல் தோன்றியது.

திரும்பி பார்த்தேன்.

எங்கோ பார்த்தவாறு புவனேஸ்வரி வந்து கொண்டிருந்தாள்.

இவள் எப்பொழுது எனக்கு பின்னால் போனாள்.

அவள் பக்கத்தில் வந்ததும் அவள் கைகளைப் பற்றினேன்.

அவள் என்னைப் பார்த்தாள்.

"யாரு நீ?"என்றாள் கண்களில் பீதியுடன்.

'சரிதான்'என்றவாறே அவள் கைகளைப் பற்றிக் கொண்டு முன்னேறினேன்.

அவள் ஒன்றும் பேசாமல் வந்தாள்.

அவள் பித்துப்பிடித்த நிலையில் இருப்பது போல் இருந்தது.

முன்னால் மரத்தில் கட்டப்பட்டிருந்த ரிப்பன் முன்னால் குழு சென்றதை அடையாளம் காட்டியது.

அதன் வழியே நடந்தேன்.

புவனேஸ்வரி ஏதோ உளறிக் கொண்டே வந்தாள்.

எனக்கும் திப்பி திப்பியாய் நினைவுகள் தப்பியது.

நானும் என் எண்ணங்களை இழுத்துப் பிடித்து நடந்து கொண்டிருந்தேன்.

கொஞ்சம் வேகமாய் நடக்க ஆரம்பித்தேன்.

ரிப்பன் நீண்டு கொண்டே சென்றது.

எனது நடையும்.

கொஞ்ச தூரம் தான்.

சரியான பாதையில் போகிறோமா என்கிற குழப்பம்.

முன்னால் புகை மண்டலம் போல் தான் தடம் இருந்தது.

எந்த விலங்கும் வந்து தாக்கி விடக்கூடாது என்று மனதில் குருஜியின் முகத்தை நினைத்தவாறே நடந்தேன்.

புவனேஸ்வரி பேசிக் கொண்டே வந்தாள்.

அவளின் பேச்சில் எந்த அர்த்தமும் இல்லை.

வார்த்தைகளும் ஒன்றுகொன்று கோர்வையில்லாமல் வந்து வெளி விழுந்தது.

கொஞ்சம் தூரம் தள்ளி கூட்டமாக அவர்கள் தென்பட்டார்கள்.

முன்னால் கையில் நாக தண்டத்தினைப் பிடித்துக் கொண்டு குருஜி நின்றிருந்தார்.

அவரை பார்த்த உடனேயே எனக்கு மனம் தெளிந்தது.

எல்லோரும் எங்கள் இருவருக்காகத்தான் காத்திருந்தனர்.

நான் பக்கத்தில் சென்றதும் தான் கவனித்தேன்.

குருஜியை தவிர மற்ற எல்லோருமே ஏதோ சிந்தனையில் இருப்பது போல் இருக்கமாக இருந்தார்கள்.

நான் பக்கத்தில் போனதும் புவனேஸ்வரியைப் பார்த்தார்.

நான்,"குருஜி ஏதேதோ உளறிக் கிட்டே வர்றா?"என்றேன்.

குருஜி சிரித்துக் கொண்டே பக்கத்தில் வந்து புவனேஸ்வரியின் தன் கட்டை விரலை வைத்து அழுத்தினார்.

அவர் உதடுகள் ஏதோ முணுமுணுத்தன.

நான் அவரையும் புவனேஸ்வரியையும் மாறி மாறி பார்த்து கொண்டிருந்தேன்.

ஒரு நிமிடம் கடந்திருக்கும்.

புவனேஸ்வரியின் உடல் மெல்ல குலுங்கியது.

கண்களை மூடித் திறந்தவள்-

என்னைப் பார்த்தாள்.

"என்னாச்சு நாம மதிகெட்டான் காட்டை தாண்டிட்டோமா,இப்ப எங்க இருக்கோம்"என்றாள்.

எல்லோரும் நிற்பதையும் பார்த்தாள்.

குருஜி,"இன்னும் அரை நாள் ஆகும்,இப்ப இங்கே தங்கப் போறோம்,கொஞ்சம் நேரம் ஓய்வு"என்றார்.

மற்றவர்களைப் பார்த்தார்.

எல்லோரும் ஏதோ மந்திரத்துக்கு கட்டுப் பட்டது போல நின்று இருந்தார்கள்.

குருஜி தன் விரல்களால் ஒரு சிட்டிகை போட்டோர்.

அனைவரும் அவரைப் பார்த்தனர்.

"சொல்லுங்க குருஜி"என்றார்கள் ஒரே குரலில்.

"இப்ப இங்கே கொஞ்ச நேரம் ஓய்வு எடுப்போம்,பின்னர் கிளம்பலாம்"என்றார்.

எல்லோரும் தங்கள் தோளில் மாட்டியிருந்த தோல் பைகளை இறக்கி வைத்து விட்டு அங்கங்கே அப்படி அப்படியே உட்கார்ந்தார்கள்.

நான் நெடுதுயர்ந்து இருந்திருந்த மரங்களை அண்ணாந்து பார்த்து கொண்டிருந்தேன்.

ஒரு நீண்ட மரத்தின் கிளைகளில் அமர்ந்திருந்த இரண்டு குரங்குகள் அடுத்த மரத்துக்கு தாவின.

எனக்கு பசி சுத்தமாய் இல்லை.

சிவஞானம் சாரும் மற்றவர்களும் ஏதோ தங்கள் தங்கள் பையில் இருந்து டின் உணவுகளை எடுத்து வெளியில் வைத்தார்கள்.

சசிதரண் எல்லோருடையதையும் எடுத்து கத்தியால் மூடியை திறந்து கொடுத்துக் கொண்டிருந்தார்.

நான் புவனேஸ்வரியைப் பார்த்தேன்.

"உனக்கு பசிக்கவில்லையா?"

"இல்லை,தூங்க வேண்டும் போல் இருக்கிறது,கண்களை சொக்கி இழுக்கிறது"என்றாள்.

ஒரு மரத்தடியினை காட்டினார் குருஜி.

"அங்கே போய் சாய்ந்து உட்கார்ந்து தூங்கு"என்றார்.

புவனேஸ்வரி அந்த தடி மரத்தின் அடியருகில் சென்று சாய்ந்து உட்கார்ந்தாள்.

குருஜி தன் இடுப்பில் கட்டியிருந்த சுருக்குப் பையை எடுத்தார்.

அதில் சிறிய குளிகை போல கையில் எடுத்து எல்லோருக்கும் ஒன்று என கொடுத்தார்.

அதை வாயில் போட்டதும் கரைந்தது.

குருஜி,"மனம் தெளிவாகும்"என்றார்.

திடீர் என்று புத்துணர்ச்சி வந்தார் போல தோன்றியது.

உடலிலும் மனதிலும் ஒரு வித புது தெம்பு பிறந்தது.

ஜெர்மனிக்காரன் என்னையே குறுகுறுவென்று பார்த்துக் கொண்டிருந்தான்.

நான் அவனையே பார்த்தேன்.

அவன் மீது ஏனோ ஒரு சந்தேகம் எழுந்தது.

என் மனம் தெளிவாய் இருந்தது.

அவனையே உற்றுப் பார்த்தேன்.

அவன் வேறு புறம் தன் முகத்தினை திருப்பிக் கொண்டு டின்னிலிருந்து சிறு சில்வர் ஸ்பூனால் எடுத்து தின்று கொண்டிருந்தான்.

அப்பொழுது-

அத்தியாயம் முப்பத்தி ஆறு

திடீர் என்று கையில் இருந்த 'டின்'னை கையில் இருந்து 'ஐயோ'என்றபடியே வீசி எறிந்தார் ஜெர்மனிக் காரார்.

அவர் தூக்கிப் போட்ட டின்னிலிருந்து வெளி வந்து வேகமாய் ஓடி மறைந்தது அந்த சின்ன பாம்பு.

"என்னாச்சு?"என்றார் படத்துடன் எம்.டி.

"நான் சாப்பிட்டிருந்த டின்னிலிருந்து ஒரு சின்ன பாம்பு உயிரோட குதிச்சு ஓடுது"

பக்கத்தில் உட்கார்ந்திருந்த சிவஞானமும் கண்ணனும் சிரித்தார்கள்.

"நல்ல பிரமை உங்களுக்கு"என்றார் சசிதரண்.

"நான் கண்ணாலே பார்த்தேன்"என்றார் ஜெர்மனிக்காரரர்.

"ஆமாம் ஆமாம் உணவு பதார்த்தத்தை அடைச்சு வச்சு விக்கிறாங்க,அதுல இருந்து எப்படி உயிரோட பாம்பு வரும்,உங்களுக்கு பிரமைதான்"என்றார் சசிதரண்.

நான் என்ன சொல்வது.

ஜெர்மனிக்காரரர் கண்ணுக்கு தெரிந்த பாம்பு எனக்கும் தெரிந்தது.

ஆனால் வேறு யார் கண்ணுக்கும் படவில்லை.

என்ன மாயமோ மந்திரமோ என்று யோசித்தபடி நான் குருஜியைப் பார்த்தேன்.

குருஜி சிரித்தார்.

எல்லாம் அவர் விளையாட்டா?

நான் மீண்டும் ஜெர்மனிகாரரரைப் பார்த்தேன்.

அவர் பயத்தில் இருந்தார்.

நான் குருஜியைப் பார்த்தேன்.

அவர் எந்த சலனமும் காட்டவில்லை.

நான் புவனேஸ்வரியைப் பார்த்தேன்.

இந்த அமர்க்களத்திலும் அவள் நன்றாக உறங்கி விட்டிருந்தாள்.

அவளை முதன் முதலில் செய்தி பிரிவிக்கு மாற்றி வெளியில் அனுப்பிய போது சிவஞானத்திடம் புலம்பித் தள்ளி விட்டாள்.

'சார் நான் டெஸ்ட்க்லேயே இருக்கேனே,என்னை ஏன் வெளி கவரேஜ்ஜுக்கு அனுப்பறீங்க?'என்று.

ஆனால் ஆறு மாதம் கழித்து மீண்டும் டெஸ்குக்கு மாற்ற முயன்ற போது,'போங்க சார்,இது பழகிப் போச்சு,இப்படியே ரவுண்டிங்லேயே இருக்கேன்'என்று சொல்லி விட்டாள்.

அவளின் மன உறுதி சரியாகப் பட்டது.

அவள் தன்னை ஒரு வேலையில் இணைத்துக் கொண்டால் என்றால் கடைசி வரை இறங்கிப் பார்த்து விடுவாள்.

இந்த காட்டு அசைன்மெண்டுக்கு கூட அவளே முன் வந்து இணைந்தாள்.

மெல்ல இருட்ட தொடங்கியது.

என் மன நிலை நிதானமாய் இருந்தது.

மற்றவர்கள் ஏதோ குழம்பிய மனோபாவத்திலேயே இருப்பது போல் ஒரு தோற்றம்.

கண்ணனும் தேவனும் குருஜி காட்டிய இடத்தில் இரண்டு டெண்டினை அமைத்தார்கள்.

நான் புவனேஸ்வரியைப் பார்த்தேன்.

அவள் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தாள்.

குருஜியைப் பார்த்தேன்.

அவர் புரிந்து கொண்டவர் போல்,"தூங்கட்டும்,நடுவில் முழிப்பு வந்தால் கூடாரத்துக்கு அனுப்புகிறேன்,பாதி தூக்கத்தில் எழுப்ப வேண்டாம்,ஆழ்ந்து உறங்குகிறாள்"என்றார்.

நான் கூடாரத்துக்குள் நுழைந்தேன்.

கொஞ்ச நேரம் தான் நிகழ்ந்த நிகழ்வுகளை அசைப் போட பார்த்தேன்.

அதற்குள் தூங்கி விட்டேன்.

மீண்டும் விழிப்பு.

இந்த முறை எழுப்பியது முகத்தில் விழுந்த நீர் துளிகள்.

பக்கத்தில் குருஜி நின்று கொண்டிருந்தார்.

மெல்ல கண்களை திறந்து எழுந்து உட்கார்ந்தேன்.

"சீக்கிரம் கிளம்பு மற்றவர்கள் தயார் இன்னும் கொஞ்ச தூரம் கடந்ததும் ஒரு சுனை வரும்,அதில் போய் குளித்து தெளியலாம்"என்றார்.

மேலே வெற்று வானம் மரங்களோடு.

கூடாரம் எடுப்பது கூட தெரியாமல் தூங்கி கொண்டிருந்திருக்கிறேன்.

கண்ணன்,"அப்படியே விட்டு விட்டு போகலாம் என்று தான் நினைத்தோம்,ஆனால் குருஜி தான் தடுத்து விட்டார்"என்றான் சிரித்துக் கொண்டே.

நான் கொஞ்சம் கோபமாக அவனைப் பார்த்தேன்.

தேவன் காமிராவை ஏதோ செய்து கொண்டிருந்தான்.

எம்.டி.யைப் பார்த்து,"இது வரை எடுத்தது எல்லாம் தனியாக உள்ளது,அதை எப்படி அனுப்புவது"என்றார்.

ஜெர்மனிக்காரர்,"என்னிடம் சேட்லைட் போன் இருக்கிறது,அதை உபயோகித்து நீங்கள் தொடர்பை உங்களது மடிக்கணினியில் ஏற்றி
அனுப்புங்கள்"என்றார் தனியே வலிய வந்து.

"சேட்லைட் போன் ஆன் செய்தாலே அரசு சிக்னல்களை மானிட்டர் செய்து விடுமே,நீங்கள் உள்ளே போக வேண்டியதுதான்"

"நானே ப்ரத்யேகமாக வடிவமைத்தது,இதிலிருந்து வெளியேறும் சமிக்ஞைகளை 240 செகண்டுக்கு மேல் போனால் தான் மானிட்டர் செய்ய முடியும்,உங்களின் அட்டாச்மெண்ட் சென்று முடிந்ததும் மீண்டும் ஆஃப் செய்து விடுவேன்"

"அப்படி மானிடர் செய்ய முடியாத கைப்பேசியை கண்டு பிடித்திருப்பது சாத்தியம் எனில் நீங்கள் மிகவும்

ஆபத்தானவராக கருதப் படுவீர்கள் இந்திய ஃபீனல் கோட் சட்டத்தின் படி"என்றார் சசிதரண்.

"உங்கள் விருப்பம்"என்றார் ஜெர்மனிக்காரர்.

சிவஞானம்,"வேண்டாம்"என்றார் ஒற்றை வார்த்தையில்.

இது போன்ற சமயங்களில் ஏன் பல விஷயங்களில் டிஸ்கஷன் நடக்கும் போது ஒற்றை வார்த்தையில் தடைப் போட்டு விடுவார்.

எம்.டி.யும் அவர் சொல்வதைதான் கேட்டுக் கொள்வார்.

"வேண்டாம்,நீரோடை என்று சொல்கிறீர்களே அங்கே சிக்னல் வருகிறதா பார்ப்போம்"என்றார் எம்.டி.

நாங்கள் மெல்ல நகரத் தொடங்க-

குருஜி பின்னால் நடந்து தொடர ஆரம்பித்தார்.

நான் கொஞ்சம் பின் தங்கி அவருடன் நடக்க ஆரம்பித்தேன்.

அவர் மெல்லிய குரலில்,"அந்த சுனையருகில் பெறுத்த ஆபத்து ஒன்று நமக்கு காத்திருக்கிறது"என்றார் சாதாரணமாய்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை.

"என்ன சொல்றீங்க?"

"ஆமாம்,அதையும் சமாளித்து முன்னேறுவோம்"

எனக்கு 'திக்'கென்று இருந்தது.

என்ன சாதரணமாய் சொல்கிறார்.

அந்த சுனை அந்த குட்டி உபரி மலையில் இருந்து தோன்றி இறங்கி சமவெளியில் ஓடிக் கொண்டிருந்தது.

இரு புறத்திலும் மரங்கள் பார்வைகள்.

தெளிந்த நீரோடை.

சூரியக் கதிர்கள் அதன் மீது கீற்றுக் கீற்றாய் நெடிதுயர்ந்த மரங்களின் ஊடே புகுந்து தரையில் நீரில் இறங்கி கொண்டிருந்தன.

"அவரவர் குளித்து வாருங்கள்,ஆழமும் இல்லை,வெகு தூரம் சென்று விட வேண்டும்,பகல் நேரம் என்றாலும் நாம் கொஞ்சம் கவனமாய் இருக்க வேண்டும்"என்றார்.

நான் கொஞ்சம் தூரம் அதன் வழியே சென்றேன்.

என்னுடன் புவனேஸ்வரியும் வந்தாள்.

அந்த ஓடை ஒரு இடத்தில் திரும்பி வலம் ஓடியது.

அதை ஒட்டியே சென்ற நானும் புவனேஸ்வரியும் ஒரு குட்டி பாறையின் மேல் உடைகளை கழட்டி வைத்து விட்டு தண்ணீரில் இறங்கினோம்.

உடலை வருடிச் சென்ற ஓடை நீர் ஜில்லிப்பை ஏற்படுத்தியது.

தலையில் கேப் போட்டுக் கொண்டேன்.

புவனேஸ்வரி,"நான் இந்த சுனையில் தலை நனைக்க போகிறேன்"என்று 'ஹெட் கேப்' போடாமல் இறங்கினாள்.

பல இடங்களை கடந்து வருவதாலோ என்னமோ அந்த நீரில் ஏதோ மணம் இருந்தது.

நாங்கள் இருவரும் இருக்கும் இடத்திலிருந்து பார்த்தாள் குருஜியும் மற்றவர்களும் கண்களில் படமாட்டார்கள்.

நாங்கள் இருவரும் குளித்துக் கொண்டிருந்தோம்.

இடுப்பை வருடி சென்றது நீர்.

நான் முங்கி முங்கி எழுந்தேன்.

நான் எழுந்த வேளையில் புவனேஸ்வரியும் எழுந்தாள் தண்ணீரின் உள்ளிருந்து.

என்னை தாண்டி அவள் பார்வை வேறு இடத்தில் பதிந்திருந்தது.

அவள் முகம் கொஞ்சம் திகிலாய் ஆனது.

"என்ன புவனேஸ்வரி"என்றேன்.

அவள் இருந்த இடத்திலிருந்து நீந்தி வேகமாய் என் அருகில் வந்தாள்.

"அங்கே பார்"என்றாள் கண்களில் சின்ன திகிலுடன்.

"என்னப்பா?"

"ஒருத்தன் நம்ம இரண்டு பேரையும் பார்த்துட்டு இருக்கான்"என்றாள் கழுத்து வரை உடலை தண்ணீரில் முக்கிக் கொண்டு.

அவள் காட்டிய திசையில் இரண்டு பெரிய மரங்கள் தான் என் கண்ணில் பட்டன.

"யாரும் இல்லையே?"என்றேன்.

"இல்லை நாம் பார்ப்பது அறிந்து ஒளிந்து கொண்டான் போல்,அங்கே பார்க்காமல் சாதாரணமாய் இருந்து விட்டு 'சற்'றென்று பார்"என்றாள்.

நான் குளிக்கற பாவனையில் இருந்து விட்டு திடீர் என்று அவள் சொன்ன இடத்தைப் பார்த்தேன்.

அங்கே-

அத்தியாயம் முப்பத்தி ஏழு

புவனேஸ்வரி சொன்னவன் 'சட்'டென்று மரத்தின் பின்னால் மறைந்து கொண்டான்.

அவன் யாராய் இருப்பான் இன்று எனக்கு புலப் படமால் இல்லை.

எப்படியாவது முடிந்த வரை நான் யார் என்பதை கடைசி வரை வெளிப் படுத்தி விடக் கூடாது என்பதில் உறுதியாய் இருந்தேன்.

புவனேஸ்வரி 'அவன் யார் என்று தெரிகிறதா?'என்று கேட்டாள் புவனேஸ்வரி.

நான் தயங்காமல் சொன்னேன்.

"ஜெர்மனிக்காரனுடன் வந்தவனாய் இக்கருக்க வேண்டும்,அவர்கள் இருவரும் ஒரு நாடகம் ஆடி நம்மை மாற்றி இருக்கிறார்கள் என்று தோன்றுகிறது,அவன் தொடர் இடைவெளி விட்டு நம்மை தொடர்கிறான்,சமயம் பார்த்து அவன் நம்மை தக்க முயல கூடும்,அதுவும் நாம் சர்ப்பக் காவை நெருங்குகிற வரை அவன் நம்மிடம் வர மாட்டான்.ஜெர்மனிக்காரன் ஏதாவது சிக்கினால் கொடுத்தால் தான் வருவான் என்று தோன்றுகிறது,இதை குருஜியிடும் தெரிவித்தால் மட்டும் போதும்,அதிகம் பதற்றம் கொள்ள வேண்டாம்"என்றேன்.

அவளும் 'சரி'என்று தலையாட்டினாள்.

நாங்கள் இருவரும் உடை மாற்றிக் கொண்டு கிளம்பும் போது கவனித்தேன். அவன் கண்ணில் படவில்லை.

நாங்கள் உணவை முடித்து கிளம்பும் வேளையில் மழை பெய்ய தொடங்கி விட்டது.

குருஜி எங்களை பார்த்து,"மழை நிற்கும் என்று காத்திருக்க வேண்டாம்.கிளம்பி விடுவோம்,இன்னும் அரை நாள் நடந்தால் மதி கேட்டான் காட்டை கடந்து விடலாம்"என்கிறார்.

அனைவரும் முன் நடக்க அவர் எங்களின் பின்னால் வந்தார்.

மழையின் வீரியத்தில் காட்டின் அடர்த்தியில் இருமை சூழ்ந்தது.

முன்னால் நடந்து கொண்டிருந்த தேவன் கையில் இருந்த டார்ச் வெளிச்சம் இருளில் ஊடுருவி சென்றது.

அந்த ஒளியில் மழை கொட்டுவது தெரிந்தது.

குருஜி,"சத்தம் செய்யாமல் நடங்கள்,வலது புறம் இறக்கத்தில் யானைகள் கூட்டமாக நிற்கின்றன,எந்தவித சப்தமும் எழுப்பாதீர்கள்"என்றார்.

நான் மெல்ல இருளில் இருபுறமும் பார்த்து கொண்டு நடந்து கொண்டிருந்தேன்.

எந்த வித அசைவும் தெரியவில்லை.

கால் பகுதியில் வழுக்கியது.

நன்றாக பதித்து நடக்க வேண்டியிருந்தது.

மெல்ல நடந்தேன்.

சசிதரண் எனக்கு முன்னால் சென்று கொண்டிருந்தார்.

அவரை பார்த்தபடியே நடந்து கொண்டிருந்தேன்.

சொட்ட சொட்ட குளிரில் நடப்பதும் ஒரு வித சுகமாகத்தான் இருந்தது.

தலையில் போட்டிருந்த லெதர் கேப் 'தப் தப்'என்கிற ஓசையுடன் மழைத் தண்ணீர் விழுந்து கொண்டிருந்தது.

உடல் முழுக்க குளிர்ந்திருந்தது.

எனக்கு பின்னால் யாரோ வருவது போல் ஒரு உணர்வு.
உடனே திரும்பி பார்க்கவும் தயக்கம்.
மெல்ல குருஜி என்னை திரும்பி பார்த்தார்.
அவர் என்னை நோக்கி வந்தார்.
நான் நின்றேன்.
"அப்படியே நடந்தே கொண்டே இரு,நிற்க வேண்டாம்"என்றார்.

நான் மெல்ல அவர் சொல்லியபடியே நடந்தேன்.
திடீர் என்று 'ஐயோ'என்ற குரல் முன்னால் இருந்து.
அது தேவனின் குரல் தான்.
இருட்டில் எல்லோரும் முன்னேறினோம்.
தேவனை காணவில்லை.
அவன் கையில் வைத்திருந்த டார்ச் எங்கே போனது என்று கூட தெரியவில்லை.
"நான் இங்கே இருக்கிறேன்"என்கிற குரல் மட்டும் கேட்டது.
குரல் வாட்ச் திசையில் கண்ணன் தனது டார்ச்சை அடித்துப் பார்த்தேன்.
பார்த்த அனைவரும் பயத்தில் உறைந்து போனோம்.
பக்கவாட்டில் சரிவில் ஒரு கோடியை பிடித்துக் கொண்டு தொங்கி கொண்டிருந்தான்.
ஒரு கையில் கேமிராவை வேறு விடாமல் பிடித்திருந்தான்.
மழை வேறு விடாமல் அடித்துக் கொண்டிருந்தது.
எம்.டி.'ஐயோ கேமிரா'என்றார்.
"ஒன்றும் ஆகாது பொறுமையாய் இருங்கள்"என்றார் குருஜி சங்குண்ணி.
அவர் தனது கையில் இருந்த தண்டத்தை கீழ் நோக்கி நீட்டினார்.
அது சரியாய் அவன் கையைப் பிடித்திருந்த கொடி அருகில் முட்டி நின்றது.
"குருஜி,தேவன் உன்னால் முடியும்,எந்த பதட்டமும் அடையாது,நான் ஒன்று,இரண்டு,மூன்று என்று

சொன்னதும் நீ பிடித்திருக்கும் கொடியை நொடியில் விட்டு விட்டு தண்டத்தை பற்றிக் கொள்ள வேண்டும்,அது சாத்தியமே"என்றார்.

எங்களுக்கு பீதியை இருந்தது.

அவர் சொல்வது சரியாக மனதிற்கு பட்டாலும் அவர் சொன்ன படி தேவன் செய்ய வேண்டுமே என்று எனக்கு தோன்றியது.

"எனக்கு பயமாய் இருக்கிறது,கையை விட்டேன் என்றால் அடி பாதாளத்தில் விழுந்து விடுவேன்,என் முடிவு இப்படித்தான் முடிய வேண்டுமா குருஜி"

"நீ நினைப்பது போல் எல்லாம் நடக்காது,பயப்படாதே,நான் இன்னும் சில வினாடிகளில் எண்ண போகிறேன்"என்று கண்களை மூடிக் கொண்டு ஏதோ பிரார்த்தனை செய்தார்.

பின் ஒன்று இரண்டு என்றவர் மூன்று என்கிறார்.

க்ஷணத்தில் நடந்து அது.

தேவன் பிடித்திருந்த கொடியை விட்டு தண்டத்தைப் பற்றினான்.

அவன் பிடித்திருந்த தண்டப் பகுதி அவன் கைகளை சுற்றிக் கொண்டது.

குருஜி தான் பிடித்திருந்த பக்கத்தில் இருந்து ஒரு இழு இழுத்தார்.

தேவன் மேல் வந்து மேட்டுப் பகுதில் விழுந்தான்.

"இனி இந்த வேளையில் நடக்க வேண்டாம்,இன்னும் சிறிது தூரம் தான் என்றாலும் மழை நின்றபின் தொடர்வது தான் நல்லது,அது இறைவனை இருந்தாலும் பகலாய் இருந்தாலும்"என்றார் குருஜி.

நான் எம்.டி.யைப் பார்த்தேன்.

அவர் ஏதோ தீவிர யோசனையில் இருந்தார்.

ஜெர்மனிக்காரனைப் பார்த்தேன்.

அவன் முகத்தில் ஒரு கள்ளத் தனம் இருந்தது.

நான் இது போன்ற தருணங்களில் குருஜியின் முகத்தைப் பார்ப்பது போல் இருந்தது.

அவர் மெல்ல சிரித்தார்.

தேவன் பயந்த குரலில்,"குருஜி நான் மிகவும் கவனமாக தான் இருந்தேன்,எப்படி இப்படி நிகழ்ந்து என்று எனக்கு தெரியவில்லை,நான் நடந்து கொண்டிருந்த போது யாரோ என் கால்கள் இடையே தடுக்கி விட்டது போல் இருந்தது"என்றான்.

குருஜி,"நம்மில் யாரும் இருப்பதாக தோன்றவில்லை,குறுக்கே போகும் நேரிலோ அல்லது துணைக்கு கிளையில் நீ காலை வைத்து தாண்டியிருக்கலாம்,பயப் பட வேண்டாம்,நாம் சர்பக் காவு செல்லும் வரை யாருக்கும் ஒன்று நிகழாது"என்றார்.

ஜெர்மனிக்காரர்,"குருஜி சொல்வது போல் தான் உங்களுக்கு நிகழ்ந்து இருக்க வேண்டும்"என்றார்.

எம்.டி.கேமிராவை எடுத்துக் பார்த்துக் கொண்டிருந்தார்.

"குருஜி கேமிராவுக்கு ஒன்று ஆகியிருக்காது,தேவன் ஒரு கையால் கொடியையும்,இன்னொரு கையால் கேமிராவை குரங்கு போல் அல்லவா பிடித்திருந்தான்"என்றார்.

"என் பயம் எனக்கு தானே தெரியும்"என்றார் தேவன்.

மழை விட்ட பாடில்லை.

கண்ணனும்,தேவனும் இரண்டு டென்டுகளை குருஜி தேர்ந்தெடுத்து காட்டிய இடத்தில் போட்டார்கள்.

குருஜி அந்த மழையிலும் கொஞ்சமும் கவலையோ முயற்சியோ இல்லாமல் இருந்தார்.

அவர் முகத்தில் எப்பொழுதும் ஒரு வித புன்னகை குடி கொண்டிருந்தது.

"யாருக்கும் பசியில்லையா"என்று கேட்டார் குருஜி.

"இல்லாமலா இருக்கும்?"என்றார் எம்.டி.

ஒரு கூடாரத்தில் எல்லோரும் உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்தோம்.
என் பையில் இருந்த பிரட் கெடாமல் இருந்தது.
நான் பிரட்டில் ஜாமை தடவி தின்ன ஆரம்பித்தேன்.
ஒரே ஒரு டார்ச்சை மட்டும் கட்டி நடுவில் தொங்க விட்டிருந்தான் கண்ணன்.
எல்லோர் முகமும் தெளிவாய் தெரிந்தது.
நான் ஜெர்மனி காரனை பார்த்தேன்.
அவன் முகம் மட்டும் சாதாரணமாய் இல்லை.
இன்றிரவு அவனால் ஏதாவது தொந்தரவு வருமோ என்றோ என்று என் மனதில் தோன்ற ஆரம்பித்து விட்டது.

அத்தியாயம் முப்பத்தி எட்டு

நான் கண்களை மூடினாலும் தூக்கம் வரவில்லை.

மாறி மாறி ஜெர்மனிக்காரன் முகமும் குளிக்கும் பொது ஒளிந்து கொண்டு பார்த்தவன் முகமும் மனக்கண்ணின் முன் தோன்றி மறைந்தது.

வெகு நேரம் போராடியும் தூக்கம் வராததால் நான் எழுந்து வெளியில் வந்தேன்.

இருட்டாய் இருந்ததது.

எதுவும் கண்ணில் தெரியவில்லை.

எதிரே இருந்த பெரிய மரம் மட்டும் கண்ணில் பட்டது.

அதன் அடியில் குருஜி அமர்ந்திருப்பது திப்பியாய் தெரிந்தது.

மெல்ல அருகில் சென்றேன்.

என்னைப் பார்த்ததும்,"என்ன உறக்கம் வரவில்லையா?"என்று கேட்டார்.

"ஆமாம்"

"உண்மைதான் உன் கடமை உனக்கு தூக்கத்தை கடைசி வரை தராது"என்றார் சிரித்துக் கொண்டே.

"என்ன சொல்றீங்க குருஜி?"

"நான் எதை பத்தி பேசறேன்னு உனக்கும் தெரியும்,எனக்கும் தெரியும்,இந்த சீரியல் ஷூட்டிங் எல்லாமே ஒரு நாடகம் தான்,உன்னோட குறிக்கோளை நீ அழகா நகர்த்தி கொண்டு போறே,யாருக்கும் எந்த சந்தேகமும் வராம"என்றார்.

நான் கொஞ்சம் காத்திருந்து தான் போனேன்.

ஆனால் அதை கொஞ்சமும் வெளிக் காட்டி கொள்ளாமல் "நீங்க சொல்றது எனக்கு கொஞ்சமும் புரியலை குருஜி"என்றேன்.

அவரோ சிரித்த படியே,"லதா நீ யார் என்பது மற்றவர்களுக்கு வேண்டுமானால் தெரியாமல் இருக்கலாம்,ஆனால் எனக்கு தெரியும்"என்றார்.

நான்,"என் குறிக்கோளில் நான் சரியாகாது தானே இருக்கிறேன்"என்றேன்.

"சரியாய் தான் இருக்கிறாரோ,சொல்லப் போனால் நான் பாதுகாப்பாக வந்ததே உனக்காகத்தான்"என்றார்.

"நன்றி குருஜி"

"நேரம் வரும் போது நீ உண்மையில் யார் என்று தெரியும் போது எல்லோருக்கும் அதிர்ச்சியாய் இருக்கும்"என்றார் குருஜி.

நான் மௌனமாய் இருந்தேன்.

"நீ பயப்பட வேண்டாம்,உனக்கு எந்த ஆபத்தும் வராது,நான் இருக்கும் வரை"என்றார்.

"அப்ப எங்க யாருக்காவது ஆபத்து வருமா?'என்று பின்னால் இருந்து குரல் கேட்டது.

பின்னால் திரும்பிப் பார்த்தேன்.

எம்.டி.வந்து கொண்டிருந்தார்.

குருஜி சிரித்தார்.

"நான் எல்லோருக்கும் பாதுகாப்பாய் தான் இருப்பேன்,நம் மனமே நம்மை வழி நடத்துகிறது.நம் செய்கை நம்மை செப்பனிடுகிறது,நம் குறிக்கோள் நம்மை தீர்மானிக்கிறது,நல்லது நடக்கும் வரை நல்லது சிந்திக்கும் வரை யாருக்கும் எந்த ஆபத்தும் வர போவதில்லை"என்றார்.

"ஆம் நம் சிந்தனை மற்றும் செயல் படிதான் முடிவும் இருக்கும்,அது சரிதான் நானும் ஒப்புக் கொள்கிறேன்"என்றார் எம்.டி.

"இன்னொரு விஷயம் சர்ப்பகாவில் நமக்கு நிறைய ஆபத்துகள் காத்திருக்கின்றன,நிறைய உயிர் சேதம் ஏற்படவும் வாய்ப்பு இருக்கிறது"என்றார் கொஞ்சமும் பதற்றம் இல்லாமல்.

எனக்கு அது ஆச்சரியத்தை தரவில்லை.

ஆனால் குருஜி அப்படி சொன்னதும் நான் எம்.டி.யின் முகத்தை தான் பார்த்தேன்.

அவர் மிரண்டுதான் போயிருந்தார் குருஜியின் வார்த்தைகளை கேட்டு.

"என்ன சொல்றீங்க குருஜி?"

"ஆமாம்,உனக்கு சசிதரனை எத்தனை வருடமாய் தெரியும்?"என்று கேட்டார்.

"ஏன் நான் தொலைக்காட்சி ஆரம்பித்த காலத்திலிருந்தே என் உடன் இருந்தவன் அவன்,சொல்லப் போனால் அவனுக்கு எனது தொலைகாட்சியில் பங்குகள் இருக்கின்றது"என்றார்.

அந்த செய்தியே எனக்கு அதிர்ச்சியை தந்தது.

சசிதரன் வெறும் நண்பர் என்று தான் எங்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார் எம்.டி.

இப்பொழுது குருஜியிடம் இப்படி சொல்கிறாரே.

குருஜி தாடியை தடவியவாறே,"ஒவ்வொருவருக்கும் ஒரு நோக்கம் இருக்கிறது"என்றார்.

எம்.டி.யின் முகம் சற்று மாறியது.

எனக்கும் தான் எம்.டி.இடம் பூடகமான குருஜி எதோ தெளிய வைப்பது போல் சொல்வதாகவே தோன்றியது.

"என்னைப் பொறுத்தவரை அவன் அப்படி ஒன்றும் இரண்டாவது சிந்தனை உள்ளவன் போல் தெரியவில்லை"என்றார் எம்.டி.

"இரண்டாவது சிந்தனை என்றால்?"

"எங்கள் குறிக்கோள் எல்லாமே அந்த ஐந்து தலை நாகத்தினை உலகுக்கு காட்ட வேண்டும்,அது ஜீணீணீtலீபளீணீணீஜீஜீவீறீ வைத்திருக்கும் ஒன்றரை லக்ஷம் கோடிகள் மதிப்புள்ள வைரக்கல்லை உலகத்துக்கு காட்ட வேண்டும் என்பதுதான்,அதில் வேறு ஏதும் விஷயம் இல்லை"என்றார்.

"அப்படியா ஆனால் உன்னுடைய நண்பனின் சிந்தனை வேறு மாதிரி அல்லவா இருக்கிறது,என்னைப் பற்றி எல்லாம் தெரிந்த அவனுக்கு அவன் மனதை படம்

பிடிக்கும் திறமை இருப்பது தெரியாமல் போனதுதான் ஆச்சர்யமாய் இருக்கிறது"

"குருஜி என்ன சொல்ல வரீங்க"

குருஜி எழுந்து நின்றார்.

"நாம் எல்லாம் முடிந்து திரும்பி வரும் போது திரும்பி வராதவர்கள் பட்டியலில் அவன் பெயர் முதலில் இருக்கிறது"என்றார்.

இப்படி குருஜி சொன்னதும் எம்.டி.யின் முகம் போன போக்கு எனக்கு தெள்ளது தெளிவாய் தெரிந்தது அந்த இருட்டிலும்.

"நீங்க கொஞ்சம் விளக்கமாய் சொல்லலாமே"என்று கெஞ்சும் குரலில் கேட்டார் எம்.டி.

"வேண்டாம் எதிர்காலம் அறிந்தாலும் சில விஷயங்களை சொல்லாமல் இருப்பவந்தான் ஞானி.கோடிட்டுத்தான் காட்ட முடியும்.வேறு எதுவும் செய்ய இயலாது,நான் முதலில் சொன்னேன்,அவரவர் எண்ணமே அவரவர் மூடிவைத்து தரும்"

எம்.டி.யின் முகம் கோபத்தில் சிவந்தது.

"விடிந்ததும் அவன் மனதில் என்ன ஓடுகிறது என்பதை நானே கேட்கிறேன்"

"வேண்டாம்,அப்படியே நீ கேட்டாலும் அவன் உண்மையை சொல்ல மாட்டான்"என்றார் எம்.டி.யைப் பார்த்து கோபமான குரலில்.

பேசிக் கொண்டே இருந்தவர் தனது கையில் இருந்த நாகத் தண்டத்தை வலது பக்கம் வேகமாய் வீசினார்.

பெரிய ஒலியுடன் ஒரு புலியின் சீற்றம்.

தண்டம் திரும்பி வந்தது.

அதன் முனையில் ரத்தத் துளிகள்.

அதை இலைகளால் சுத்தம் செய்தார் அமைதியாய் குருஜி.

அந்த இருட்டிலிலும் அவர் அனைத்தையும் கவனித்துக் கொண்டிருப்பது எனக்கு மகிழ்ச்சியாய் இருந்தது.

எம்.டி. நகத்தினை கடிக்க ஆரம்பித்தார்.

குருஜி அமர்ந்தார்.

எம்.டி.அவர் அருகில் அமர்ந்தார்.

குருஜி ஒன்றும் பேசவில்லை.

பின் சிறு நொடிகள் கடந்ததும் அவரே மௌனம் கலைத்தார்.

"அங்கிருக்கும் நாகம் மிகுந்த சக்தி வாய்ந்தது,தன்னை பற்றி யார் சிந்திக்க ஆரம்பித்தாலே அதற்கு தெரிந்து விடும்,அதன் உடன் இருக்கும் முதிர்ந்த மூதாட்டிக்கு பல வித்தைகள் தெரியும்,நாம் நெருங்க நெருங்க அவள் அஸ்திரங்களை தொடுப்பாள்.என்ன மாதிரி அஸ்திரம் என்பது ஒரு கிலோ மீட்டருக்கு முன்னாள் என் கண்ணில் பட்டு விடும்,நான் தடுத்து விடுவேன்.நாம் சர்ப்பக் காவில் காணப் போகும் காட்சிகள் எடுக்கப் போகும் காட்சிகள் இதுவரை உலகில் எந்த தொலைக்காட்சியிலும் வராத காட்சிகளாய் இருக்கும்,உன்னுடன் பயணம் செய்பவர்கள் யார் யார் என்பதை நீ புரிந்து கொள்வாய்"என்றார்.

இரண்டாவது கூடாரத்தில் இருந்து ராமச்சந்திர வெளியில் வருவதை பார்த்தேன்.

"என்ன உனக்கு தூக்கம் வரவில்லையா?"என்று கேட்டார் குருஜி.

ராமச்சந்தர்,"ஆமாம் குருஜி,என்னவோ தெரியவில்லை மனம் தெளிவில்லாமல் இருக்கிறது,குழப்பம் இருக்கிறது,நினைவுகள் தப்பி போகின்றன"என்றார்.

"நாம் இந்த மதிகெட்டான் காட்டை விட்டு வெளியில் செல்லும் வரை அப்படிதான் இருக்கும்"என்றார்.

"அது சரிதான்,எனக்கென்னமோ ரம்யாவை பற்றிய எண்ணங்கள் வருகின்றது"

"ஏன் வராமல் இருக்கும்,அவளுக்கு ஆட்டத்தில் பங்கு உள்ளது அல்லவா?"என்றார் குருஜி சிரித்துக் கொண்டே.

எனக்கு அவர் சொல்வதின் அர்த்தம் புரிந்தது.

ஆனால் எம்.டி.யும் ராமச்சந்தரும் குழம்பிய பாவனையோடு குருஜியை பார்த்தனர்.

"ராமச்சந்தர் உனக்கு ரம்யாவை பற்றி என்ன விவரங்கள் தெரியும்"என்று கேட்டார்.

ராமச்சந்தர்,"என்ன கேட்கறீங்க குருஜி?"

"நான் தெளிவாய்தானே கேட்டேன்,ரம்யாவை பற்றி உனக்கு என்ன தெரியும்,எத்தனை வருடமாய் தெரியும்?"

இந்த கேள்வியை ராமச்சந்தர் எதிர்பாக்கவில்லை என்பது அவர் முக பாவனையிலேயே தெரிந்தது.

குருஜி என்னைப் பார்த்தார்.

என்னை எதுவும் கேட்டு விட கூடாது என்று மனதில் நினைத்து கொண்டேன்.

குருஜி சிரித்துக் கொண்டே எம்.டி.யைப் பார்த்து கேட்டார்.

அத்தியாயம் முப்பத்தி ஒன்பது

அதன் கொடூரமான குரல் அச்சம் விளைவிப்பதாய் இருந்தது.

ஆனாலும் எல்லாவற்றையும் மீறி நான் யார் என்பதை குருஜி முற்றிலும் உணர்ந்துள்ளா என்பதே எனக்கு ஆச்சர்யத்தை நான் உணராமல் இல்லை.இவ்வளவு சக்தி வாய்ந்தவர் எப்படியும் நடக்கப் போகும் அனைத்தையும் அறிந்திருப்பார்.

அதுவும் உண்மைதானே.

மெல்ல உறக்கம் பயத்தையும் மீறி என்னைக் கவ்வியது.

எது நடந்தாலும் நன்மைக்கு என்றே தோன்றியது.

உறக்கம் கவ்வியது.

மீண்டும் எழுந்த போது வழக்கம் போல் எல்லோரும் எழுந்திருந்தார்கள்.

என் பக்கத்தில் புவனேஸ்வரி உட்கார்ந்திருந்தாள்.

அவள் குளித்து திரும்பியிருந்தாள் என்பதை அவள் தோற்றமே சொன்னது.

"முகத்தை மட்டும் கழுவிக் கொண்டு கிளம்பு,குருஜி உன்னை எழுப்பச் சொன்னார்,பக்கத்தில் வந்ததுமே எழுந்து விட்டாய்,பசிக்கிறதா?"

"பசி சுத்தமாய் இல்லை,மழை நின்று விட்டது போலிருக்கிறது?'

"அதனால் உடனே கிளம்பலாம்"என்றார்.

நான் அவசரம் அவசரமாய் எழுந்து முகத்தை கழுவி ப்ர்ஷ்ஷில் பல்லை விளக்கி விட்டு கிளம்பினேன்.

தோல் பையை சுமந்து கொண்டு நகர்ந்தேன்.

முன்னால் குருஜி வழி காட்ட அனைவரும் அவரைத் தொடர்ந்து நடக்க ஆரம்பித்தோம்.

மலையிறக்கம் ஒன்று வந்தது.

சமவெளி ஒன்று வந்தது.

"இந்த சமவெளியில் உட்கார்ந்து கொஞ்ச நேரம் உங்கள் காலை உணவை முடித்துக்

கொள்ளுங்கள்,இன்னும் சில நாட்களில் நாம் சர்ப்பக்காவை அடைந்து விடுவோம்"என்றார் குருஜி.

பச்சைப் பசேல் என்றிருந்த அந்த சமவெளி நாலாபுறமும் மலைகளை சூழ்ந்ததாக இருந்தது.

"நாம் மதிகெட்டான் காட்டை கடந்து வந்து விட்டோம்,இங்கே சில நிமிடங்கள் அமர்ந்து பசியாறுங்கள்,உடனே கிளம்பி விடலாம்"

"அங்கே பாருங்கள்"என்று ஆச்சர்ய குரலில் கத்தினான் தேவன்.

எல்லோரும் அவன் காட்டி திசையில் பார்த்தோம்.

தெள்ளத் தெளிவாக நீரோட ஒன்று மேலிருந்து பக்கத்து மலையொன்றிலிருந்து இறங்கி ஓடிக் கொண்டிருந்தது.

"இப்பொழுது நாம் அங்கே போக வேண்டாம்,இது போன்று பல அருவிகள் இனி வரும்,இப்பொழுது பசியாறி கிளம்பப் பார்ப்போம்"என்றார் குருஜி.

அருவி இறங்கிக் கொண்டிருந்த இடத்தில் யானைகள் கூட்டமாய் என்கிருந்தோ வந்து சேர்ந்தன.

குருஜி சொன்னதன் காரணம் இப்பொழுது எங்களுக்கு விளங்கியது.

"நாம் மலைகளை ஊடுருவி செல்கிறோம்,அங்கே இயல்பாய் வாழ்ந்து கொண்டிருக்கும் எந்த விலங்குக்கும் நாம் இடையூறாக இருந்து விடக் கூடாது,நம்மை தாக்க முற்பட்டால் மட்டுமே அடுத்த நடவடிக்கையில் ஈடுபடலாம்"என்றார்.

நாங்கள் சீக்கிரமே சாப்பிட்டு விட்டு கிளம்பி விட்டோம்.

தேவன்,"எனக்கு இயற்கை உபாதை அந்த மலையடிவாரம் சென்று வருகிறேன்"என்று கிளம்பினான்.

"சீக்கிரம் வா"என்றார் எம்.டி.

நாங்கள் திறந்து வைத்திருந்த தோள் பைகளை மூட ஆரம்பித்திருந்தோம்.

தலையில் நீர் கோர்த்திருப்பது போல் இருந்தது.

தலையை கணத்து பாரமாக இருந்தது.

குருஜியிடம் சொன்னேன்.

அவர் தன்னிடம் இருந்த சிறு பையிலிருந்து கொஞ்சம் பொடியை எடுத்துக் கொடுத்தார்.

அதை தண்ணீரில் போட்டு கலக்கி குடித்தேன்.

கொஞ்சம் காரமாய்தான் இருந்தது.

கொஞ்ச நேரம் கண்களில் இடுக்குகளில் இருந்து தாரை தாரையா கண்ணீர் கொட்ட ஆரம்பித்தது.

தலையின் பாரம் குறைந்தது.

'ஐயோ'என்று ஒரு அலறல் கேட்டது.

அது தேவன் சென்ற பகுதியில் இருந்து வந்தது.

எம்.டி.யும் கண்ணனும் ஓடினார்கள்.

அவர்களுக்கு முன்னால் விரைந்து நடந்தாரா,பறந்தாரா என்று தெரியாத வண்ணம் விரைந்து கொண்டிருந்தார் குருஜி.

நாங்களும் அவர்கள் பின்னால் தொடர்ந்தோம்.

பக்கத்தில் சென்று பார்த்ததும் அறிந்தோம்.

தேவன் உடல் முழுக்க நீலம் பாய்ந்திருந்தது.

எம்.டி.பதறிப் போய்'எதாவது செய்யுங்கள் குருஜி'என்றார்.

அவன் பக்கத்தில் கிடந்தது அந்த சேட்லைட் கிடந்தது.

"அவன் விதியை அவனே தேடிக் கொண்டான்,அவனை கொத்தியது கடுமையான கட்டு விரியன்,அவன் பிழைக்க மாட்டான்,இங்கேயே குழித்தோண்டி அவனையும் அவன் கையில் இருந்த இந்த சாட்டிலைட் போனையும் புதையுங்கள்"என்றார்.

தேவன் சாட்டிலைட் போனுடன் இவ்வளவு நாட்கள் எங்களுடன் இருந்திருக்கிறான் என்பதே எங்களுக்கு ஆச்சர்யமாய் இருந்தது.

'இது வரை என்ன என்ன தகவல்களை யாராருக்கு கொடுத்து கொண்டிருந்தானோ'என்று யோசித்த படியே நான் ஜெர்மனிக்காரரைப் பார்த்தேன்.

"எனக்கு இது பற்றி எதுவும் தெரியாது,என்னை ஏன் சந்தேகத்துடன் பார்க்கிறீர்கள்,எனது போன் அடைத்து வைக்கப் பட்டிருக்கிறது,நீங்கள் விரும்பினால் உங்களில் ஒருவரிடம் அதை ஒப்படைக்கத் தயாராய் இருக்கிறேன்"என்றார்.

"யாரும் ஒண்ணும் செய்ய முடியாது,அவனின் துஷ்ட எண்ணத்திற்கு மரணம் ஏற்பட்டுள்ளது,சொல்லப் போனால் மதிகெட்டான் கானகத்திலேயே அவன் உயிர் பிரிந்திருக்க வேண்டும்,இங்கே உயிர் போக வேண்டும் என்று கடைசியில் எழுதி இருக்கிறது,உடனே குழி ஒன்றை தோண்டுங்கள்,அப்படியே போட்டு விட்டு போகக் கூடாது"என்றார்.

கண்ணன்,எம்.டி.சசிதரண் மூவரும் மரத்தில் இருந்து மூன்று தடிக்கிளைகளை உடைத்து குருஜி காட்டிய இடத்தில் குழியைத் தோண்ட ஆரம்பித்தார்கள்.

"ஊர் திரும்பியது தேவனின் குடும்பத்திற்கு நாம் என்ன சமாதானம் சொல்லப் போகிறோம்"என்றாள் புவனேஸ்வரி.

குழித்தோண்டி அதில் தேவனை இறக்கியதும் மண்ணைப் போட்டு மூடினார்கள்.

நான் கண்ணுக்கு எட்டிய காட்டு மலர் ஒன்றை எடுத்து வந்து மூடிய மண்ணின் நடுவே சொருகினேன்.

என் கண்களில் இத்தனை நாள் பழகிய தேவனை நினைத்து கண்ணீர் வந்தது.

இருந்தாலும் அவன் துரோகியாக மாறிப் போனது ஏன் என்று யோசிக்க ஆரம்பித்தேன்.

அவன் ஏற்கனவே பெரிய பணக்காரன் தான்,வசதிகள் அதிகம் உள்ளவன்,அவன் கேமிரா,எடிட்டிங் கோர்ஸ் படித்ததே அமெரிக்காவில்,அப்புறம் ஏன்?

எனக்குள்ளே விடை தெரியாத கேள்விகள்.

"என்ன செய்ய இத்தனை நாள் கூடப் பழகியவன் துரோகச் செயலுக்கு துணை போக முயன்றிருக்கிறான் என்பதை அறிந்ததும் எல்லோருக்கும் அதிர்ச்சியாயத்தான் இருக்கும்"என்றார்.

அவர் பொதுவில் சொன்னாலும் எனக்கு சொன்னது போல் இருந்தது.

எம்.டி.,"கண்ணன் இனி நீதான் முழு கேமிரா பொறுப்பையும் எடுத்துக் கொள்ள வேண்டும்"என்றார்.

அவனும் 'சரி'என்று தலையாட்டினான்.

ஏற்கனவே கேமிரா அவன் கையில் தான் இருந்தது.

என் அருகில் வந்த குருஜி மெல்லிய குரலில் பேசினார்.

"நான் தவற விட்டு விட்டேன்,கொஞ்சம் முன்னமே தேவனை எச்சரித்து நல் வழிக்கு திருப்பியிருக்கலாம்,என்ன செய்ய அவன் விதி இங்கே முடிய வேண்டும் என்றிருக்கிறது"என்றார்.

ஏன் அதை என்னிடம் சொல்கிறார் என்று புரியவில்லை.

தேவன் யாரிடம் விலை போகியிருப்பான்.

எனக்கு அந்த ஜெர்மானியன் மீது அதிக சந்தேகம் எழுந்தது.

எப்படியாவது அவன் உண்மை முகமும் கிழிய வேண்டும்

குருஜி என்னைப் பார்த்து சிரித்தவாறே நடந்தார்.

உலகில் விஞ்ஞானத்தால் விளக்க முடியாத விஷயங்கள் பல உள்ளது,அதில் ஒன்று தான் இந்த பிறர் எண்ண ஓட்டங்களைப் படித்தல்.

குருஜிக்கு இருக்கும் திறமைகளில் அதுவும் ஒன்று.

அப்படியானால் அவர் ஜெர்மானியனை முழுவதும் படித்து தெளிந்திருப்பார்.

இப்பொழுதும் சிரித்தார் குருஜி.

நெடுந்தூரம் நடந்திருப்போம்.

மெல்ல இருட்ட ஆரம்பித்தது.

"வலது பக்கம் உள்ள மலையில் நாம் ஏற வேண்டும்,இது கொஞ்சம் கடுமையான மலை,பாதை இருந்தாலும் பக்கவாட்டில் உறுதியுடன் இருக்கும் வேர்களை பிடித்துக் கொண்டு ஏறுங்கள்"என்றார்.

கண்ணன் ஒவ்வொருவராக ஏறுவதை படம் எடுத்துக் கொண்டிருந்தான்.

கடைசியில் நான் ஏற என் பின்னால் கண்ணன் ஏறினான்.

முப்பது அடிக்கும் மேல் இருக்கும் போல உயரம்.

மெல்ல ஏறினோம்.

ஏறுவது அவ்வளவு சுலபமாய் இல்லை.

குத்தாக இருந்தது மலை.

கொஞ்சம் தவறினாலும் கீழே விழுந்து விட வேண்டியது தான்.

நன்றாக இருள் குவியும் முன் ஏறி விட வேண்டும் என்கிற எண்ணம் ஒரு புறம் இருந்தாலும் ஒவ்வொரு அடியையும் பார்த்து ஏறினேன்.

எனக்கு முன்னால் புவனேஸ்வரி ஏறிக் கொண்டிருந்தாள்.

அப்பொழுது-

அத்தியாயம் நாற்பது

அப்பொழதுதான் நான் கவனித்தேன்.

அதே செங்குத்து மலையில் தூரத்தில் இன்னொரு கொடியில் அவன் ஏறிக் கொண்டிருந்தான்.

அவன் யாரேன்று தெரியவில்லை.

எனக்குள் சின்ன திடுக்கிடல் எழுந்தாலும் எப்படி குருஜிக்கு தெரிவிப்பது என்பதை அறியாமல் திகைத்தேன்.

அவனை வேறு யாரும் கவனித்ததாக தெரியவில்லை.

இவ்வளவு காலம் அவன் எங்களை தொடர்ந்து வந்திருக்கிறான் என்பது மட்டும் புரிந்தது.

மேலே பார்த்தேன்.

எல்லோருமே ஏறும் கவனத்தில் இருந்தார்கள்.

எங்களை விட அவன் 'சரசர'வென்று ஏறிக் கொண்டிருந்தான்.

எனக்கு முன்னால் ஏறியவர்கள் ஏறி மேலே தளத்தை அடைந்தவுடன் திரும்பிப் பார்த்தேன்.

அவனை காணவில்லை.

நானும் மேலே ஏறி விட்டேன்.

முன்னால் அடர்ந்த காடு தென்பட்டது.

நான் குருஜியிடம் சென்றேன்.

அவரிடம் வாயை திறக்கும் முன் அவர்,"தெரியும் அவன் தான் ஜெர்மனிக்காரனுடன் வந்தவன்,அவனை புலி அடித்தது போல் நாடகம் ஆடி நம்முடன் வந்து இணைந்து கொண்டான் ஜெர்மனிக்காரன்,தன்னுடன் வந்தவனை நம்மை தொடர்ந்து வர வைத்திருக்கிறான்,நீயும் புவனேஸ்வரியும் சுனையில் இருந்த போது பார்த்தவனும்

அவனே,பயப்படாதே,அவனால் நமக்கு ஒரு தீங்கும் ஏற்படாது"என்றார் மெல்லியக் குரலில்.

என் மனதை விரைவில் படித்து அதற்கு அவர் விளக்கமும் சொல்லி விட்டார்.

நாங்கள் முன்னே நடக்கத் துவங்கினோம்.

'பொத்'தென்று உட்கார்ந்தான் கண்ணன்.

கையில் இருந்த கேமிராவை பக்கத்தில் வைத்தான்.

முகத்தை முட்டியில் புதைத்துக் கொண்டு அழ ஆரம்பித்தான்.

எம்.டி.அவன் அருகில் போய் உட்கார்ந்து,'ஹேய் என்ன இது?"என்றார்.

"தேவன்"என்றறினான் கண்ணன்.

"என்ன செய்ய நல்லவனாய்தான் இருந்தான்,எதற்கோ ஆசைப்பட்டு இப்படி உயிரை விட்டான்,விடு இதற்கெல்லாம் கலங்க வேண்டாம்"என்றார் எம்.டி.

எனக்கு பாவமாய் தான் இருந்தது.

இத்தனை வருடம் கூட பழகியவன் இப்படி துர்மரணம் அடைந்தது கண்ணனை கலவரப்படுத்தியிருக்க வேண்டும்.

குருஜி அவன் அருகில் சென்று சில சமாதான வார்த்தைகளை சொன்னார்.

அவன் எழுந்தான்.

தொடர்ந்து நடக்க ஆரம்பித்தோம்.

வானம் வெளுத்துதான் இருந்தது.

ஆனாலும் பெரும் மழை பெய்து விட்டிருந்ததால் குளுமையாக இருந்தது.

ஒரு வித மூலிகை வாசம் அதிகம் வீசியது.

காடு துவங்கியது.

ஒரு நிமிடம் முதலில் சென்ற குருஜி நின்று கண்களை மூடிப் பிரார்த்தனை செய்தார்.

பின் இடப்புறம் செல்ல ஆரம்பித்தார்.

நாங்கள் அனைவரும் தொடர்ந்து செல்ல ஆரம்பித்தோம்.

இன்னும் என்ன என்ன தடைகள் வரப் போகிறதோ,வேறு எதை சந்திக்க போகிறோமோ என்கிற எண்ணம் எனக்குள் எழுந்தது.

"இது வரை நடந்ததை யாராவது சொல்ல சொல்ல காமிராவில் பதிவு செய்யலாமே"என்றார் எம்.டி.

குருஜி,"கேமிராவை ரீ வைண்ட் செய்து பாருங்கள்,நிறைய பதிவு ஆகியுள்ளது"என்றார்.

எம்.டி.யும் நானும் கண்ணனை அணுக-

கண்ணன் காமிராவை ரீ வைண்ட் செய்து காண்பித்தான்.

குருஜியும் நானும் முதல் நாள் இரவில் ரம்யாவை கபளீகரம் செய்தது கூட பதிவாகியிருந்தது.

அதைப் பார்த்த நான் மிரண்டு போனேன்.

எம்.டி.ஆச்சர்யத்தோடு,"இது எடுத்தது யார்?"என்றார்.

"தேவன் தான் எடுத்தான்,எனக்கு தெரியாது"என்று நினைத்துக் கொண்டு-.

"அவன் இறக்கும் முன் வரை ஒரு நிமிடம் கூட விடாமல் பதிவு செய்து வைத்திருக்கிறான்"என்றார் தொடர்ந்து.

ரீ வைண்ட் ஓடிக் கொண்டிருக்க ஒரு இடத்தில் 'நிறுத்து';என்றார் குருஜி.

கண்ணன் நிறுத்தினான்.

'இன்னும் கொஞ்சம் பின்னாடி வா'என்றார்.

"அங்கே பாருங்கள்"என்றார்.

எல்லோரும்'எங்கே எங்கே?'என்று கேட்க-

ஒரு இடத்தை சுட்டிக் காட்டினார்.

அவர் காட்டிய இடத்தில் வானில் பாம்புகள் பறந்து கொண்டிருந்தன்.

நாங்கள் அசந்து போனோம்.

பாம்புகள் பறக்குமா?

"ஆமாம்"என்றார் எங்களின் மனதை படம் பிடித்தவராய்.

"இந்த காட்டை பாம்புகள் அரண் போல காக்கின்றன,அத்து மீறி நுழைபவர்களை அவை கொத்தாமல் விடாது"

"நமக்கு ஒன்றும் நிகழவில்லையே"
"நாக தண்டம் நம்மை காட்கிறது,மேலும் நான் தொடர்ந்து சொல்லும் நாக வசிய மந்திரங்கள் நமக்கு அரணாய் வருகிறது,நம்மால் அவற்றிற்கு ஆபத்து இல்லை என்பதை அவை உணரும் வரை ஒரு ப்ரச்னையும் இல்லை,இன்னும் ஒரு விஷயம்,இனி எக்காரணும் கொண்டும் நெருப்பு பற்ற வைக்க கூடாது,அப்படி செய்தீர்கள் பறந்து கொண்டிருக்கும் பாம்புகளின் கவனம் முழுக்க நம் மீது திரும்பி விடும்,மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டிய தருணம் இது,எந்த காரணம் கொண்டும் யாரும் பிரிந்து விட வேண்டாம்,இதுதான் சர்ப்பக் காவுக்கு முன்னால் உள்ள காடு,இதை கடந்து விட்டால் சர்ப்பக் காவை அடைந்து விடலாம்"என்றார் குருஜி.

சொன்னவர் என்னை திரும்ப பார்த்தார்.
"லதா உனக்கு இனிமேல் தான் வேலை அதிகம்"என்றார்.
"என் கைப்பேசியில் சிக்னல் வருகிறது"என்று கத்தினார் எம்.டி.
எல்லோரும் ஆச்சர்யமாய் அவரைப் பார்த்தார்கள்.
நான் குருஜியைப் பார்த்தேன்.
அவர் மர்ம புன்னகைப் புரிந்தார்.
கண்ணனைப் பார்த்தவர்,"இதுவரை எடுத்தவற்றை உடனே நமது எடிட்டிங் ரூமிற்க்கு அனுப்பி விடுங்கள்"என்றார்.
அங்கிருந்தை கண்ணன் அனைத்தையும் அனுப்பினான்.
சுமார் ஒரு மணி நேரம் ஆகிற்று.
"எல்லாம் போய் சேர்ந்து விட்டது"என்றான்.
எம்.டி.தொலைபேசியில் அலுவுலகத்தை அழைக்க முயன்றார்.
சொல்லி வைத்தது போல் போன் சிக்னல் சுத்தமாய் போனது.
"என்ன இது மர்மம்?"என்றார்.
குருஜி இதற்கும் சிரித்தப்படியே என்னைப் பார்த்தார்.

சசிதரணும் எல்லாம் புரிந்தது போல் எங்களைப்பார்த்து சிரித்தார்.

"நாம் கிளம்பலாமா?"என்று கேட்டார் எம்.டி.

"கிளம்பலாம்,என்னைத் தொடர்ந்து வாருங்கள்"என்றார் குருஜி.

அவர் முன்னால் செல்ல நாங்கள் தொடர்ந்தோம்.

சிவஞானம் கொஞ்சம் பின் தங்கி என்னுடன் வரத் தொடங்கினார்.

என்னிடம் மெல்லிய குரலில்,"உனக்கு குருஜியை முன்னமே தெரியுமா?"என்று கேட்டார்.

"இல்லையே,ஏன் அப்படி கேட்கிறீர்கள்?"என்று கேட்டேன்.

"இல்லை நீங்கள் இருவரும்தான் அதிகம் தனியாக உரையாடி வருகிறீர்கள்,அதனால் கேட்டேன்"என்றார்.

நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

ஆனாலும் பதில் சொல்லாமல் இருப்பது நல்லதல்ல என்று தோன்றியதா;,'யாராவது அவருடன் பேசிக் கொண்டு வர வேண்டும் அல்லவா?"என்று பதில் கூறினேன்.

சொல்லி விட்டு அவர் முகச் சலனத்தினைப் பார்த்தேன்.

"எனக்கு சசிதரண் மீது சந்தேகம் இருக்கிறது"என்றார் 'பொட்'டென்று.

"எதை வைத்து சொல்கிறீர்கள்?"

"என்னத்தான் குருஜியை நமக்கு அவன் அறிமுகப் படுத்தி வைத்தாலும் அவன் மனதில் வேறு ஏதோ எண்ணம் உள்ளது,அவன் நம்முடன் வருவதன் நோக்கம் நேர்மையானதாக இருப்பது போல் எனக்குப் படவில்லை,அங்கே தங்கியிருந்த போது நான் ஒரு நாள் கவனித்தேன்,ரம்யாவுடன் அவன் மிக நெருக்கமாய் ஒரு நாள் இருந்தான்,அவர்களுக்குள் இருந்த உணர்ச்சி மோகத்தில் என்னை அவர்கள் என்னை கவனிக்கவில்லை,இப்பொழுது ரம்யாவும் உயிருடன் இல்லை,ரம்யாவின் நோக்கமும் அவனின் நோக்கமும் ஒன்றாய் தான் இருக்க வேண்டும்,அவன் அசாதாரண அமைதியுடன் இருக்கிறான்,நமக்கு தெரியாத சில

விஷயங்கள் அவனுக்கு நிச்சயம் தெரிந்திருக்கும் என்றே நான் நம்புகிறேன்"என்றார் சிவஞானம்.

அவர் சொல்ல சொல்ல எனக்கு அதுவும் சரியே எனப் பட்டது.

சிவஞானம் எதுவாக இருந்தாலும் தெளிவாக சிந்திப்பார்,கவனிப்பார்.

"நிச்சயம் உங்கள் கருத்தை குருஜியிடம் சொல்ல வேண்டும்."என்றேன்.

"அவருக்கு தெரியாமல் இருக்காது,புரிந்திருப்பார்,செய்ய வேண்டியதை செய்ய வேண்டிய நேரத்தில் செய்வார்"

நாங்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே குருஜி எங்கள் இருவரையும் திரும்பிப் பார்த்து சிரித்தார்.

அதில் ஆயிரம் அர்த்தம் தொணித்தது.

அத்தியாயம் நாற்பத்து ஒன்று

மேல் தளத்திற்கு வந்து விட்டோம்.

குருஜி ஒரு முறை எல்லாப் பக்கங்களும் பார்த்தார்.

பின் மேலே வானத்தைப் பார்த்தார்.

என்னைத் திரும்பிப் பார்த்தார்.

நாங்கள் கும்பலாக அவர் எந்த வழியில் எங்களை நடத்திச் செல்லப் போகிறார் என்று காத்துக் கொண்டிருந்தோம்.

திடீர் என்று வானத்தில் தூரத்தில் திட்டாக ஏதோ நகர்ந்து வந்தது.

மேகமா,இல்லை.

பறவையா?

அதுவும் இல்லை.

எங்கள் தலைக்கு மேலே வந்த போதுதான் தெரிந்தது.

நீள நீளமாய் பாம்புகள் இறக்கைகளுடன்.

பறக்கும் பாம்புகள்.

ஆயிரத்துக்கும் மேல் இருக்கும்.

அப்படியே அந்தரத்தில் நின்றன.

பல வண்ணத்தில் இருந்தன.

இது போன்ற பாம்புகளை இணைய லிங்குகளில் கூடப் பார்த்ததில்லை.

குருஜி அமைதியாக ஏதோ மந்திரங்களை சொல்லிக் கொண்டிருந்தார்.

சிறிது நேரம் கடந்திருக்கும்.

அப்பொழுதுதான் அது நடந்தது.

கொத்தாக இறங்கிய பாம்புகள் சடுதியில் சசிதரனை அப்படியே தூக்கின.

'விர்'ரென விண்ணில் ஏறின,பறந்தன.

"நாகராஜா"என்று வாய்விட்டு சொன்னார் குருஜி.

நாங்கள் அதிர்ந்து போனோம்.

மேலே ஏறி வரும் போது சிவஞானம் சார் சொன்னதும் குருஜி சிரித்ததும் எல்லாவற்றுக்கும் எனக்கு அர்த்தம் புரிந்தது.

எம்.டி.தான் அதிர்ந்து போயிருந்தார்.

"என்ன குருஜி என்ன இது,ஏன் இப்படி நடந்தது,சசிதரனை பாம்புகள் இப்படி வந்து தூக்கி செல்லக் காரணம் என்ன?"

"அவனின் கொள்ளுத்தாத்தா காலத்திலிருந்து அந்த சர்ப்பக்காவின் ஐந்து தலை நாகம் பல்லாயிரம் காலம் காத்து வைத்திருக்கும் வைரத்தை திருட முயற்சி செய்து வருகிறார்கள்,சசிதரண் நம்முடன் உதவுவது போல் வந்ததும் அதற்காகத் தான்,சர்ப்பக் காவின் எல்லைக்கு வெளியே பறக்கும் பாம்புகள் பாதுகாப்பு வளையத்தை உண்டு பண்ணி வைத்திருக்கிறது.

அவை சரியான நேரத்தில் ஆளை கொத்திப் போய் வானத்திலேயே உயிரை எடுத்து விடும்"என்றார்.

எம்.டி.யின் முகத்தில் அதிர்ச்சி ரேகைகள்.

அவர் கண்ணனைப் பார்த்தார்.

"இதெல்லாம் எடுத்தீங்களா?"

"எடுத்திருக்கேன்"

"ரீவைண்ட் பண்ணிப் பாருங்க"என்றார்.

ரீவைண்ட் செய்து காண்பித்தார் கண்ணன்.

லோ ஆங்கிளில் இருந்து அப்படியே பதிவாகியிருந்தது.

"இதுவே மக்களுக்கு அதிர்ச்சியாக இருக்குமே,க்ராபிக்ஸ் என்று நினைத்து விடுவார்களோ"

குருஜி சிரித்தார்.

"இதை விட சாட்சி கிடையாது"என்றார் ஒற்றை வரியில்.

நாங்கள் மெல்ல நடக்க ஆரம்பித்தோம்.

எல்லோருமே கொஞ்சம் பயந்த நிலையில் இருந்தார்கள் என்பது தான் உண்மை.

எனக்கு ஜெர்மனிக்காரன் மேல் சந்தேகம் இருந்தது.

அவனை பாம்புகள் ஒன்றும் செய்யாமல் விட்டு விட்டு சென்றது எப்படி?

என்ன நடக்கிறதோ நடக்கட்டும்.

நான் வந்த குறிக்கோள் நிறைவேற வேண்டும் என்று மனதில் நினைத்துக் கொண்டேன்.

என் பக்கத்தில் நடந்து வந்து கொண்டிருந்த குருஜி 'சட்'டென்று "எல்லாம் நடக்கும்,உன் விதி என்னவென்று என்னை விட உனக்கே தெரியுமே"என்றார்.

எனக்கு அவர் சொல்வதின் அர்த்தம் புரிந்தது.

சர்ப்பக் காவில் எல்லாவற்றுக்குமான விடை காத்திருக்கிறது.

அடர்ந்த காடு.

மேலே வெயில் அடித்துக் கொண்டிருந்தாலும் காட்டுக்குள் ஒரு வித சில்லிப்பு உடல் முழுவதும் ஏறியது.

ஒரு வித வினோத தட்பவெப்ப நிலையில் இருந்தது அந்த காட்டின் சூழல்.

"இந்த சிறு காட்டைக் கடந்து விட்டால் நாம் சர்ப்பக் காவை அடைந்து விடலாம்"என்றார் குருஜி.

எங்கள் குழு எந்த வித சலனமும் இல்லாமல் முன்னேறிக் கொண்டிருந்தது.

கண்ணன் காமிராவை இயக்கிக் கொண்டே முன்னேறிக் கொண்டிருந்தான்.

"ஒரு நிமிடம் நில்லுங்கள்"என்றார் குருஜி திடீர் என்று.

நாங்கள் அப்படியே நின்றோம்.

கொஞ்ச நேரத்தில் எங்களுக்கு முன்னே அந்த மலைப்பாம்பு கடந்தது.
அதன் தடிமனே ஆறடிக்கும் மேலே இருந்தது.
மெல்ல பாதையை கடந்து மறுப் பக்கம் செல்லத் தொடங்கியது.
பயத்தில் உறைந்து போய் பார்த்துக் கொண்டிருந்தோம்.
திடமான வாசனை ஒன்று எங்களின் மூக்கில் ஏறியது.
சிந்திக்க விடாமல் நின்றது நினைவுகள்.
அது கடந்து கொண்டே இருந்தது.
"என்ன குருஜி எத்தனை அடி இருக்கும்?"என்று கேட்டார் எம்.டி.மெல்லிய குரலில்.
"இருபது அடி நீளம் இருக்கும்"என்றார் குருஜி.
"நம்மை ஒன்று செய்யாதே"
"இல்லை அது தற்பொழுது தனது இளைப்பாறுதலுக்கான இடத்தை நோக்கி செல்கிறது"என்றார்.
நாங்கள் ஒன்றும் பேசாமல் நின்றேன்.
அதன் வால் பகுதி இப்பொழுதுதான் தென்பட்டது.
"ஏழு நிமிடம் அது கடந்து சென்றிருக்கிறது"என்றார் கண்ணன்.
"முழுவதும் படம் பிடித்திருக்கிறேன்'"என்றார்.
"இப்பொழுது பயணத்தைத் தொடரலாமா?"
"ம்"என்றார் குருஜி.
மீண்டும் நடக்க ஆரம்பித்தோம்.
ஜெர்மனிக் காரர் என் பக்கத்தில் வந்தார்.
எனக்கு அது அதிர்ச்சியாய் இருந்தது.
மெல்லிய குரலில் என்னிடம்,"லதா,ஒரு உண்மையை நான் சொல்ல வேண்டும்"என்றார்.
"என்ன"என்றேன்.
"சொல்கிறேன்"என்றவர் மெல்ல சிரித்தார்.
"சொல்கிறேன்"என்று சொல்லிவிட்டு ஒன்றும் சொல்லாமல் உடன் வந்தவரை என்னவென்று சொல்வது.

எங்களுக்கு முன்னே மற்றவர்கள் சென்று கொண்டிருந்தார்கள்.

"உன்னால் எனக்கு ஒரு உதவி ஆக வேண்டும்"என்றார்.

"என்ன உதவி?"

"சொல்கிறேன்,விரைவில்,அதற்கான நேரமும் நெருங்கிக் கொண்டிருக்கிறது"என்றார்.

"நீங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் புரியவில்லை"என்றேன்.

"புரியும்,புரியும் விரைவில்"என்றார்.

அவரின் புதிரான பேச்சு ஓரளவுக்கு எரிச்சலை ஏற்படுத்தினாலும் அவரது எண்ணம் ஏதோ ஒரு தவறான திசையில் ஓடிக் கொண்டிருப்பதை உணர்ந்தேன்.

என்னையும் அறியாமல் ஒரு எச்சரிக்கை உணர்வு எனக்குள் எழுந்தது.

எவ்வளவு நேரம் நடந்திருப்போம் என்று தெரியாது.

குருஜி "சிறிது ஓய்வெடுப்போம்"என்றார்.

நாங்கள் அதற்காகவே காத்திருந்தது போல் நின்றோம்.

குருஜி ஒரு இடத்தை சுட்டிக் காட்டி எங்களை அமரச் சொன்னவர்.

காட்டிற்குள் போனவர் போன வேகத்தில் கையில் பச்சைப் பசலென்ற இலைக்கொத்தோடு வந்தார்.

ஆளுக்கொரு இலையைக் கொடுத்தவர்,"நன்றாக மென்று தின்னுங்கள்"என்றார்.

ஒருவித உவர்ப்பும் புளிப்புமாய் இருந்தது அது.

"என்ன குருஜி இது?"

"ஒரு வாரம் பசியே எடுக்காது,மனசு தெளிவு பெறும்,சிந்தனை ஓட்டம் அதிகமாகும்"என்றார்.

"அட,இது இங்கே இருப்பது அதிசயமே,மனிதனின் கையில் கிடைத்திருந்தால் இதை வியாபாரம் அல்லவா ஆக்கியிருப்பான்"என்றார் சிவஞானம்.

"அப்படித்தான் மனிதர்களுக்கு பேராசைகள் அதிகம்,என்ன கிடைத்தாலும் எவ்வளவு கிடைத்தாலும் இன்னும் இன்னும் என்று அவன் மனம் அறற்றிகு கொண்டே இருக்கும்"என்றார் குருஜி.

நாங்கள் உட்கார்ந்திருந்த இடத்தில் காட்டின் வாசம் வித்தியாசமாக இருந்தது.

ஏதோ ஒரு வாசம்,இனிமையான வாசம் நாசியில் ஏறியது.

"இது பல வகை மூலிகை காடு,அனைத்து விதமான மூலிகைகளும் கொல்லி மலையில் இருப்பது போல் இங்கே இருக்கின்றன,ஆனால் ஆபத்தான செடிகளும் இருக்கின்றன,நாம் எதிர்பார்க்காத வகையில் தாவர வகைகள் உள்ளன,இது வரை சர்ப்பக காவை நோக்கி தேடி வந்த பதினேழு குழுக்கள் இந்த இடத்தைத் தாண்டி போனதில்லை,சர்ப்பக் காவின் எல்லைக்குள் முதன் முதலில் செல்லப் போவது நாம் தான்"என்றார்.

"எல்லாம் லதா சொன்னதால் தான்,வித்தியாசமாக இருக்கிறதே என்று இந்த பயணத்துக்கே ஒப்புக் கொண்டு வந்தேன்,ஆனால் சசிதரணின் துர் மரணம் என்னை கலங்க அடித்து விட்டது"என்றார் எம்.டி.

"அவனின் துஷ்ட எண்ணம் அவனுக்கு பதில் தந்தது,அதில் நீங்கள் வருத்தப் பட ஒன்றுமில்லை"என்றார் குருஜி.

திடீர் என்று எங்கள் தலைக்கு மேல் பலவித வண்ணங்களில் பாம்புகள் குறுக்கும் நெடுக்கும் பறக்க ஆரம்பித்தன்.

ஒவ்வொன்றும் ஒவ்வொரு சைசில்.

"பயப்படாதீர்கள் அவை எல்லாம் இறந்த பாம்புகளின் ஆன்மாக்கள்,நம்மை ஒன்றும் செய்யாது"என்றார்.

எல்லா பாம்பின் உடலில் இருந்தும் விளக்குகள் போல் வண்ணங்கள் மின்னி மின்னி மறைந்தன.

அப்பொழுது-

அத்தியாயம் நாற்பத்து இரண்டு

குருஜி 'திடீர்'என்று எழுந்தார்.

அவர் கண்கள் அனல் போன்று சிவப்பாய் ஆனது.

எங்கள் முன் அது நடந்தது.

எந்த விஞ்ஞானத்தாலும் விவரிக்க முடியாத எந்த விஞ்ஞான வரையறைக்குள்ளும் வராத அந்த நிகழ்வு.

குருஜி உயரம் அதிகமாகிக் கொண்டே போனது.

அவர் இருந்தது அகத்தியர் சைசில்.

அவர் வாமன அவதாரம் போல மேலே எழும்பிக் கொண்டே போனார்.

நாங்கள் அதிர்ந்து பயந்து பார்த்துக் கொண்டே இருந்தோம்.

உயர்ந்து கொண்டே போனவர் கைகள் நீண்டு காட்டிற்குள் சென்றது.

எங்கள் முன்னால் தொபில் என்று விழுந்தான் அவன்.

அவர் மீண்டும் பழைய நிலைக்கு வந்தார்.

எங்கள் முன்னால் இருந்தவன் தமிழ் காரன் போல் தான் இருந்தான்.

ஆனால் மலையாளி.

அவனைப் பார்த்ததும் அதிர்ந்தது போனது ஜெர்மனிக்காரர்தான்.

குருஜி சிரித்தார்.

எம்.டி.யைப் பார்த்தார்.

"இவனை மிருகம் அடிச்சுடுச்சுன்னு பொய் சொல்லிட்டு நம்ம கூட வந்து ஒட்டிக்கிட்ட இந்த ஜெர்மன் ஆசாமியோட திட்டம் இதுதான்,இவன் நம்பளை தொடர்ந்து வந்துட்டு இருக்கான்,நாம் சரியாய் சர்ப்பக் காவுக்குள்ளே நுழைஞ்சதும்,இவன் உள்ளே நுழஞ்சு ஜெர்மனி ஆசாமியோட நம்பளை அட்டாக் பண்றதுதான் ஐடியா"

எம்.டி.ஜெர்மனிக்காரரைப் பார்த்தார்.

அவர் கண்களில் பீதி.

"இல்லே,இவன் யார்ன்னே எனக்குத் தெரியாது"

நான் குருஜியைப் பார்த்தேன்.

அவர் அவனைப் பார்த்தார்.

"அவன் அடப்பாவி சர்ப்பக்காவுக்கு போனதும் எல்லோரையும் தீர்த்துட்டு வைரத்தை கொள்ளையடிப்போம்,உனக்கு நூறு கோடி தர்றேன்னு சொல்லிட்டு இப்ப யாருன்னே தெரியாதுன்னு சொல்றியா?"என்று ஜெர்மனிக்காரன் மேல் பாய,அவன் நகர அந்த விபரீதம் நடந்தது.

மின்னல் போல எங்கிருந்தோ பாய்ந்த சிறுத்தை ஒன்று நொடிப்பொழுதில் அவனைக் கவ்வி காட்டிற்குள் பாய்ந்தது.

இப்பொழுதுதான் அவனின் நிஜ அலறல் கேட்டது.

குருஜி,"அவனோட விதி இங்கதான் முடியணும்ன்னு இருக்கு"என்றார்.

ஜெர்மனி ஆசாமி உறைந்து நின்று கொண்டிருக்க-

"மனிதனின் ஆசைகள் அவனை வாழ வைக்கும்,பேராசை அழிக்கும்"என்றார்.

ஜெர்மனி ஆசாமி கையில் முளைத்தது துப்பாக்கி.

புவனேஸ்வரியை வளைத்துப் பிடித்து அவள் கழுத்தில் துப்பாக்கியின் முனையைப் பதித்தான்.

"குருஜி என்னை போக விட்டுடங்க,உங்க கூட தொடர்ந்து நான் வரலை,என்னோட ஹெலிகாப்டரை எப்படி வரவழைக்கறதுன்னு எனக்குத் தெரியும்"என்று கத்த ஆரம்பித்தான்.

'நாகராஜா'என்று உரத்தக் குரலில் சொன்ன குருஜி,"உன் ஆயுளும் முடியப் போகிறது,அவளை உன்னால் ஒன்றும் செய்ய முடியாது,உன் விதி சர்ப்பக் காவில் முடிய வேண்டும் என்றுதான் இருந்தது,உன் விதியை நீ மாற்றி எழுத வைத்து விட்டாய்,வேறு வழியில்லை,சத்தியத்தையும் இவர்களையும் காக்க நான் இதை செய்து தான் ஆக வேண்டும்"என்று மெல்ல தன்னுடைய கண்களை மெல்ல மூட நாங்கள் எல்லோரும் ஜெர்மனிக்காரனையே பார்த்துக் கொண்டிருந்தோம்.

என்ன நடக்கிறது என்படை நாங்கள் உணரும் முன்னர் ஜெர்மனிக்காரன் புவனேஸ்வரியை தன் பிடியில் இருந்து தள்ளி விட்டு தன் துப்பாக்கியை தன் நெற்றிப் பொட்டில் வைத்து டிரிக்கரை அழுத்தினான.

'படீர்'என்ற சப்தத்துடன் வெடித்த துப்பாக்கியில் இருந்து புறப்பட்டத் தோட்டா அவன் நெற்றிப் பொட்டில் புகுந்து ரத்தம் சிதறியது.

சரிந்தவன் பள்ளத்தின் பக்கம் அப்படியே சரிந்தான்.

குருஜி மெல்ல கண்களைத் திறந்தார்.

எங்களைப் பார்த்து மெல்ல சிரித்தார்.

"பயப்படாதீர்கள்,நாம் கொஞ்ச தூரம் சென்றிருந்தால் ஜெர்மனிக்காரன் தன் திட்டத்தை நிறைவேத்தியிருப்பான்,அதனால் தான் இருவர் வாழ்வும் இங்கே முடிய வேண்டிய கட்டாயத்துக்கு வந்தது"என்றார்.

"நாம் தொடர்ந்து செல்லலாமா?"என்று கேட்டார் சிவஞானம்.

கண்ணன் குருஜி உயர்ந்து கொண்டே போனதில் ஆரம்பித்து கடைசியில் ஜெர்மனிக்காரன் தன்னைத்தானே சுட்டுக் கொண்டது வரை கேமிராவில் பிடித்திருந்தான்.

"தொடரலாம்,தொடர்ந்து மூன்று மணி நேரம் நடக்கலாம்,அதன் பின் சிறு ஓய்வு,அதன் பின் கொஞ்சம் நடந்தால் சர்ப்பக் காவை அடைந்து விடலாம்"என்றார்.

அப்பொழுது அந்த வாசனை எங்கிருந்தோ வந்தது.

நாகலிங்க பூவின் மனம்.

மெல்ல நடக்க ஆரம்பித்தோம்.

நடந்து கொண்டே,"உங்கள் எல்லோருக்கும் அந்த மணம் வருகிறதா?"என்று கேட்டேன்

"ஒரு வினோத பூவின் மணம் வருகிறது,அது மனதை மயக்குவதாக உள்ளது,ஆனால் என்ன மணம் என்று தெரியவில்லை"என்றாள் புவனேஸ்வரி.

குருஜி,"உங்களுக்கு எல்லாம் தெரியாதது முதலில் லதாவிற்கு தெரிந்து விடும்,அதுதான் அவளின் சக்தி"என்றார்.

"ஆமாம் அது நாகலிங்க பூவின் மணம்,இது ஏன் இவ்வளவு அடர்த்தியாக அடிக்கிறது என்று தெரியவில்லை"என்றேன்

"நாம் இப்பொழுது சர்ப்பக் காவுக்கு முன்னாலே உள்ள நாக மண்டலத்தினை அடைந்து விட்டோம்.அதை கடந்து தான் போய் கொண்டிருக்கிறோம்,நம்மை சுற்றி ஆயிரக்கணக்கான நாகப்பாம்புகள் வலம் வந்து கொண்டிருக்கின்றன,இந்த நாகத் தண்டம் நம் கையில் இருக்கும் வரை எதுவும் நம்மை ஒன்றும் செய்யாது,பயப்படாமல் இரண்டு பக்கமும்

பார்க்காமல் நடந்து சென்று கொண்டே இருங்கள்"என்றார் குருஜி.

அவர் சொல்லி ஒரு வினாடி கூட கடந்திருக்காது.

இருபுறம் இருந்தும் மணம் இன்னும் வீரியம் ஆகிக் கொண்டே போனது.

"அப்படியே ஆடாமல் அசையாமல் எந்த வித பயமும் இல்லாமல் நில்லுங்கள்"என்றார் குருஜி.

நின்றோம்.

பக்கவாட்டில் இருந்து 'கொச கொச'வென்று நீள நீளமாய் நாகப்பாம்புகள் தரையில் ஊர்ந்து எங்களுடே புகுந்து கடந்தன.

கால்கள் மேல ஏறிப் போகும் 'சர சர'வென்று ஏறி இறங்கி சர்வ சாதாரணமாய் கடந்ததைப் பார்த்தேன்.

அணைத்தும் கடந்தன.

"தொடர்ந்து நடங்கள்"என்றார் குருஜி.

"கண்ணன்,இத்தனை நாகப்பாம்புகளை ஒரே இடத்தில் நான் பார்த்ததே இல்லை"என்றான் கண்ணன்.

சிவஞானம்,"நாங்களும் தான் பார்த்தது இல்லை"என்றார்.

குருஜி என்னைப் பார்த்தார்.

அவர் பார்வையின் அர்த்தம் என்னவென்று எனக்கு மட்டும் புரிந்தது.

"இதையெல்லாம் ஷூட் பண்ணலையா?"என்று எம்.டி.கண்ணனை கேட்டார்.

"நீங்க வேற நானே அரண்டு போய் நின்னுட்டேன்,என்னதை ஷூட் பண்றது?"

குருஜி,"சர்ப்பக் காவில் நமக்கு படம் பிடிக்க நிறைய காட்சிகள் பாக்கியிருக்கிறது"என்றார்.

திடீர் என்று எம்.டியின் கைப்பேசி ஒலித்தது.

"இது என்ன திடீர் என்று சிக்னல் கிடைக்கிறது'"என்று ஆச்சர்யத்துடன் எடுத்துப் பேசினார்.

"யா,ஆமாம்,நெருங்கிட்டோம்,இப்பத்தான் சிக்னல் கிடைச்சது,இப்ப இது வரைக்கும் நடந்தது எல்லாம் லதா சொல்ல சொல்ல ரிகார்ட் பண்ணி அனுப்பறோம்"என்றார்.

"பக்கத்துல ஃபாரஸ்ட் ரேஞ்சர் ஆபிஸ் ஒண்ணு இருக்கு,அங்கே டெலிபோன் டவர் வச்சிருப்பாங்க"என்றார் குருஜி.

புவனேஸ்வரி எம்.டி.யிடம் இருந்து லேப் டாப்பை வாங்கி கேமிராவில் எடுத்திருந்தது எல்லாவற்றையும் ட்ரான்ஸ்ஃபர் செய்து அனுப்பினாள்.

குருஜி வாய் விட்டு சிரித்தார்.

"கண்ணா நீ என்னையும் சேர்த்து ஷூட் பண்ண இல்லே?"என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

"ஆமாம்"

"இப்ப நீங்க அனுப்பனதை அப்படியே ரீ வைண்ட் பண்ணி பாருங்க"என்றார்.

கண்ணன் லேப் டாப்பில் ஏற்றி அனுப்பியதை ரீ வைண்ட் செய்து பார்க்க-

குருஜியின் உருவத்திற்கு பதில் வெள்ளை பனியாக ஒரு உருவம் உயர்வதும் பின்னார் குறுகுவதும் அதுவே பெரியத் தோற்றமாக இருப்பதும் அதன் பனி கையினால் அந்த கேரளத்து ஆசாமியை 'தொப்'பென்று வீசுவதும் தெரிந்தது.

எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை.

"என்ன குருஜி கடைசி வரைக்கும் உங்களை கேமிராவிற்குள் பிடிக்கவே முடியாதா?"என்று கேட்டேன்.

"சர்ப்பக் காவில் தேவை ஏற்படலாம்"என்றார் குருஜி.

பேசிக் கொண்டே வெகு தூரம் வந்து விட்டோம்.

"இங்கே ஓய்வு எடுப்போம்"என்றார் குருஜி.

அப்பொழுதுதான் அந்த வினோத ஒலி கேட்டது.

நாங்கள் பயத்துடன் குருஜியைப் பார்த்தோம்.

அத்தியாயம் நாற்பத்து மூன்று

நாங்கள் திகிலுடன் குருஜியை பார்த்து கொண்டிருந்தோம்.

"பயம் வேண்டாம்,அது இறந்த மிருகங்களின் ஓசை,சர்ப்பக்காவுக்குள் நம்ம செல்ல விடாது அச்சுறுத்தும் படலம் ஆரம்பம்,இதையெல்லாம் கடந்து

போய் கொண்டே இருக்க வேண்டும்,மேலும் இதுவரை சர்ப்பக் காவுக்கு வந்து திரும்பாது இறந்தவர்களின் ஆன்மாவும் இங்கே சுற்றிக் கொண்டிருக்கும்,அவை பலகீனமான மனிதர்களின் ஆன்மாவுக்குள் நுழைந்து விடும் அபாயம் இருக்கிறது,நீங்கள் எந்த பயமும் இல்லாமல் எந்த தயக்கமும் இல்லாமல் இருங்கள்.நாளை இரவுக்குள் நாம் சர்ப்பக்காவை நெருங்கி விடுவோம்,பயம் வேண்டாம்"என்றார்.

எம்.எடி.,"இப்பொழுது ஓய்வு எடுக்கப் போகிறோமா,இல்லையா?"

"சிறிது நேரம் ஓய்வெடுபோம்,பின்னர் கிளம்பி விடுவோம்'என்றார்.

முன்னால் நீண்ட காடு.

ஒற்றை வழி.

ஒரு புறம் பள்ளத்தாக்கு.

இன்னொரு புறம் கொஞ்சம் சமவெளி இருந்தது.

வெளிச்சம் இருந்தது.

குருஜி,"அங்கே போய் உட்கார்வோம்"என்றார்.

இன்னமும் எனக்கு அந்த ஜெர்மனிக்காரன் தன்னைத் தானே சுட்டுக் கொண்டு இறந்தது மனக்கண் முன்னால் தோன்றிக் கொண்டே இருந்தது.

தரை 'சில்'லென்று இருந்தது.

"ஒரு எச்சரிக்கை"என்றார் குருஜி.

எல்லோரும் திரும்பி அவரைப் பார்த்தோம்.

"அடுத்து நம் பயணம் தொடரும் போது,பாதை குறுகலாகத் தான் இருக்கும்,ஒருவரை ஒருவர் தொடர்ந்துதான் செல்ல வேண்டியிருக்கும்,நமக்கு அறிமுகமான குரலிலேயே யாராவதுஅ ழைப்பது போல் இருந்தால் திரும்பிப் பார்க்காதீர்கள்,அது உங்களின் ஆன்மாவில் நுழையத் துடிக்கும் துர் ஆன்மாக்கள்,இங்கே சர்ப்பக் காவில் தீய எண்ணத்துடன் நுழைய முயன்று இறந்த மனிதர்களின் ஆன்மாக்கள்,அவை உடல் தேடி அலைந்து கொண்டிருக்கும்,மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்,உங்களுக்கு பின்னால் கடைசியில் நான்

வருவேன்,முதலில் கண்ணன் செல்ல வேண்டும்,என் குரலை மட்டும் நீங்கள் கேட்டால் திரும்பிப் பார்க்கலாம்"என்றார்.

ஒரே குரலில்'சரி'என்றோம்.

அவரவர் தோள் பையிலிருந்து சில பிஸ்கட்டுகளை எடுத்து தின்றோம்.

காற்று 'சிலு சிலு' வென்று வீச ஆரம்பித்திருந்தது.

காற்றில் ஒரு வித மூலிகை வாசம் வீச ஆரம்பித்தது.

அதனுடன் சேர்ந்து நாகலிங்கப் பூவின் வாசமும் காட்டமாக வீசியது.

எனக்கு அந்த வாசனை மிகவும் பிடிக்கும்.

மனதை சுண்டியிழுக்கும் வாசம்.

குருஜி எழுந்தார்.

நாங்களும் எழுந்தோம்.

முதலிலேயே அவர் சொன்ன படி கண்ணன் காமிராவுடன் முதலில் நடக்க ஆரம்பித்தான்.

பின்னால் வரிசையாய் நாங்கள் தொடர்ந்தோம்.

குருஜிதான் கடைசியில்.

அவருக்கு முன்னால் நான் நடந்து கொண்டிருந்தேன்.

கொஞ்ச நேரம் நடந்திருப்போம்.

'லதா'என்று யாரோ அழைப்பது என் காதுகளில் விழுந்தது.

ஒரு ஆணின் குரல்.

நான் சின்ன உதறலுடன் நடந்தேன்.

குருஜி,"எதையும் காதில் வாங்காமல் நடந்து கொண்டே இரு"என்றார் எனது காதுகளில் மட்டும் விழுகிறார் போல்.

நான் அவர் சொன்னபடி நடக்க ஆரம்பித்தேன்.

மீண்டும் மீண்டும் அதே குரல்.

என்னை அழைக்க ஆரம்பித்தது.

நான் கொஞ்சமும் அசராமல் நடந்து கொண்டிருந்தேன்.

திரும்ப திரும்ப அழைக்கும் போது அனிச்சையாய் கூட திரும்பி விடக் கூடாது என்கிற வேகத்தில் நடந்து கொண்டிருந்தேன்.

கூப்பிட கூப்பிட அந்த குரலுக்கு சொந்தமானவர் யார் என்று தெரிந்து விட்டது.

அந்த குரலுக்கு சொந்தக்காரரர் யார் என்று குருஜிக்கும் தெரிந்திருக்கும்.

நான் சொல்லாமலே அவர் அறிந்து கொண்டிருப்பார் என்றே தோன்றியது.

அவருக்கு எல்லாமே தெரியும்.

"ஆமாம் அது உன் தந்தையின் குரல் தான்,இருபது வருடத்துக்கு முன்னால் இங்கே தான் அவரின் மரணம் நிகழ்ந்தது,அவர் உடலை இங்கே பாம்புகள் கொத்தித் கிழித்தன,நீ வர வேண்டிய இடத்திற்கு தவறான நோக்கத்துடன் அவர் வந்ததால்,நீ உண்மையில் யார் என்று கடைசியில் அனைவரும் உணரும் போது அதிர்ந்து தான் போவார்கள்"என்றார் குருஜி.

இதுவும் என் காதுகளுக்கு மட்டுமே விழுகிறார் போல்.

உண்மைதான்.

எனக்கு கண்களில் கொஞ்சம் நீர் கட்டியது.

என் தந்தையின் குரல் இப்பொழுது மிகத் தெளிவாக கேட்டது.

'லதா லதா'என்று அவர் கூப்பிட்டது மனதினை உருக்குவதாக இருந்தது.

நான் குருஜியின் வார்த்தைகளுக்கு கட்டுப்பட்டு முன்னால் சென்று கொண்டே இருந்தேன்.

திடீர் என்று வானம் இருண்டது.

குருஜி,"யாரும் அசைய வேண்டாம்,அப்படியே நில்லுங்கள்,எந்த பயமும் வேண்டாம்,உங்கள் மீது அவை இறங்கும்,தரையில் ஊர்ந்து சென்று விடும்"என்றார்.

'என்ன சொல்கிறார் குருஜி'என்று மனதில் தோன்றியது.

அவரே பதிலும் சொன்னார்.

"இது நமக்கு முதல் பரிட்சை"என்றார்.

அப்பொழுதுதான்.

வானத்திலிருந்து கொத்து கொத்தாய் பாம்புகள் வெவ்வறு நீள அகலங்களில் தலை மீது 'பொத் பொத்'தென்று மேலே விழுந்தன.

உடல் முழுவதும் ஊர்ந்து கீழே சென்றன.
எனக்கு முன்னால் நின்றிருந்தவர்களைப் பார்த்தேன்.
என் மீது விழுந்தது போலவே அவர்கள் மீதும்.
அனைவரும் அப்படியே நின்றோம் ஆடாமல் அசையாமல்.
எல்லாம் உயிருடன் இருந்த பாம்புகள்.
தரை முழுக்க அவை ஊர்ந்து சென்றதும் பெருமூச்சு விட்டோம்.
குருஜி,"தொடர்ந்து நடங்கள்"என்றார்.
எனக்கு முன்னால் எம்.டி.நடந்து கொண்டிருந்தார்.
எம்.டி.,"சர்ப்பக் காவை நெருங்கும் போதே இப்படி இருக்குன்னா பக்கத்துல போக போக எப்படியிருக்கும்னு யோசிச்சுப் பார்த்தாலே திகிலா இருக்கு"என்றார் பயம் கலந்த குரலில்.
"எந்த பயமும் வேண்டாம்,தயக்கமில்லாமல் முன்னே பார்த்து நடங்கள்,கொஞ்சம் கவனம் சிதறினாலும் பள்ளத்தில் விழுந்து விடுவீர்கள்'என்றார் குருஜி.
நடந்து கொண்டே இருந்தோம்.
மெல்ல இருள் கவ்வ ஆரம்பித்தது.
"வேகமாய் பார்த்து நடங்கள்,இன்னும் கொஞ்ச தூரத்தில் பெரிய சமவெளி ஒன்று வருகிறது,அங்கே தங்கி காலையில் பயணத்தை தொடர்வோம்"என்றார் குருஜி.
இருள் வெளிச்சத்தை தின்ன ஆரம்பித்திருந்தது.
'அதோ பாருங்கள்'என்று கையை காட்டினார் குருஜி.
சமவெளி ஒன்று வந்தது.
அந்த சமவெளியை நோக்கி நடக்க ஆரம்பித்தோம்.
சமவெளியை அடைந்ததும் கண்ணனும் மற்றவர்களும் சேர்ந்து இரண்டு டெண்டுகளை அமைக்கத் தொடங்கினர்.
வானில் மின் மினி பூச்சி போல்.
நான் குருஜியைப் பார்த்தேன்.
"என்ன குருஜி அது"
"பறக்கும் பாம்புகள்"என்றார்.

கண்ணன் அவர் சொன்னதை கேட்டிருப்பான் போல.
ஆர்வமாய் கேமிராவை எடுத்தான்.
"வேண்டாம்"என்று தடுத்தார்.
"மிகவும் ஆபத்தான வேலை,உன் கேமிரா இயங்க ஆரம்பித்தாலே அவை கீழே இறங்கி விடும்,இதையெல்லாம் எடுக்க வேண்டாம்"என்றார்.
'சரி சரி'என்று கேமிராவை கூடாரத்துக்குள் வைத்தான்.
எனக்கு திடீர் என்று பசித்தது.
எனது தோள் பையை எடுத்தேன்.
உள்ளே பார்க்க இரண்டு ஜூஸ் டப்பாவும்,பேரிச்சம் பழமும்,உலர்ந்த பருப்புகள் அடங்கிய டப்பாவும் இருந்தது.
உலர்ந்த பருப்புகளை கொஞ்சம் தின்று விட்டு ஒரு ஜூஸை குடித்தேன்.
புவனேஸ்வரி தன் பையில் இருந்து ஜுசை மட்டும் எடுத்து குடித்தாள்.
அவள் ஏதோ தீவர் யோசனையில் இருந்தாள் என்பதை அவள் முகமே சொன்னது.
"என்ன யோசனை புவன்,அந்த ஜெர்மனிக்காரன் உன் கழுத்தை வளைத்துப் பிடித்து துப்பாக்கியை உன் மீது வைத்ததை இன்னமும் நினைத்து கொண்டிருக்கிறயா?"என்று கேட்டேன்.
"ஆமாம் அந்த திகிலான நிமிடங்களை என்னால் மறக்கவே முடியவில்லை"என்றாள்.
"நமது தொலைக்காட்சிக்கே திருப்பத்தை தரப் போகும் தொடரில் நாமெல்லாம் இருக்கிறோமே என்று சந்தோஷப் படு"என்றேன்.
"சரிதான்,கடைசியில் திரும்ப போகும் வரை எதுவும் உறுதியில்லையே"
"என்ன திடீர் என்று அவ நம்பிக்கை வார்த்தைகள்,நீ பத்திரமாய் திரும்புவாய்"என்றேன்.
"நீன்னு சொல்றியே லதா"என்றால் திகிலுடன் புவனேஸ்வரி.

அத்தியாயம் நாற்பத்து நாலு

புவனேஸ்வரி கேட்டதும் நான் சிரித்தேன்.
"ஒரு பேச்சுக்கு சொன்னேன்,உடனே பயந்துட்டியா புவனேஸ்வரி?"என்று கேட்டேன் அவளை உற்றுப் பார்த்து.
"இல்லே நீ சொன்ன தொணி அப்படி இருந்தது"என்றாள் புவனேஸ்வரி.
நான் சிரித்தேன்.
"எல்லோரும் பத்திரமாக போவோம்,நிம்மதியாய் உறங்கு"என்றேன்.
அவள் ஒன்றும் சொல்லாமல் விழிகளைத் திறந்தே வைத்திருந்தாள்.
அவளுக்குள் ஏதோ ஒரு சொல்லாவொண்ணா பயம் ஏற்பட்டிருக்க வேண்டும்.
வெளியில் பார்த்தேன்.
முன் இரவுகளில் நடந்தது போல் குருஜி ஒரு மரத்தடியே சாய்ந்து அமர்ந்திருந்தார்.
அவர் தோற்றமே ஒரு காவல் தெய்வம் எங்களை காக்க உட்கார்ந்திருப்பது போல் இருந்தது.
காட்டிற்கே உள்ள ஒரு அமைதியும் அந்த அமைதியின் ஊடே நடுவில் வினோத ஓசைகளும் தூரத்தில் கேட்டுக் கொண்டிருந்தன.
நான் உறக்கம் வராமல் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தேன்.
சர்ப்பக் காவில் நடக்கப் போகும் விஷயங்கள் பல என்னவென்று எனக்கு ஒரு கோடாக திப்பியாக தெரிந்தன.
எனக்கே இவ்வளவு தெரிகிறது என்றால் குருஜிக்கு எவ்வளவு தெரிந்திருக்கும்.
இருந்தாலும அவர் அமைதியாய் இருப்பது ஆச்சர்யத்தை அளித்தது.
புறப்பட்ட போது இருந்தவர்கள் நடுவில் இறந்தவர்கள் என எல்லோர் முகங்களையும் மனதில் ஓட விட்டேன்.
அதெல்லாம் திகிலாகத்தான் தோன்றின.
சர்ப்பக் காவில் எத்தனை பேர் காவாக போகிறார்கள் என்பதும் ஒரு பயத்தினை ஏற்படுத்தியது.

ஈரேழு லோகங்களிலும் முக்கியமானது நாக லோகம்.
இங்கே இந்த சர்ப்பக் காவு ஒரு தனி லோகம் என்பதே பல விஞ்ஞானிகளுக்கும் புரிவதில்லை.
மெல்ல கண்களை மூடினேன்.
தூக்கம் வரவில்லை.
இருந்தாலும் கண்களை மூடாமல் இருக்க முடியவில்லை.
அவ்வளவு அயர்ச்சி உடலில் இருந்தது.
மறு படியும் கண்களைத் திறந்து வெளியில் பார்த்தேன்.
குருஜி அதே இடத்தில் அமர்ந்திருந்தார்.
மீண்டும் கண்களை மூடினேன்.
தூக்கம் வரவில்லை.
முழுமையான தூக்கமும் வராமல் அரைத்தூக்கத்திலேயே புரண்டு கொண்டிருந்தேன்.
என் தலைக்கு பின்னால் 'உஸ்'என்று சப்தம்.
பயம்.
எழுந்திருக்க முடியாமல் மெல்ல கண்களை திறந்தேன்.
பெரிய பாம்பு ஒன்று படம் எடுத்து நின்றிருந்தது.
பயம் இல்லா விட்டாலும் திகில் லேசாய் எட்டிப் பார்த்தது.
உடலை தூளியும் அசைக்காமல் குருஜியைப் பார்த்தேன்.
குருஜி அங்கிருந்து மெல்ல எழுந்தார்.
டெண்டுக்கு கொஞ்ச தூரம் முன்னால் நின்று 'உன் லோகத்திற்கு வந்திருக்கிறாய்,அது உன்னை காக்க வந்திருக்கிறது"என்றார்.
எனக்கு புரிந்தும் புரியாமல் இருந்தது.
"இனி அதுவே உன் அரண்,உன்னைத் தொடர்ந்து வரும்"என்று சொல்லி விட்டு மீண்டும் அந்த மரத்தடியில் போய் உட்கார்ந்து கொண்டார்.
நான் எந்த பயமும் இல்லாமல் கண்களை மூடிக் கொண்டேன்.
பின்னால் படம் எடுத்து நின்றிருந்த பாம்பின் வாசமும்,அதன் ஹிஸ் சப்தமும் என்னைத்

தாலாட்டுவது போலிருந்தது.
உறங்கிப் போனேன்.
மீண்டும் கண் விழித்த போது-
புவனேஸ்வரி இன்னமும் உறங்கி கொண்டிருந்தாள்.
அவளின் முகம் சிரித்தபடியே இருந்தது.
மெல்ல அவளைத் தொட்டேன்.
'சில்'லென்று இருந்தது.
அப்பொழுதுதான் அவள் முகத்தினைப் பார்த்தேன்.
நீலம் பாவியிருந்தது.
எல்லோரும் வெளியில் நின்று கொண்டிருந்தார்கள்.
என்னையும் அறியாமல் 'குருஜி'என்று ஒரு குரல் கொடுத்தேன்.
அவர் நிதானமாய் வந்தார்.
புவனேஸ்வரியைப் பார்த்தார்.
"விதி முடிந்தது,நேற்று உன்னை கொல்லத் திட்டமிட்டிருந்தாள்,அவள் உன்னைக் கொல்லும் முன் உன்னை காக்க வந்திருந்த நாகம் அவளைக் கொத்தி விட்டது,அவளுடைய கூட்டாளி யார் என்பது சர்ப்பக் காவில் வெளிப்படும்"என்றார்.
அவர் எல்லோருக்கும் சொல்வது போல்தான் அதைச் சொன்னார்.
எல்லோர் முகத்திலும் திகில்.
கண்ணன் கேமிராவை எடுத்து புவனேஸ்வரியை படம் எடுத்தான்.
எம்.டி.,"அவள் தவறானவள் என்றாள் இவ்வளவு தூரம் வந்திருக்கவே முடியாதே,மற்றவர்களுக்கு நேர்ந்தது போல் ஏன் அவளுக்கு நிகழவில்லை"என்று குருஜியைப் பார்த்து கேட்டார்.
குருஜி சிரித்துக் கொண்டே,"அது அப்படியில்லை,ஒவ்வொருவரின் மனதில் துர்க்குணம் அவர்களின் திட்டம் செயல் பெறத் தொடங்கும் போது அவர்களையும் அறியாமல் அவர்கள் உடலில் உள்ள நெகடிவ் எனர்ஜி வெளிப்படும்,அந்த நேரத்தில் தான் அவர்களுக்கு விதிப்படி ஏதேனும் நிகழும்,மனித மனத்தின் துர் சிந்தனைகளே அவர்களை துர்

மரணத்திற்கு அழைத்து செல்கிறது,அவர்களே தங்களின் தீய எண்ணத்தை வெளிப்படுத்தி மரணத்தை அழைக்கிறார்கள் என்றே கொள்ளலாம்,இது ஒரு கடைசி எச்சரிக்கையாகவும் எடுத்துக் கொள்ளலாம்,நாம் சர்ப்பக் காவை அடையப் போகிறோம்,அதற்கு முன்னால் தங்களின் மனதை சுத்தப் படுத்திக் கொள்ள இறைவன் ஒரு வாய்ப்பளிக்கிறான் அவ்வளவே"என்றார்.

அனைவரும் அப்படியே குருஜியையே பார்த்து கொண்டிருந்தார்கள்.

"நாம் கிளம்பும் முன் புவனேஸ்வரியை புதைத்து விட்டுச் செல்வோம்"என்றார்.

குழி ஒன்றைப் பறித்து அவளின் உடலை அதில் இறக்க கண்ணன் கேமிராவில் புகுத்திக் கொண்டேன்.

குழி வெட்டும் போதும் அவள் உடலை குழியில் இறக்கும் போதும் எல்லோர் விழியும் கலங்கியதைப் பார்த்தேன்.

மெல்ல கிளம்ப தொடங்கினோம்.

முதல் நாள் போலேவே கண்ணன் முதலில் சொல்ல ஒருவர் பின் ஒருவராக தொடர்ந்தோம்.

கடைசியில் குருஜி.

அவருக்கு முன்னால் நான்.

எனக்கு முன்னால் எம்.டி.

மெல்ல சூரியக் கதிர்கள் எட்டிப் பார்த்தாலும் வெளிச்சம் கொஞ்சமாய் தான் அடர்ந்த காட்டில் இறங்கிக் கொண்டிருந்தது.

நடந்து கொண்டே இருந்தோம்.

திடீர் என்று எங்களின் தலைக்கு மேலே மேகம் போல் தோன்றியது.

நான் மெல்ல மேலே பார்த்தேன்.

சின்ன சின்ன பாம்புகள் இண்டு இடுக்கு விடாமல் அடர்த்தியாய் நகர்ந்து கொண்டிருந்தன.

"எதையும் பார்க்காமல் அப்படியே நடந்து கொண்டே இருங்கள்"என்றார் குருஜி.

அவர் சொன்ன படியே நடக்க ஆரம்பித்தோம்.

நடக்க நடக்க எனக்கு சர்ப்பக் காவை நெருங்கி விட்டோம் என்று உள்ளுணர்வு சொன்னது.

அடர்ந்த காடு.

நாகலிங்கப் பூவின் வாசமும் பயத்தம் பருப்பின் வீச்சமும் மூக்கை முட்டி திணற வைத்தது.

குருஜி ஏதோ மந்திரத்தை உச்சரித்தவாறே வந்தார்.

நான் எதிர்பார்த்த அது நிகழ ஆரம்பித்தது.

பாதையில் 'கொச கொச' வென்று பாம்புகள்,நாங்கள் பாதம் வைக்கும் இடங்களில் விலகின.

நடக்க நடக்க விலகி பாதையை விட்டு மீண்டும் சேர்ந்து கொண்டன.

எனக்கு முன்னால் சென்றவர்களின் திகில் மன நிலையை அவர்களின் உடல் மொழி எனக்கு காட்டியது.

அப்படியே நடந்து கொண்டிருந்தோம்.

எம்.டி.க்கு முன்னால் சிவஞானம் சார் நடந்து கொண்டிருந்தார்.

கொஞ்ச தூரம் நடந்திருப்போம்.

அடர்த்தியான காட்டின் ஒற்றை வழிப்பாதை மறைந்து ஒரு ஒரு மிகப் பெரிய வெற்றிடம் வந்தது.

அந்த வெற்றிடத்திற்கு முன்னால் இரண்டு பாதைகள் பிரிந்தன.

எல்லோரும் நின்றார்கள்.

கண்ணன் உரத்தக் குரலில்,"குருஜி எந்தப் பக்கம் திரும்பிச் செல்ல வேண்டும்"என்று மட்டும் கேட்டான்.

திரும்பிப் பார்க்க கூடாது என்று முதல் குருஜி சொன்னதை மனதில் ஏற்றியிருந்ததால் பின்னால் திரும்பாமலேயே அந்த கேள்வியைக் கேட்டான்.

"அப்படியே நில்லுங்கள் நாம் வர வேண்டிய இடத்திற்கு வந்து விட்டோம்"என்றார் குருஜி.

"இந்த பொட்டல் வெளியா சர்ப்பக் காவு"என்று கேட்டார் சிவஞானம்.

"ஆம்"என்றேன் நான்.

அத்தியாயம் நாற்பத்து ஐந்து

'ஆம்'என்று நான் சொல்லியதும் அனைவரும் திகைப்புடன் பார்த்தனர்.

எல்லார் அறிந்தவராய் குருஜி மௌனமாய் இருந்தார்.

கண்ணன் அந்த பொட்டல் வெளியை படமெடுத்துக் கொண்டிருந்தான்.

நான் தரையில் அமர்ந்தேன்.

நான் சம்மணம் இட்டு அமர்ந்திருந்தேன்.

எனது வாயில் இருந்து நான் எதிர்பாராமலேயே அந்த மந்திரங்கள் வெளியில் வந்து விழுந்தன.

என் குல ராணியே

ஏகாந்த வாசியே

நாக ராணியே

என்று ஆரம்பித்து 'படபட'வென்று உச்சரிக்க அந்த பொட்டல் வெளியில் இருந்து 'குபுகுபு'வென்று தண்ணீர் குமிழ்கள் போலத் தோன்றி பாம்புகள் மேலே வர ஆரம்பித்தன.

மேலே அந்தரத்திலும் பாம்புகள் சூழ்ந்தன.

பொட்டல் வெளியில் இருந்து வெளியில் வந்த பாம்புகள் கொசகொசவென்று எங்களை சூழ்ந்தன.

'யாரும் பயப்பட வேண்டாம்'என்றார் குருஜி.

ஆனால் எல்லோரும் நடுங்கிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களின் உடல்களில் பாம்புகள் ஏறி இறங்கின.

ஒரு சோதனை போடுவது அவை உடல் முழுக்க ஊர்ந்து இறங்கின.

"கோவில் எங்கே இருக்கிறது,ஐந்து தலை நாகம்?"என்று கேட்டார் எம்.டி.

நான் கண்களை மூடி மந்திரங்களை உச்சரிக்க மாயக் கதவு போல் பொட்டல் வெளி இரண்டாக பிளந்தது.

படித்துறைப் போல நாலா பக்கமும் படிகள் இறங்கின.

நான் எழுந்தேன்.

குருஜி முன்னால் இறங்கினார்.

கீழேயும் தரை முழுக்க பாம்புகள்.

நாங்கள் நடக்க நடக்க நகர்ந்து வழி விட்டன.

கண்ணன் அவற்றையெல்லாம் படம் எடுத்துக் கொண்டே இறங்கினான்.
உள்ளே இறங்கியதும் அது கண்ணில் பட்டது.
பழைய சிதிலம் அடைந்த கோவில் ஒன்று.
கதவு பூட்டியே இருந்தது.
கோவில் வாசலில் ஒரு பெரிய அகல் விளக்கு எரிந்து கொண்டிருந்தது.
பக்கவாட்டில் ஒரு சிறிய அறை.
அங்கிருந்து ஒரு முனகல் குரல் கேட்டுக் கொண்டேயிருந்தது.
மெல்ல தன் கையில் இருந்த கேமிராவினுள் அனைத்தையும் பிடித்துக் கொண்டிருந்த கண்ணன் அந்த சிதிலம் அடைந்த கோவிலையும் அந்த அறையையும் படம் எடுத்துக் கொண்டிருந்தான்.
நான் அந்த அறையை நோக்கி நடக்க அதன் உள்ளிருந்து ஒரு குரல் 'வந்துட்டியா லதா?'என்றது.
மிகவும் முதிர்ந்த குரல்.
அத்தனை பேரும் அதிர்ச்சியோடு என்னைப் பார்த்தனர்.
நான் நடக்க தரையில் ஊர்ந்து கொண்டிருந்த பாம்புகள் தலைத் தூக்கிப்பார்த்து பக்கவாட்டில் நகர்ந்தன.
நான் அறையை அடைந்து வெளியில் நின்றேன்.
உள்ளிருந்து குரல்,"இன்னைக்கு அமாவாசை, எங்கே வராம போயிடுவியோன்னு இருந்தேன்"என்று வார்த்தைகள் தட்டுத் தடுமாறி வெளியில் வந்து விழுந்தன.
எல்லோருக்கும் கேட்டிருக்கும் அந்த குரல்.
அனைவரும் என்னையே பார்த்துக் கொண்டிருப்பதையும் என்னால் உணர முடிந்தது.
"நீ மட்டும் உள்ளே வா"என்றது குரல்.
மெல்ல உள்ளே சென்றேன்.
தரையோடு தரையாய் கிடந்தாள் அந்த மூதாட்டி.
உடலெல்லாம் கடும் சுருக்கங்கள்.
பெரிய விரல் போல சுருக்க தடிப்புகள்.

நான் கண்களில் நீர் வரப் பார்த்தேன்.

"அவங்களுக்கு எல்லாம் தெரியுமா,இங்கே என்ன நடக்கப் போகுதுன்னு?"இடுங்கிய கண்களில் கேட்டாள் மூதாட்டி.

"சொல்லலை"

"நல்லது,உட்கார்"

உட்கார்ந்தேன்.

மெல்ல எழுந்து உட்கார்ந்தாள் மூதாட்டி.

கால்களில் செதில் செதிலாக இருந்தன.

"நாகராஜாவுக்கு மிகுந்த மகிழ்ச்சியாய் இருக்கும்"

"புரிகிறது"என்றேன்.

என்னை மெல்ல தடவிக் கொடுத்தாள் அந்த மூதாட்டி.

தடவும் பொழுது எனது உடலில் ஏதோ உள்ளே பாய்ந்தது போல இருந்தது.

என் உடல் சிலிர்த்தது.

எனக்கு சொல்லவொண்ணா மகிழ்ச்சி.

உடலை முறுக்கிக் கொண்டேன்.

வெளியில் இருந்து எம்.டி.குரல் கொடுத்தார்.

"லதா ஆர் யூ ஆல் ரைட்"

"மானுட பயம்"என்றாள் முதியவள்.

"ஆமாம்"என்றேன்.

"பதில் சொல்லு"

"பர்ஃபெக்ட்லி ஆல்ரைட் சார்"என்றேன்.

எழுந்தேன்.

"வெளியில் அவர்களுடன் இரு,சூரியன் இறங்கட்டும் என்றாள்.

நான் 'சரி'என்றபடியே வெளியில் வந்தேன்.

கண்ணன் ஆர்வமாக,"உள்ளே இருக்கும் கிழவியை கேமிராவில் பதிவு செய்ய முடியாதா?"என்று கேட்டான்.

"இரவானதும் ஐந்து தலை நாகத்திற்கு உணவு வைக்க வருவார்கள்"என்றேன்.

கண்ணன் நான் சொன்னதும் சிதிலமடைந்த கோவிலை தனது கேமிராவினால் படம் எடுக்க ஆரம்பித்தான்.

மாலையில் என் விஷயத்தில் எல்லோருக்குமே ஒரு அதிர்ச்சி காத்திருக்கிறது என்பதை அவர்கள் இன்னும் உணரவில்லை என்றே எனக்கு தோன்றியது.

ஆனால் நான் நினைத்து முடித்த மறு வினாடி குருஜி என்னைப் பார்த்து சிரித்தார்.

நேரம் நகர்ந்து கொண்டேயிருந்தது.

படியில் அனைவரும் உட்கார்ந்து இருந்தார்கள்.

மெல்ல இருள் சூழ ஆரம்பித்தது.

நான் மற்றவர்களை பார்த்தேன்.

அவர்கள் எல்லோருடைய முகத்திலும் ஒரு வித திகில்.

கண்ணன் கேமிராவை தயாராய் வைத்திருந்தான்.

இருள் முழுவதும் கவ்வியது.

ஒருவர் முகம் ஒருவருக்கு தெரியாத இருட்டு.

கையில் சிறிய லாந்தர் விளக்குடன் கூன் முதுகுடன் வெளியில் வந்தாள் அந்த முதியவள்.

வலது கையில் ஒரு சிறு வெங்கலப் பாத்திரம்.

மெல்ல நகர்ந்தாள்.

இடையில் ஒரு சிறிய கழியை வைத்திருந்தாள்.

கொஞ்ச தூரம்தான் நடந்திருப்பாள்.

நாங்கள் உட்கார்ந்திருந்த பக்கம் திரும்பினா.

"லதா'என்றாள்.

நான் எழுந்து ஓடாத குறையாக வேகமாய் நடந்தேன்.

பக்கத்தில் சென்றதும் லாந்தர் விளக்கை என்னிடம் கொடுத்தாள்.

கண்ணன் கேமிராவினுள் இதையெல்லாம் பதிவு செய்து கொண்டிருப்பான்.

வெங்கலப் பாத்திரத்தையும் என்னிடம் கொடுத்தாள்.

பின் இடையில் இருந்த கழியை எடுத்து கொடுத்தாள்.

அதில் ஒரு சிறிய சாவி இருந்தது.

மெல்லிய குரலில்,"என்னுடைய கடமை இன்றோடு முடிகிறது,எனது சக்திகள் அனைத்தும் உனை சேரும்,இன்றிலிருந்து அனைத்தையும் காக்க வேண்டியது உன் கடமை"என்றாள்.

அவள் சொன்னது எல்லோர் காதிலும் விழுந்திருக்கும்.

எம்.டி."லதா"என்றார் அங்கிருந்து.
முதியவள் திடீர் என்று பாம்பாக மாறினாள்.
எல்லோரும் திகைத்தார்கள்.
கண்ணன் கேமிராவுடன் கொஞ்சம் முன்னால் வந்தான்.
அவன் அதிர்ந்து தான் போனான்.
பாம்பாக மாறிய முதியவள் சிறுத்துக் கொண்டே போனாள்.
குட்டிப் பாம்பாக மாறியவள் 'சரசர'வென்று என் மீது ஏறினாள்.
எனது மூக்கு வழியே உள்ளே நுழைந்தாள்.
அவள் உள்ளே பயணிப்பது எனக்கு தெரிந்தது.
என் உடல் ஒரு முறை குலுங்கியது.
ஒரு வினாடிதான்.
நான் மெல்ல அந்த கோவிலின் வாசலை திறந்தேன்.
அந்த ஒரு வினாடி எனக்கு பயம் இல்லை.
ஆனால் என் மூதாதையாரானா அந்த நாகம் ஒரு முறை என்னைப் பார்த்தது.
ஐந்து தலையும்,பத்து கண்களும் சீறிய நாக்குகளும் கண்ணனை நடுங்க வைத்திருக்கும்.
அவன் கேமிராவை ஸ்டாண்ட போட்டு வைத்து விட்டு ஓடினான்.
என்னைப் பார்த்து தன்னுடைய ஐந்து நாக்குகளையும் வெளியில் நீட்டிய நாகத்திடம் இருந்து நெருப்பு வந்தது.
என் உடல் மீது அது படும் போது சில்லிப்பாய் இருந்தது.
அது என்னை தலை சாய்த்துப் பார்த்தது.
அதன் வாய் திறக்க வெளியில் வந்து விழுந்தது அந்த பெரிய வைரக்கல்.
கோடானு கோடி சூரியனின் ஒளி போல காணகமே வெளிச்சத்தில்.
அதன் ஒளியில் கேமிராவின் லென்ஸ் படீர் என்று தெரித்தது.
நான் பாத்திரத்தை திறந்து அதன் உள் இருந்த உணவை வைத்தேன்.
அது ஒரு நாக்கை ஒரு சுழட்டு சுழட்டி வழித்தெடுத்தது.

நான் என் கைகளால் அதன் தலையை மெல்ல தொட்டேன்.

அது கொஞ்ச நேரத்தில் மீண்டும் அந்த வைரக்கல்லை முழுங்கியது.

நான் வெளியில் வந்தேன்.

கதவினை மூடிப் பூட்டினேன்.

காமிரா பக்கம் நின்று கொண்டிருந்த கண்ணன் பயத்துடன் என்னைப் பார்த்தான்.

நான்,"இந்த வினாடி வரை காமிராவில் பதிவாகியிருக்கிறது,லென்சே இல்லாமல்,நீங்கள் எல்லாம் கிளம்பலாம்"என்றேன்.

எம்.டி.ஓடி வந்தார்.

"லதா"என்றார்.

நான் குருஜியை பார்த்தேன்.

"இவர்களை எல்லை வரை கொண்டு விட வேண்டியது உங்கள் பொறுப்பு"என்றேன்.

"இன்னும் எழு வினாடிகளில் இந்த பகுதி மூடிக் கொள்ளும்,நீங்கள் கிளம்பலாம்"என்றேன்.

"அப்ப நீ?"என்றார்.

"நான் வந்ததேன் அந்த மூதாட்டிக்குப் பின் பொறுப்பை எடுக்கத்தான்"என்றேன்.

எம்.டி.நம்ப முடியாமல் குருஜியைப் பார்த்தார்.

குருஜி சிரித்துக் கொண்டே,"வாருங்கள்"என்றார்.

அவர்கள் படியில் ஏறிப் போக தடாரென்று மூடிக் கொண்டது மேலே.

நான் அந்த லாந்தர் விளக்குடன் எனது அறையை நோக்கி நடக்க ஆரம்பித்தேன்.

- முற்றும்